# சித்தியவான்

# அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணியர் திருக்கோயில்

# திருக்குட நன்னீராட்டு விழா மலர்





சர்வதாரி ஆண்டு வைகாசி 19ம் நாள்

(01-06-2008)

# சித்தியவான் அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணிய திருக்கோயில்
# திருக்குட நன்னீராட்டு விழா








மாண்புமிகு டத்தோ டாக்டர் எஸ். சுப்பிரமணியம் PJN KMN PJK
ம.இ.கா. தேசியப் பொதுச் செயலாளர்,
மலேசிய மனிதவளத்துறை அமைச்சர்.

Y.B. DATUK DR. S.SUBRAMANIAM PJN KMN PJK
MINISTER OF HUMAN RESOUCERS MALAYSIA
SECRETARY GENARAL M.I.C MALAYSIA

**முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு துங்கெடுக்கு**
**மிடியாற் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்**
**அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்**
**பொடியாக் கியபெருமாள் திரு நாமம் புகல்பவரே**

[கந்தரலங்காரம் - அருணகிரிநாத சுவாமிகள்]



## அருள்மிகு கற்பக விநாயகர்

பிள்ளையார்பட்டி

**அற்புத கீர்த்தி வேண்டின்**
**ஆனந்த வாழ்க்கை வேண்டின்**
**நற்பொருள் குவிதல் வேண்டின்**
**நலமெலாம் பெருக வேண்டின்**
**கற்பக மூர்த்தி தெய்வக்**
**களஞ்சியத் திருக்கை சென்று**
**பொற்பதம் பணிந்து பாரீர்**
**பொய்யிலை கண்ட உண்மை**

- கவிப்பேரரசர்க்கெல்லாம் பேரரசர் கண்ணதாசன்

பொருளடக்கம்

## பேராக், சித்தியவான் (காடிகுறிச்சி),

# அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணியர் திருக்கோயில்

## மகா கும்பாபிஷேக அழைப்பிதழ்

## (திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா)



**ஸ்ரீ முருகப் பெருமான் வணக்கம்**

கனகவரை மீதுறைவான் கண்ணில் தோன்றிக்
கரிக்கிளையான் வளவந்த கதிரை வேலன்
மணமொழிமெய் கொண்டடிகள் வணங்கு வாரை
மகிலேறிக் காக்கின்ற சுவாமி நாதா
வளமைகளை மறவாத வாஞ்சை யோடு
வாழ்பவனே சித்தியவான் கோவில் வந்த
பணிமிமயப் பரன்மகனே பழனி யப்பா
படைவீடும் ஆறுடையாய் பணிகின் றோமே.

[illegible]

## 01.06.2008 (ஞாயிற்றுக்கிழமை)

காலை மணி 7.05முதல் 8.00க்குள்

# மலர் வாயில்






அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள் ஞான இன்பமது புரிவாயே
திருப்புகழ் - அருணகிரிநாத சுவாமிகள்

என்னை ஈன்றெடுத்த என் அன்புத் தாயும் என் தெயவமுமாகிய வள்ளியம்மை ஆச்சி அவர்களின் பாதகமலங்களை என் சென்னியின் மேல் வைத்து, தமியேனுக்கு ஆசானாய்க், குருவாய் ஆரம்ப காலங்களில் தாய்த் தமிழையும் ஆங்கிலத்தையும் போதித்த என் அன்புத் தந்தை அமரர் சொ.மாணிக்கம் செட்டியாரவர்கள் பாதந்தொட்டு வணங்கி, முருகப் பெருமான் மலரடி தொழுது, இந்த அழகிய மலரைத் தொகுத்துப் பதிப்பிக்கும் வாய்ப்பை நல்கிய திருக்கோயில் நிர்வாகக் குழு நண்பர்களுக்கும் நன்றி நவில்கிறேன்.

இம்மலரில் ஆதீனகர்த்தர்கள், சைவசித்தாந்த வித்தகர்கள், சமய அறிஞர்கள், இலக்கிய ஆய்வு மேதைகள், வேத விற்பனர்கள், பல்கலைக்கழக, கல்லூரி முதல்வர்கள், முனைவர்கள், பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள், பாவளர் பாவலர்கள், மொழி வல்லுனர்கள் போன்றவர்கள் தம் படைப்புகளின் வழி தமிழ் அன்பர்களைச் சந்திக்கின்றனர். தமிழிலும், ஆங்கிலத்திலுமாக வெளிவரும் இந்நூலை மலேசியா, சிங்கப்பூர் மற்றும் தமிழகத்தைச் சேர்ந்த சான்றோர் தம் எழுத்தோவியங்கள் அணி செய்கின்றன.

சிங்கப்பூர் கவிஞர், வெண்பா வேந்தர், சித்திரப்பாவலர் கவிதாமணி வி. இக்குவனம் அவர்கள் “திருமுருகன் எந்திர பந்தம்”, “மலை பந்தம்”, “சடாக்கர பந்தம்”, சதுரங்க வெண்பா ஆகியவற்றை இம்மலருக்காகப் பிரத்தியேகமாக வழங்கியுள்ளார்கள். இக்கவிதைகள் தமிழ் இலக்கிய உலகிற்குப் புதியவரவுகள். பழுத்த யாப்பிலக்கணப் புலமை உடையவர்களால் மட்டுமே இக்கவிதைகளைப் பாட முடியும். இப்பாக்கள் இம்மலரில் இடம்பெற பேருதவி செய்த சிங்கப்பூர் முனைவர் திருமதி எம். எஸ். ஸ்ரீலஷ்மி அவர்களுக்கு இவ்வேளையில் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

தொலைபேசி, மின் அஞ்சல், கடிதங்கள் வழி அடியேன் கட்டுரை, கவிதை கேட்டு வேண்டுகோள் விடுத்தபோதெல்லாம் சிரமம் பாராமல் உதவிய அறிஞர் பெருமக்களுக்கும் ஆதீனகர்த்தாக்களுக்கும் இருகரம் கூப்பி நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்மலரை மிகச் சிறப்பான முறையில் கொண்டுவர தமியேனுக்கு உதவிய இம்மலரின் பதிப்பாசிரியர் குழுவினராகிய மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல்துறை, பேராசிரியர் முனைவர் சகோதரர் மு.இராசேந்திரன், மலாயாப் பல்கலைக்கழகத்து திரு. மு.சில்லாழி, இவ்வாலயத் திருப்பணிக்குழு பொருளாளர் - வேண்டிய போதெல்லாம் வாகன வசதியையும் மின் அஞ்சல் வசதியையும் இன்னும் பலவகையிலும் உதவிய நண்பர் திரு.M.முனிசாமி அவர்களுக்கும் என் நன்றியும் வணக்கமும் உரித்தாகின்றன. ஆரம்ப காலத்திலிருந்தே இம்மலருக்காக விளம்பர வேண்டுகோள் அறிக்கையும் இதர கணினி சேவை, மற்றும் அடியேன் அழைத்தபோதெல்லாம் எல்லாவகை உதவிகளையும் செய்துவரும் என் இனிய நண்பரும் இந்நகர் அருள்மிகு ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலயத் துணைத்தலைவருமாகிய ஆசிரியர், என் அன்புச் சகோதரர் மு.குணசேகரனுக்கு என் நன்றியும் வணக்கமும்.

விளம்பரங்கள் திரட்டுவதில் உதவிய அன்பர்களுக்கும் குறிப்பாக ஆலய உதவித்தலைவர் தோழர் க.பரமநாதன் அவர்களுக்கும், விளம்பரம் தந்த நிறுவனங்களுக்கும், தனி நபர்களுக்கும், இயக்கங்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன் இம்மலர் சிறப்பாக வெளிவருவதற்கு எல்லாவகையிலும் உதவிய ஆலயச் செயலாளர் திரு.அரங்கசாமி அவர்களுக்கும் என் இதயங்கனிந்த நன்றி. செயற்குழு உறுப்பினர் திரு.தஞ்சப்பன், அச்சுப்பிழை திருத்துவது முதலிய சேவை செய்துதரும் சித்தியவான் தமிழர் திருநாள் விழாக்குழுச்செயலாளர் செல்வி சாந்தா காளியப்பன் முதலியோருக்கும் நன்றி கூறுகிறேன். ஆரம்பகாலந்தொட்டே அருணகிரிநாதர் விழா முதல் என்மீது அன்பும் என் வளர்ச்சியில் ஆர்வமும் அக்கறையும் கொண்ட என் அன்புச் சகோதரர், ஆலயத் தலைமைக் குருக்கள் சிவ ஸ்ரீ பிரகாஷ், இந்நகர் சண்முகநாத ஆலயத் தலைமைக் குருக்கள் திரு.சண்முகசுந்தரம்(சுந்தர்), நாதன் முதலியோருக்கும் என் நன்றிகள் உரித்தாகுக.

இம்மலரை மிகச் சிறப்பான முறையில் வடிவமைத்து, அச்சிட்டுத் தந்த பெட்டாலிங் ஜெயா கிரினோ கிராபிக்ஸ் நிறுவனத்தைச் சேர்ந்த சகோதரர் மதன் ஜெயராமன் அவர்கட்கும், தலைநகரில் தமியேனுக்குப் பலவகையிலும் உதவிகள் செய்த அறிவியல் தொழில் நுட்பப் புத்தாக்கத்துறை அமைச்சின் அதிகாரியாகப் பணியாற்றும் வழக்கறிஞரும் என் அன்புத் தம்பியுமான கு. ரகு ராமனுக்கும் வாழ்த்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்னீர்குடமுழுக்கு விழா மலர்களில் உலகத் தரம் வாய்ந்த ஒன்றைத் தயாரிக்க வேண்டுமென்ற வேட்கையில் தத்தளித்துக் கொண்டிருந்த எனக்கு, இறுதியில் அச்சுப் பிழை திருத்துதல் முதலியவற்றில் மலாயாப் பல்கலைக்கழக நண்பர்கள் சுதன் சுரேந்திரன், கனகராஜா முனியாண்டி,கவிதா, மோகன பைரவி ஆகியோர் துணை புரிந்தனர்.நமக்கெல்லாம் நன்மை பயக்கும் வகையில் வெளிவரும் இம்மலர் ஒவ்வொருவர் இல்லத்திலும் படித்துப் போற்றிப் பாதுகாக்கப்படுமெனத்திண்ணமாக நம்புகிறேன். இம்மலரைத் தொகுக்க ஆரம்பித்த நாள் முதல் இன்று வரை எனக்கு எல்லா விதத்திலும் பக்கத்துணையாக இருந்த, இருக்கின்ற எனதருமை மனைவி நாச்சம்மைக்கும் என் நன்றி.

இம்மலர் மணம்பெற உழைத்த அன்பு நெஞ்சங்களுக்கு மீண்டும் மீண்டும் நன்றி கூறி அருள்தரு தண்டாயுதபாணி சுவாமிகள் திருவடி மலர்களில் இந்நூலை வைத்து வணங்குகிறேன்.

அன்புள்ள
மா.திருநாவுக்கரசு (எ) மா.தி.அரசு
பதிப்பாசிரியர்.



# KATA - KATA ALUAN YAB MENTERI BESAR PERAK SEMPENA PERASMIAN KUIL "MAHA KUMBABISHEGAM" KUIL SRI SUBRAMANIAR, SITIAWAN

Terima kasih dan tahniah kepada jawatankuasa Kuil Sri Subramaniar Paripalana, Sabah, Kadi Kuchi, Sitiawan kerana telah sudi menjemput saya untuk memberi kata-kata aluan bagi tujuan terbitan buku cenderamata sempena perasmian kuil "Maha Kumbabishegam" pada 01 Jun 2008.

Sesungguhnya saya gembira diatas usaha murni jawatankuasa kuil dalam melaksanakan tanggungjawab yang besar demi menyempurnakan kerja-kerja binaan kuil tersebut sehingga mencapai tahap kemuncak iaitu "Maha Kumbabishegam".

Saya yakin bahawa masyarakat Hindu di Sitiawan akan bekerjasama untuk meningkatkan daya upaya dan secara keseluruhan menyambut baik kemajuan yang bakal diperolehi dalam merealisasikan matlamat kerajaan baru ini.

Syabas, sekali lagi diucapkan dan saya menyanjung tinggi usaha yang diambil oleh jawatankuasa Kuil Sri Subramaniar dalam menjayakan "Maha Kumbabishegam" ini. Semoga Maju Jaya.

Sekian, terima kasih.

DATO' SERI IR. HAJI MOHAMMAD NIZAR BIN JAMALUDDIN



# IBU PEJABAT MALAYSIAN INDIAN CONGRESS
## மலேசிய இந்தியர் காங்கிரஸ் தலைமையகம்



மஇகா தேசியத் தலைவர்,
மதிப்புமிகு டத்தோஸ்ரீ ச.சாமிவேலு அவர்கள் வழங்கிய
வாழ்த்துச் செய்தி

பேராக், சித்தியவான் ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயத்தின் நன்னீராட்டுப் பெருவிழாவினை முன்னிட்டு வெளியிடப்படும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

புது யுகத்திலும், புதுச் சிந்தனையோட்டத்திலும் உலக மாந்தர்கள் சென்று கொண்டிருக்கிறார்கள். பரபரப்பான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருப்பதால், அதிகமான மன உளைச்சல்களுக்கு உள்ளாகி, பல்வேறு சூழ்நிலைகளுக்கு மனிதர்கள் உட்படும்போது அவர்களுக்கு மன அமைதி தேவைப்படுகிறது. அந்த அமைதி ஆலயத்தில் கிடைக்கும் என்ற நம்பிக்கையில்தான் ஆலயங்களுக்குப் பக்தர்கள் வருகின்றனர். எனவே, ஆலயங்கள் முறையாகப் பராமரிக்கப்பட வேண்டும்; மன அமைதி தேடும் பக்தர்கள் ஆலயத்திற்குள் நுழைந்தவுடன் ஒரு தெய்வீக உணர்வைப் பெற வேண்டும்.

அந்த வகையில் சித்தியவான்(காடிகுறிச்சி) அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயத்திற்கு அப்பகுதியின் சுற்று வட்டாரப் பகுதிகளிலிருந்து அதிகமான பக்தர்கள் வருகின்றனர். அறுபடை வீடுகளில் எழுந்தருளியிருக்கும் திருமுருகன் வாழ்க்கையின் தத்துவத்தை எடுத்தியம்பும் களஞ்சியமாகத் திகழ்கிறார். திருமுருகனின் தத்துவ ஒளியைப் பின்பற்றினால் வாழ்க்கையில் உன்னத அமைதியைப் பெறலாம் என்பது பக்தி இலக்கியத்தின் இலக்கணம். அந்த வகையில் ஒரு சிறிய ஆலயமாகத் தொடங்கப்பட்ட இந்த ஆலயம், பல்வேறு சீரமைப்புப் பணிகளை மேற்கொண்டு இப்போது நன்னீராட்டு விழாவினைக் காண்கின்றது.

இந்த ஆலயத்தைப் பொறுப்புடன் வழிநடத்தும், திரு.ஆர்.கிருஷ்ணன் அவர்களுக்கும் அவர்தம் குழுவினருக்கும் எனது பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்வதுடன், இந்த ஆலய வளர்ச்சிக்கு நன்கொடை வழங்கிய அனைத்து பக்தப் பெருமக்களுக்கும் எனது நன்றியைக் கூறிக் கொள்கிறேன்.

நடைபெறவிருக்கும் நன்னீராட்டு விழா எல்லா வகையிலும் சிறப்புடன் நடைபெற எல்லாம்வல்ல தமிழ்க்கடவுள் முருகனின் அருள் வேண்டி, எனது மனமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,

டத்தோஸ்ரீ ச.சாமிவேலு

Menara Manickavasagam, Tingkat 6, No. 1, Jalan Rahmat, 50350 Kuala Lumpur. Tel: 40424377/40424540 Fax: 03-40427236



## டத்தோ சி.சுப்பிரமணியம் அவர்களின் வாழ்த்துச் செய்தி

பேராக், சித்தியவான் நகரிலுள்ள அருள்மிகு ஸ்ரீ சுப்ரமணியர் திருக்கோயில் கும்பாபிஷேகம் காண்பதை முன்னிட்டு வெளியிடப்படும் சிறப்பு மலருக்கு எனது வாழ்த்துச் செய்தியை வழங்குவதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

சிறப்பு வாய்ந்த நமது முன்னோர்கள் நமது வாழ்க்கை முறையிலும், சமூக அமைப்பு முறையிலும் ஆலயங்களுக்கு மிகுந்த முக்கியத்துவத்தைத் தந்திருக்கின்றார்கள். நமது இந்து சமயத்தைப் பரப்புகின்ற மையங்களாகவும், ஆடல், பாடல், கலை, இலக்கிய நிகழ்வுகளின்வழி மக்களை ஈர்க்கின்ற கலாநிலையங்களாகவும், அதே வேளையில் நமது பாரம்பரியக் கலைகளான சிற்பக் கலை, கட்டிடக் கலை, ஓவியக் கலை போன்றவற்றில் நமக்கிருந்த திறமைகளை உலகுக்கு எடுத்துக் காட்டும் இடங்களாகவும் ஆலயங்கள் திகழ்ந்தன.

அந்தப் பாரம்பரியத்தோடு மலேசியாவுக்குக் குடிபெயர்ந்த நமது இந்துப் பெருமக்களின் வாழ்க்கையிலும் ஆலயங்கள் முக்கிய இடம் பெற்றுள்ளன என்பதோடு, அத்தகைய ஆலயங்களுக்கு நாம் தருகின்ற மரியாதையையும், முக்கியத்துவத்தையும் அண்மைய கால சம்பவங்கள் நமக்கும் மற்றவர்களுக்கும் எடுத்துக் காட்டியுள்ளன.

ஆலயங்களை ஆகம முறைப்படியும், சமய முறைப்படியும் சிறப்பாகப் பராமரித்து வர வேண்டும் என்ற நோக்கத்தில் சித்தியவான் ஸ்ரீ சுப்ரமணியர் திருக்கோயில் புதுப்பிக்கப்பட்டு, கும்பாபிஷேகம் நடத்துவதற்கு ஏற்பாடுகள் செய்திருக்கும் ஆலய நிர்வாகத்தினருக்கு இந்த வேளையில், எனது பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதேவேளையில், இந்தக் கும்பாபிஷேகத்தை முன்னிட்டு வெளியிடப்படும் இந்தச் சிறப்பு மலரில் இந்து சமயத்தின் பெருமைகளை விளக்கும் வண்ணம் உலகம் முழுமையிலுமிருந்து சுமார் 40 கட்டுரைகள் சேகரித்து இடம் பெறச் செய்து, இந்தச் சிறப்பு மலரை இந்து சமயத்தின் பெருமைகளை விளக்கும் வண்ணமாக உருவாக்க ஆலய நிர்வாகத்தினர் எடுத்துள்ள முயற்சிகளுக்கும் குறிப்பாக திரு. எம்.திருநாவுக்கரசு அவர்களின் பணிகளுக்கும் இந்த வேளையில் எனது பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சித்தியவான் ஸ்ரீ சுப்ரமணியர் திருக்கோயில் தொடர்ந்து சித்தியவான் வட்டாரத்தினருக்கு சமயப் பணிகளை ஆற்றி வரவும், பொதுமக்களுக்குப் பயனளிக்கும் வகையில் சிறப்பான முறையில் சேவைகளை ஆற்றி வரவும் எனது நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்வதோடு, ஆலய கும்பாபிஷேகம் எல்லாம் வல்ல இறையருளால் வெற்றிகரமாக நடந்தேறவும் எனது நல்வாழ்த்துக்களைப் புலப்படுத்திக் கொள்கின்றேன். வணக்கம்.

டத்தோ சி.சுப்ரமணியம்













உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருக் கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
திருவாவடுதுறை – நாகை மாவட்டம்
– தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு –

இருபத்து மூன்றாவது குரு மகா சன்னிதானம்

## சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

# அருள் வாழ்த்துரை

அந்திப்போ தழகுறவே நடித்தருளும்
        வழித்துணைவ ரருளுங் கோவை
வந்திப்போர் நினைத்தபடி மயிலேறி
        யயிலெடுத்து வருஞ்செவ் வேளைச்
சந்திப்போ மலர்சொரிவோம் புகழ்ந்திடுவோ
        மவன்கமலத் தாளுந்தோளுஞ்
சிந்திப்போ மாதலினா னமதுபழ
        வினைகளெல்லாஞ் சிந்திப்போமே - திருவிரிஞ்சைப்புராணம்

பேராக், சித்தியவான் (காடிகுறிச்சி) அருள்மிகு சுப்பிரமணியர் திருக்கோயில் நூதன ஆலய அஷ்டபந்தன நவகுண்ட பக்ஷ பிரதிஷ்டா மகா கும்பாபிஷேக அழைப்பிதழ் கண்ணுறப்பெற்றது.

எல்லாம் வல்ல எம்பெருமானாகிய சிவபெருமானின் அக்னி பூவாக மலர்ந்து, பிரணவ மந்திரப் பொருள் உரைத்து, சூரனை வென்று, தேவர்களைக் காத்து, செழுந்தமிழ்க்கடவுளாய், குறிஞ்சிநிலத் தலைவனாய், தேவகுஞ்சரி வள்ளி மணாளனாய் விளங்கும் அருள்மிகு சுப்பிரமணியர் அறுபடை வீடுகளில் ஆட்சிபுரிந்து, அருந்தமிழ்ப்புலவராய் விளங்கிய நக்கீரரைக்காத்து, குமரகுருபரருக்கு ஊமை நீங்கச் செய்து, அருள்புரிந்த அறுமுகனின் அருட்சிறப்பை

வளநிலவு குலஅமரர் பதியாய் நீல
        மயிலேறி வருமீசன் அருள்ஞான மதலை
அளவின்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த
        அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்விற லெண்ணா
உளமருவு சூரனுரம் என திடும்பை ஓங்கல்
        ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வேல் உகந்த
களபமலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த
        கந்தன் மல ரடியிணைகள் சிந்தை செய்வோம் - என்று போற்றுகின்றது.

குமரக் கடவுளுக்கு நூதன திருக்கோயில் எழுப்பி, அத்திருக்கோயிலில் அருள்மிகு விநாயகர், அருள்மிகு விசாலாட்சி உடனாகிய விசுவநாதர், அருள்மிகு கருமாரியம்மன், அருள்மிகு திருமால் , அருள்மிகு ஆஞ்சநேயர், அருள்மிகு பைரவர், அருள்மிகு இடும்பர், அருள்மிகு நவக்கிரகங்கள் ஆகிய மூர்த்தங்களும் வழிபாட்டிற்காக அமைத்திருப்பது பாராட்டத்தக்கது.

01-06-2008 அன்று நடைபெறும் குடமுழுக்கு விழாவில் விழாமலர் வெளியிடுவது மகிழ்ச்சிக்குரியது. குடமுழுக்கு விழா சீரும் சிறப்புமாக நடைபெறவும், விழாமலர் திருநெறிய மணம் வீசவும், திருவருட்பணியினைச் செம்மையாகச் செய்து திருவருட் பேற்றைப் பெறும் அன்பர்களும் நலம்யாவும் பெற்றுச் சிறக்கவும் நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப்பெருங் கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

உ

குருபாதம்



திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26 வது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

தருமபுரம்
மயிலாடுதுறை ( அஞ்சல் ) 609 001

*13.5.2008*

" ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே "



மக்கள் வாழும் இடங்கள் மலை, மணற்பரப்பு, காடு, வயற்கரை, கடற்கரை என ஐந்து வகைப்படும். இவற்றைக் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் எனக் கூறுவர். இந்நிலங்களின் தெய்வங்களாக முருகன், கொற்றவை, திருமால், இந்திரன், வருணன், எனக் கூறுகிறது தொல்காப்பியம். இத்தெய்வங்களில் குறிஞ்சி நிலத் தெய்வமாக முருகன் கூறப்படுகிறார்.

முருகு என்ற சொல்லுக்கு மணம், அழகு, இளமைத் தன்மை ஆகியன பொருளாகும். இத்தெய்வத்தை வழிபாடு புரிவோர்க்கு இப்பண்புகள் உண்டாகும்.

தமிழ் மக்கள் பலராலும் விரும்பி வழிபடப்பெறும் தெய்வம் முருகன் இவரை ஆலயங்களில் அவருக்குரிய தேவியர்களோடு அல்லது தனிநிலையிலும் வைத்து வழிபடலாம். அப்பெருமான் பழனியில் விளங்கும் திருக்கோலத்தில் தண்டாயுதபாணியாகவோ ஆறுமுகராகவோ வழிபடலாம்.

மலேசியாவில் பேரா மாநிலத்தில் சித்தியவான் நகரில் வாழும் தமிழ் மக்கள் அருள்மிகு சுப்பிரமணியர் ஆலயம் அமைத்து விசுவநாதர் விசாலாட்சி முதலிய தெய்வங்களை எழுந்தருளச் செய்து வழிபாடு நிகழ்த்தி வருவதும், அக்கோயிலை அழகுறத் திருப்பணிகள் செய்து மகா கும்பாபிஷேகம் செய்விப்பதையும் அறிந்து மகிழ்கிறோம்.

மகா கும்பாபிஷேகம் இனிதே நடைபெறவும் மலேசியத் திருநாட்டில் வாழும் தமிழ் மக்கள் எல்லா நலன்களும் பெற்று இன்புற்று வாழ்ந்து வரவும் நமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே

... ஸ்ரீ. அருணகிரிநாதர்

PHONE : 2456655

"KAILAI MA MUNIVAR "
THIRU VALAR THIRU KASIVASI
MUTHUKUMARASWAMI TAMBIRAN
SWAMIGAL



SIVA SIVA

HEAD OF KASITHIRU MADAM
TIRUPANANDAL - 612 504
THANJAVUR DISTRICT

திரு மா.தி. அரசு அவர்களுக்கு,

செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க

வடமலேசியாவில் எழில் கொஞ்சும் வெள்ளிப் பெயர் கொண்ட பேரா மாநிலத்தில் சித்தியவான் திருநகரில் அமைந்துள்ள ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயத்தில் வைகாசித் திங்கள் 19ம் நாள் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெறவுள்ளது அறிய மகிழ்ச்சி.

திருக்குட நன்னீராட்டு விழா இனிதே நடைபெறப் பிராத்திக்கிறோம்.

மங்கல நீராட்டு விழா நினைவாக சிறப்பு மலர் வெளியிட இருப்பது பெரிதும் மகிழ்வைத் தருகிறது.

விழா மலர் சிறப்புற அமையவும் எழுத்தோவியங்கள் மக்கட்டுப் பயன்படும் வகையில் அமையவும் நல்வாழ்த்துக்கள்.

வாழ்க சீர் அடியாரெல்லாம்.

சிவசிவ

உ
குருவே துணை

Thavathiru Kumaragurubara Swamigal
HEAD OF THE MUTT
Siravanampuram
KAUMARA MATALAYAM
Chinnavedampatti (P.O),
Coimbatore - 641 006. Tamilnadu
Phone : 0422 - 2666370, 98421 - 66373



www.Kaumaramutt.org

தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்
மடாதிபதி
சிரவணபுரம்
கௌமார மடாலயம்
சின்னவேடம்பட்டி (அஞ்சல்)
கோயமுத்தூர் - 641 006. தமிழ்நாடு



## வாழ்த்து

திருந்தப் புவனங்கள் ஈன்றபொற்
பாவைத் திருமுலைப் பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில்
ஏறி அறுவர் கொங்கை
விரும்பிக் கடல்அழக் குன்றழச்
சூரழ விம்மிஅழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன்என்
றோதும்; குவலயமே.

முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்போன் முருகப் பெருமான். செந்தமிழுலகில் கற்றோர் முதல் அனைவரும் முருகா எனும் நாமத்தைச் சொல்வதைக் காண்கிறோம். விழிக்கும், தனிவழிக்கும் துணையாய் நிற்பவன் முருகன்.

கலியுகம் என்பது தீமைகளுக்கு ஆக்கம் அளிக்கும் யுகம். உறுதியைக் குலைத்து, உண்மையை மறைத்து, தன்னறிவுக்கு மதிப்புக்கொடுத்து பழமைகள் யாவும் முதியோர்களுக்கே உரியவை என்று ஒதுக்குங் காலம். இத்தகைய காலத்தில் இறையுணர்வு குன்றாவண்ணம் அனைவரிடத்தும் எல்லா வகையிலும் துணையாய் இருப்பவன் நம் சொந்தக் கடவுளாம் கந்தக் கடவுள். நாள்களாளும், கோள்களாளும் வரும் வினையை நீக்குபவன். வந்தவினையும், வருகின்ற வல்வினையும் கந்தன் எனக் கலங்கிடும். அப்பெருமான் குன்றிருக்கும் இடமெல்லாம் வீற்றிருப்பான். அதேபோல் தமிழ் மக்கள் உள்ள இடங்களில் எல்லாம் அன்பு கொண்டு வழிபடும் அன்பு உள்ளங்களில் எல்லாம் குடிகொண்டிருப்பான் கந்தப் பெருமான். எண்ணிய யாவையும் உடன் நல்கும் எம்பெருமான் மலேசியா நாட்டில் பேராக், சித்தியவான் பகுதியில் அருள்மிகு சுப்பிரமணியர் திருக்கோயிலில் தண்டமிழ்க் கடவுள் தண்டபாணித் திருக்கோலத்தில் எழுந்தருளி அருள்பாலித்து வருகின்றார்.

இத்திருக்கோயில் தற்பொழுது புதுப்பித்து நீராட்டுப் பெருவிழாக் காணும் இந்நாளில் தமிழ் மணம் கமழும் மலரொன்று மலர்கின்றது. அம்மலர் கந்தக் கடவுளுக்குத் தமிழ்மணம் கமழும் மலராக மலர வாழ்த்துகின்றோம். திருக்கோயில் திருப்பணிக் குழுவினர், மலர்க் குழுவினர், விழாவில் பங்குபெறும் முருகன் அடியார்கள் அந்நாட்டு மக்கள் அனைவரும் எம்வழிபாட்டுக் கடவுளாகிய முருகப் பெருமான் திருவருள் துணையால் திருவும், கல்வியும் உள்ளிட்ட பதினாறு பேறுகள் பெற்று மண்ணில் நல்ல வண்ணம் வாழ வாழ்த்துகின்றோம்.

அன்புள்ள,



# திருவண்ணாமலை ஆதீனம்

தலைமை அலுவலகம்
குன்றக்குடி - 630 206, சிவகங்கை மாவட்டம், தமிழ்நாடு. ✆ 04577 - 264227
திருவருள்திரு தெய்வசிகாமணி பொன்னம்பலதேசிக பரமாசாரிய சுவாமிகள்
(தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்)
ஆதீனகர்த்தர்



## வாழ்த்துரை

குறிஞ்சிக் கடவுள் எனத் தமிழ் மக்களால் போற்றப்படும் முருகன், குன்று தோறாடல் கொண்ட இறைவன். இந்த இறைவன் அழகே உருவானவன். கைபுனைந்து இயற்றாகக் கவின்பெறு-வனப்பினன் என்றும், இளையோன் ஆணவ மலத்தின் சின்னமாக விளங்கிய சூரனை ஞான வேலால் இரு கூறாக்கி ஒரு கூறைச் சேவற் கொடியாகவும், மறு கூறை மயில் வாகனமாகவும் கொண்டு விளங்குபவன். முருகனின் வேலும் மயிலும் ஞானத்தையும் அழகையும் மக்களுக்கு வழங்கும் இயல்புடையன. அதனால் வேலை வணங்குவதும், மயிலை வணங்குவதும் முருகனை வணங்குவதை ஒக்கும்.

இவ்வாறு அருள் வழங்கும் முருகவேள், வட மலேசியா நாட்டின் பேரா மாநிலத்தில் சித்தியவான் நகரில் ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயத்தில் ஞானம் வழங்கும் மூலவராகத் தண்டாயுதபாணி மூர்த்தத்தில் கோவில் கொண்டு இருக்கிறான்.

அருள்தரு விநாயகர், காசி விஸ்வநாதர், விசாலாட்சி, கருமாரி அம்மன், திருமால், ஆஞ்சநேயர், பைரவர், இடும்பர், நவக்கிரகங்கள் ஆகிய மூர்த்தங்களும் இவ்வாலயத்தில் அமையப் பெற்றுள்ளது சிறப்புக்குரியது.

01-06-2008-ல் ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயம் திருக்குட நன்னீராட்டு விழாக் காண இருப்பது மிக்க மகிழ்வளிக்கிறது. இத்திருப்பணியில் ஈடுபட்டு உழைத்த அனைவருக்கும் திருமுருகன் திருவருள் நிறைக.

திருக்குட நன்னீராட்டு விழா மலர் கருத்து வளமும், அருள் மணமும் நிறைந்து வெளிவரத் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு,

(பொன்னம்பல அடிகளார்)

பெறுநர்
திரு.மா.திருநாவுக்கரசு அவர்கள்
மலர்க்குழுத் தலைவர்,
ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம்,
32000 சித்தியவான்,பேரா,
மலேசியா

website: www.kundrakudiadheenam.org (or) www.kkmutt.org
E-mail: adigalar_kta@sancharnet.in; adigalar_kundrakudi@yahoo.com

தொலைபேசி : 2607995, 2608678
கயிலைமாமுனிவர் வித்துவான்
**சாந்தலிங்க இராமசாமியடிகள்**
பேரூராதீனம், பேரூர் (அஞ்சல்)
கோயமுத்தூர் - 641 010, தமிழ்நாடு.
இணையதளம் : www.Peruradinam.com
மின்னஞ்சல் : peruradigal@yahoo.com
: perurmutt@ yahoo.com

உ



சாந்தலிங்கர் தாண் மலர் வாழ்க

Telephone : 2607995, 2608678
Kailai - Ma - Munivar - Vidwan
**Santhalinga Ramasamy Adigal**
Peruratheenam, Perur (P.O.)
Coimbatore - 641 010, Tamilnadu
webpage : www.Peruradinam.com
Email : peruradigal@yahoo.com
: perurmutt@ yahoo.com

அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் பெருக.

வாழ்த்து

1) வளமிகு மலேசியாவில் வழிபடும் அடியார் கூட்டம்
இளமையும் அழகும் மிக்க முருகனுக்கு இனிய கோயில்
தளர்விலாது உயர் சித்தியவான் தளி அமைத்து ஒருங்குபோற்றி
வளர்கின்றார் குட நீராட்டு மகிழ்வுறச் செய்து வாழி

2) தஞ்சையில் மன்னர் மன்னன் தனிப்பெருங்கோயில் செய்தே
நெஞ்சுரத்துடன் கடாரம் நேர்கொண்டு நேயமார் தமிழர் தங்கள்
விஞ்சிய வீரம் சேரும் மலேசியாவில் வேலணி முருகன் கோயில்
கஞ்சமாய் அடியார் சித்தியவான் தழைத்திட அமைத்தார் வாழி

3) நற்றமிழ் சுப்ரமணியர் கோயிலில் நாளும் போற்றி
பொற்புறு குடநீராட்டுப் பொலிவுறத் தமிழால் பாடி
உற்ற நல்விழாவெடுத்து சித்தியவான் உயரச் செய்தே
கொற்றவையாதி தெய்வம் கும்பிட்டு வளமாய் வாழி

4) திருமுறை திருப்புகழ்ப்பாடிச் சேர் தமிழ்நெறியில் வாழி
ஒருமைசேர் மனத்தராகி உளங்கசிந்து இனிது வாழி
முருகனதருள் நோக்கெய்தி முத்தமிழ்ப் பாடி வாழி
பெருமைசேர் கோயில் வாழி பெருகு நல்லடியார் வாழி

வேண்டுந்தங்களன்பு,

அன்புள்ள,

சாந்தலிங்க இராமசாமியடிகள்

(தவத்திரு சாந்தலிங்க இராமசாமியடிகள்)
பேரூராதீனம்






முருகா சரணம்

**பாலயோகி சுவாமிகள்**

( ஸ்தாபகர் - அதிபர் )

**திருமுருகன் திருவாக்கு திருபீடம்**

**BALAYOGI SWAMIKAL**

THIRUMURUGAN THIRUVAKKU THIRUPEEDAM

15 , JALAN 1/ 6 , Section One

46000 PETALING JAYA - MALAYSIA.

Tel. nos. 03 - 77844744 . e-mail : swamiji@tm . net . my


சர்வதாரி - வைகாசி 03

16.05.2008

## ஆசியுரை



முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகும் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங் கவ எண் குணபஞ் சரணே
(கந்தரனுபூதி 15)

முருகப் பெருமானின் வழிபாட்டுக் காலச் சுவடுகளாக ஏழாயிரம் வருடத்துக்கும் முன்னதான வரலாற்றுப் பதிவுகளை ஆராய்ச்சியாளர்கள் கண்டெடுத்துள்ளனர். முருகனின் அருளை உணர்த்தும் திருமுருகாற்றுப்படை நூல், பண்டைய தமிழர் நாகரீகம் மற்றும் தமிழர்களின் முருகப்பற்று, வழிபாடு முதலியவற்றைச் சித்தரிக்கும் தோத்திரமாக உலா வருகிறது.

அகத்தியர், நக்கீரர், அருணகிரிநாதர், திருப்போரூர் சிதம்பர சுவாமிகள், திருகுமரகுருபரர், தேவராய சுவாமிகள், பாம்பன் சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள், தண்டபாணி சுவாமிகள், சங்கரதாஸ் சுவாமிகள் போன்ற முருக அடியவர்கள் திருவாய்மொழிகளாகப் பல்லாயிர தோத்திரங்கள் முருகப் பெருமானைப் போற்றுகின்றன.

அறுபடைத் திருத்தலங்களைப் போற்றி மகிழும் அடியவர்கள் தங்கள் வசிப்பிடங்களிலும் மாலோன் மருகனை எழுந்தருளச் செய்துப் பூசனைகளை நடத்திவருவதும், கணக்கில் அடங்கா திருக்கோவில்கள் அமைத்துவருவதும் முருகபக்தியின் அருட் சான்றுகளாக அமைகின்றன.

இத்தகு அருமைப் பொலிவினைத் தாங்கியருளும் திருநாடாக நமது மலேசியத் திருநாடும் பத்துமலை, கல்லுமலை, தண்ணீர்மலை, மாரான் மரத்தாண்டவர் முதலியத் திருத்தலங்களுடன் அருஞ்சோலையாகச் சீர்பெருகு சித்தித்தரும் சித்தியவான் திருநகரில் தண்டாயுதபாணித் தெய்வமாகச் சித்திரக்கூடத்து எழில் பெருகு திருக்கோவிலில் எழுந்தருளுவது மிகுந்த மகிழ்வை ஊட்டுகிறது.

ஞானவள்ளலின் அருட்புகழைப் பாடிப் பணியவும், தேடித் தெளியவும் அருட்களஞ்சியமாக; பெருந்நன்னீராட்டுப் பெருவிழா மலர் வெளியீடு காண்பதும் பேருவகையைக் கூட்டுகிறது.

ஞாயிறும் திங்களும் உள்ளளவும், இந்த அருட் பணிகள் நீடு நிலைக்க வாழ்த்தி நிர்வாக மற்றும் திருப்பணி தலைவர்கள் மற்றும் திருக்குழுவினருக்கும், திருமலர் குழுவின் தலைவர் அருட்பணிச் சித்தர் திருநாவுக்கரசருக்கும் எந்தை பிரபுவின் திருவருள் அமைய போற்றுகிறோம்.

சுபம்

முருகா சரணம்,



AUM
PERSATUAN CARA HIDUP KETUHANAN CAWANGAN MALAYSIA
தெய்வீக வாழ்க்கைச் சங்கம், மலேசிய கிளை
THE DIVINE LIFE SOCIETY, MALAYSIA BRANCH
Object: Dissemination of Spiritual Knowledge




Headquarters:
Divine Life Society,
Sivanandanagar, 249192,
Dt.Tehri Garhwal, Uttaranchal,
India.

Tel:03-61896994
Fax:03-61872789
SIVANANDASHRAM,
68100 BATU CAVES,
SELANGOR.



தெய்வீக வாழ்க்கைச் சங்கத் தலைவர்
தவத்திரு சுவாமி குகபக்தானந்தா
அவர்களின் வாழ்த்துச் செய்தி

எதிர்வரும் 1-6-2008 ஞாயிற்றுக்கிழமை பேராக், சித்தியவான் நகரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணியர் கோயில் கும்பாபிஷேகத் திருப்பணியை முன்னிட்டு வெளியிடப்படும் மலருக்காக வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மிக்க மகிழ்ச்சியடைகிறோம்.

ஸ்ரீ சுப்பிரமணியர் கோயில் பரிபாலனச் சபா நிர்வாகத்தில் இயங்கும் இவ்வாலயத்தின் மூல மூர்த்தியான ஸ்ரீ தண்டாயுதபாணி அவ்வட்டார மக்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருப்பது யாவரும் அறிந்ததே.

இவ்வாலயத்தில் இன்னொரு சிறப்பு என்னவென்றால் திருப்புகழ் விழா பெரிய அளவில் அருணகிரியார் பிறந்த நாளில் கொண்டாடுவதாகும். கடவுள் மனித உருவில் தட்சணாமூர்த்தியாக வந்து ஞானம் உபதேசித்ததையும், இறை ஞானம் போதிக்கும் மனித ரூபத்தில் உள்ள ஞான குருவும் கடவுள் நிலையில் உள்ளவர் என்றும் நம் சமய, ஆன்மீக சாஸ்திரங்கள் உறுதியுடன் எடுத்துரைக்கின்றன. இதற்கு ஆதாரமாக திருப்புகழில் 'குருவாய், வருவாய், அருள்வாய் குகனே' என்ற திருமொழி சான்றாகும். அந்த வகையில், ஆன்மீக குருவுக்கும் கடவுளுக்கும் சம நிலை வழங்கும் இவ்வாலயம் இதுபோன்ற அரிய செயல்களின்வழி மனிதனைத் தூய்மையாக்கி இறை நிலைக்கு இட்டுச் செல்ல உதவுகின்றது.

இறை வழிபாட்டில், மனிதன் தன்னிடம் உள்ள மும்மலங்களை அகற்ற பக்தி மார்க்கம் ஒரு ஊன்றுகோலாக அமைகின்றது. அதோடு குருவருளும் திருவருளும் துணை புரியும்போது வாழ்க்கையின் பிறந்த பலனை அடைய இயலும்.

ஆக, இந்த ஆலய கும்பாபிஷேகம் சிறப்பாக நடந்தேறவும் தொடர்ந்தாற்போல் சமய, ஆன்மீக நிகழ்ச்சிகளை நடத்துவதன்வழி மக்கள் இறையருள் பெற்று மகிழ்ச்சியாக வாழவும் எல்லாம் வல்ல இறைவனையும் எமது குருதேவரையும் வணங்கிப் பிராத்திக்கின்றேன். வணக்கம்.

இப்படிக்கு,

இறை மற்றும் குரு சேவையில்,

சுவாமி குகபக்தானந்தா

(சுவாமி குகபக்தானந்தா)

சிவ ஸ்ரீ க.நா.இராமச்சந்திர குருக்கள்
SRI SUBRAMANIAR THUROPATHAI AMMAN ALAYA
PARIPALANA SABAI, GAJAH BERANG, MELAKA.
Tel : 06-2843060 H/P : 019-6278664



## ஆசியுரை

எல்லாம் வல்ல இறைவன் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கின்றான். அனைத்திற்கும் அவனே சக்தியாகத் திகழ்கிறான். அந்தச் சக்தியின் மூலமாகவும் அவனே திகழ்கிறான். இந்த அற்புதமான உலகமும், பல்லாயிர உருவ வேற்றுமைக்கும் பெயரும் வடிவமும் ஒரு பேரருளிலிருந்துதான் உண்டாகியிருக்கிறது. எப்படி?

ஒரு ஆலமரத்தின் பழத்தை எடுத்து, அதை இரண்டாகக் கிள்ளினால் அதனுள்ளே பல சின்னஞ் சிறு விதைகள் இருப்பதைப் பார்க்கலாம். அவற்றில் ஒரு விதையை எடுத்து அதைக் கிள்ளிப் பார்த்தால் ஒன்றுமே கண்ணுக்குத் தெரிவதில்லை. ஆக, கண்ணுக்குத் தெரியாததால் கிளைகளும், விழுதுகளும், இலைகளும் கொண்ட ஆலமரம் இல்லை என்று சொல்லிவிட முடியுமா?

இந்த மரம் முழுவதும் அந்த சின்னஞ் சிறு விதையினால், கண்ணுக்குத் தெரியாத நுண்ணியப் பொருளாக அடங்கி இருக்கின்றது. இதை நாம் யோசித்துப் பார்த்தால் இந்த உலகம் கண்ணுக்குத் தெரியாத சக்தியால் இருந்து உண்டானது என்று புலப்படுகின்றது.

ஆலம் விதை மிகச் சிறியது. அதனுள் எப்படி இந்தப் பழங்களும், விழுதுகளும், கிளைகளும், குணமும், பாலும், நிறமும், சுவைகளும் அடங்கியிருக்கின்றன? அந்தச் சிறுவிதையை எங்கே புதைத்தாலும், அதன் நிறம், குணம், அளவு உருவம் கொண்ட மரமே உருவாகின்றது. வேறு ஒன்று உண்டாகாது. ஒரு பெரிய உருவமாக உள்ள ஆலமரம் ஒரு சிறு விதைக்குள் அருவமாக இருக்கின்றது. ஆக, இறைவன் இந்த உலகத்தில் அருவமும், உருவமுமாக விளங்குகின்றான். இந்தப் பிரபஞ்சத்தை ஒரு சக்தி இயக்குகின்றது. அந்த சக்திதான் பரம்பொருள். அந்தப் பரம்பொருளில் இருந்துதான் நாம் தோன்றுகின்றோம்.

அப்படி தோற்றுவித்த இறைவனை, தொழுது, வழிபட்டு இறுதியில் அவனடி சேர வேண்டும். அப்படி இறைவனடி சேர்வதற்கு ஆலய வழிபாடு இன்றியமையாதது. ஆக, நாம் அனைவரும் ஒன்றுகூடி உடலாலும், உள்ளத்தாலும் வழிபட்டு இறைவனடி அடைவோம்.

எதிர்வரும் 1-6-2008 ஸ்ரீ சுப்ரமணியர் கோவாசனுக்குத் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற்று எல்லோருக்கும் அவனருள் கிட்ட வேண்டி,

'முன்னைப் பழம் பொருட்கும்
முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும்
பேர்த்தும் அப்பெற்றியனே'

மாதொருப் பங்கனான ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரனின் பாதக் கமலங்களை நமஸ்கரித்து ஆசி கூறுகின்றேன்.

'லும் தத் சத'

'மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெலாம்'

# அருள்மிகு ஆறுமுகப் பெருமானின் அறுபடை வீடுகள்



அருள்தரு
கல்யாண சுப்பிரமணிய சுவாமி
திருப்பரங்குன்றம்
1வது வீடு



அருள்தரு
சிவசுப்பிரமணிய சுவாமி
திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)
2வது வீடு



அருள்தரு
தண்டாயுதபாணி சுவாமி (மூலவர்)
திருஆவீனன்குடி (பழனி)
3வது வீடு



அருள்தரு
சுவாமிநாத சுவாமி
திருவேரகம் (சுவாமிமலை)
4வது வீடு



அருள்தரு
சுப்பிரமணிய சுவாமி
குன்றுதோறாடல் (திருத்தணி)
5வது வீடு



அருள்தரு
சோலைமலை முருகன்
பழமுதிர்ச்சோலை (அழகர் கோயில்)
6வது வீடு



## திருப்பணிக் குழு

அமர்ந்திருப்போர் இடமிருந்து வலம்:
எம். முனிசாமி (திருப்பணி பொருளாளர்), ஆர். கண்ணன் (கௌ.பொருளாளர்),
க. அரங்கசாமி (கௌ.செயலாளர்), ரா. கிருஷ்ணன் (தலைவர்),
கா. பரமநாதன் (துணைத் தலைவர்),
மா. திருநாவுக்கரசு (மலர்க் குழு தலைவர்),
வி. தர்மராஜா (துணை கௌ.செயலாளர்)

நிற்பவர் இடமிருந்து வலம்:
ஏ. இராஜரத்தினம், எம். பெருமாள், எஸ். அப்பளநாயுடு,
ப. ஜிவா, அர. பிரகாஷ் வேலு, எஸ். மணி, சா. துரைசாமி,
மு. தஞ்சப்பன், சோ. ராமந்துலு.



## ஆலயத் தொண்டர்கள்

நிற்பவர் இடமிருந்து வலம்
மகாலிங்கம், சரஜணன், பிரகாஷ் வேலு,

அமர்ந்திருப்போர் இடமிருந்து வலம்
மோகன், சங்கர், ஆறுமுகம், சத்தியா

## எமை அரசாள வந்த முருகா!

கவிப்பேரரசர்கெலாம் பேராசர் கண்ணதாசன்

வீறு தமிழ்ப் பாலுண்டு
வெற்றிக்கு வேல் கொண்டு
ஆறுதலைத் தந்த முருகா!

ஏறுமயில் சேவ லென
சூரபதன் மேனி இரு
கூறுபட வென்ற முருகா!

ஆறுபடை வீடுமலை
மீதுகொடி யாட எமை
அரசாள வந்த முருகா!

அந்த நிடமே பெரிய
தத்துவ முரைத் தரிய
வித்தென விளந்த முருகா!

ஓம் முருகா! ஓம் முருகா!
ஓம் முருகா! ஓம் முருகா!



# ஸ்ரீ தண்டாயுதபாணி

முன்னாள் வருமானவரித் தலைமை இயக்குநர், சித்தாந்தகலாநிதி,
சித்தாந்த சரபம்
டான்ஸ்ரீ மு. சோமசுந்தரம் பி.ஏ., பி. காம்., பி. எஸ். எம்., ஜே. எம். என்., கே. எம். என்.
கோலாலம்பூர்



"அருவமு முருவுமாகி அநாதியாய் பலவான்யான்றாய்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங் குதித்தனன் உலகமுய்ய!

-கந்த புராணத் திருவவதாரப் படலம் (செய்யும் 92)

இறைவன், உயிர்களை உலகங்களிற் பிறக்கச் செய்து, வாழும்படி வழிநடத்திப் படிமுறையில் பக்குவமடையச் செய்து, அருள் புரியப் பலநிலைகளில் தோற்றம் கொள்கிறான். அவை:

(1) அருவ (லய என்னும் சத்தன்) நிலை,
(2) அருஉருவ (போக என்னும் உத்தியுக்தன்) நிலை,
(3) உருவ (அதிகார என்னும் பிரவிருத்தன்) நிலை,

முதலாவதாகக் கூறப்பட்டுள்ள நிலையில் உள்நின்று அதாவது தன்மையாக உணர்த்தக் கூடிய பக்குவமுடைய ஆணவமல பந்தம் மாத்திரம் சற்றே உடைய விஞ்ஞானாகலா் (அதாவது விஞ்ஞானத்தால் கலை அகன்ற) வர்க்க உயிர்களுக்குச் சிவபெருமான் தானே தன்மையாக உணர்த்தி அருள் புரிகிறான். இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ள நிலையில் அதாவது முன்நின்று உணர்த்தக்கூடிய ஆணவம், கன்மம், ஆகிய இருமல பந்தமுடைய பிரளயாகல(அதாவது ஒரு பிரளயத்தில் கலை அகன்ற) வர்க்க உயிர்களுக்குச் சிவபெருமான் தானே தனது நிஜவடிவங்களில் ஒன்றைக் காட்டி முன்நின்று உணர்த்தி அருள் புரிகின்றான். மூன்றாவதாகக் கூறப்பட்ட மும்மல அதாவது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றின் பந்தமுடைய சகல(அதாவது முற்றும் கலையைப்பொருந்திய) வர்க்க உயிர்களுக்கு ஒரு அதிட்டான குரு அல்லது ஆவேச குருவான வடிவில் தோன்றி படர்க்கையாக, மானைக் காட்டி மானைப் பிடிக்கும் பாவனையில் உணர்த்தி அருள்புரிகிறான். இறைவன் கொள்ளும் வடிவங்கள் போகவடிவம், யோக வடிவம், வேக(உக்கிரமான) வடிவம் என மூவகைத்தும் உள்ளன.

சகல வர்க்கத்து உயிர்களை வழிநடத்திப் பக்குவமடையச் செய்து, குருவாக எழுந்தருளி அவர்களுக்கு உபதேசம் செய்து, அவர்கள் மெய்யுணர்வு பெற்ற நிலையில் அவர்களுக்கு அருள் புரிவதற்காகவே இறைவன் தனது நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகளை வெளிப்படுத்தி, அவை சரவணப் பொய்கையில் சேர்க்கப்பட்டு குளிர்ந்து, ஆறு குழந்தைகளாகத் தோன்றிய நிலையில், சிவபெருமானும் உமாதேவியும் சென்று அவற்றைக் கண்டுகளிப்புற்று உமாதேவி அக்குழந்தைகள் ஆறையும் சேர்த்தெடுத்து உச்சிமுகந்து முத்தமிட்டபோது, அக்குழந்தைகள் ஆறும் ஒருடலும், ஆறுமுகங்களும், பன்னிருகரங்களும் உடையதாகி, அந்நிலையில் உமாதேவி குழந்தைக்குக் கந்தன் எனப் பெயர் சூட்டினாள். கந்தன் என்பதற்கு இணைக்கப்பட்டவன், உயிர்களுக்குப் பற்றுக்கோடாக, அண்டத்திலும் பிண்டத்திலும் ஆதார மூர்த்தியாக இருப்பவன் என்று பொருள் மேலே குறிப்பிடப்பட்டுள்ள கந்தபுராணச் செய்யுளின் உட்குறிப்பு இதுவே.

இச்சிவபாலனுக்கு விளங்கிய மற்றும் பல பெயர்கள்: சுப்பிரமணியன், முருகன், குமரன், குகன், விசாகன், சத்திரன், சரவணபவன், காங்கேயன், கார்த்திகேயன், கடம்பன், சண்முகன், ஆறுமுகன், தேவசேனாபதி, தாரஹரி, சேனானி, பிரமசாஸ்தா, வள்ளி கல்யாண சுந்தரர், பாலசுவாமி, கிரவுஞ்ச பேதனர், செவ்வேள், சிகிவாகனர், செங்கோட்டன், சிவகுருநாதன், கதிர்வேலன், ஞானபண்டிதன், வேலாயுதன், தண்டாயுதபாணி, பழனியாண்டவர்; மேலும் சம்பவங்களை ஒட்டி ஏற்பட்ட பல பெயர்களும் உண்டு. அவற்றை எல்லாம் கூறின் மிக விரியும்.

இவ்வாறு தோற்றமுடைய முருகப் பெருமானின் சிறப்பை, அவரது திருவருளைப் பெற்ற நக்கீர தேவர் பத்துப்பாட்டிற்குக் கடவுள் வாழ்த்தாக அமைந்த திருமுருகாற்றுப்படையில் 317 வரிகளிலும், முருகப் பெருமானால் திருவருணையில் தடுத்தாட் கொள்ளப்பட்ட அருணகிரிநாத சுவாமிகள் அவரது உபதேசத்தைப் பெற்று அருளிய திருப்புகழில், ஆறுபடை வீட்டுத் திருப்புகழாக 362 செய்யுட்களிலும் விளக்கிக் கூறியுள்ளது ஈண்டு குறிப்பிடத் தக்கன.

## ஆறுபடை வீடுகளில் முதலாவது திருப்பரங்குன்றம்

இது மதுரைக்குத் தென்மேற்கில் நான்கு மைலில் உள்ளத் தலம். தெய்வானையைத் திருமணம் புரிந்த தலம். சம்பந்தர், அப்பர், பாடல் பெற்ற தலம். தீர்த்தம் சரவணப்பொய்கை. மழைவளம் வரத்தக்கதலம். நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடி, பூதத்தார் தானும் மற்றும் 999 பேரும் சிறைப்படுத்தப்பட்டிருந்த குகை, வேலாயுதப் பெருமானின் திருவருளால், வெடித்து எல்லோரும் விடுதலையடைந்த தலம். இதற்குக் கிரிபுராணம் உண்டு. இத்தலத்திற்குப் பரங்கிரி, பரங்குன்று, திண்குன்று, பரகிரி, பரமாகிரி, பரல்சிலம்பு என்ற பெயர்களும் உண்டு. சத்தியுடன் கூடிப் பொதுநிலைக்கு வந்து படைத்தலாகித் தொழில்களை நடத்துவைக் குறிப்பது, இப்படை வீடு.

## ஆறுபடை வீடுகளில் இரண்டாவதான திருச்சீரலைவாய்(திருச்செந்தூர்)

திருநெல்வேலியில் இருந்து 35 மைலில் உள்ள தலம். கடற்கரையில் உள்ளது. குமரகுருபரர் முருகன் அருள் பெற்று வாய்பேசத் தொடங்கியதும் "கந்தர் கலிவெண்பா", பாடிய தலம். சுந்த மாதனம், சுந்தனாசலம், திருச்செந்தில் என்ற பெயர்களும் இதற்கு உண்டு. சமுத்திர தீர்த்தமும், நாணிக்கிணற்றுத் தீர்த்தமும் விசேடமானவை. இதற்கு பிரம்மா சமுத்திர தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து இழந்த தலையைப் பெற்றதாகவும், பாண்டிய மன்னின் புத்திரி அங்கசுந்தரி சாபத்தால் அடைந்த குதிரை முகம் மாறி அழகிய முகம் கிடைப்பப்பெற்ற தீர்த்தமாகையால் அதற்கு வதனா ரம்ப தீர்த்தம் என்று பெயர் ஏற்பட்டது. இங்கிருந்துதான் முருகப் பெருமான் சூர சம்ஹாரஞ் செய்ததாக வரலாறு கூறுகிறது. "செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வுற" , "கயிலை மலையனைய செந்தில்" , "மகாபுனிதன் தங்கும் செந்தில்", என்னும் திருப்புகழ் திருவாக்கால் இத்தலத்தின் பெருமை புலப்படும். "நஞ்செந்தின்மேய வள்ளி மணாளர்க்குத் தாதை கண்டாய்" என்று அப்பர் சுவாமிகள் பாடியுள்ளார். இதற்கும் தலபுராணம் உண்டு. பாச விமோசனந் செய்து உயிர்களைஅருள் வசப்படுத்துவதைக் குறிப்பது இப்படை வீடு.

## ஆறுபடை வீடுகளில் மூன்றாவது திருவாவினன்குடி(பழநி)

திண்டுக்கல்லிலிருந்து 36 மைலில் உள்ள தலம் திருவாவினன்குடி ஊர். முருகப் பெருமான் உயிருக்கு உயிராதல் தன்மையால் உலகோடு உடனாய் நிற்கும் நிலை உணர்த்தப்பட்டுள்ளது. முருகப் பிரான் திருமால் முதலிய தேவர்கள் பிரமனைச் சிறைமீட்டும் பொருட்டு வந்து தன்னைக் காண "வள்ளியம்மையாரோடு ஆவினன் குடியில் உரைதலும் உரியன்" என்று கூறப்பட்டுள்ளது. முனிவர்கள்

முன்செல்ல, கந்தர்வர் குலத்துப் பெண்டிர்கள் இனிய யாழிசைத்துக்கொண்டும், அவர்களில் ஆடவர்கள் பாடிக்கொண்டும் முனிவர்களின் பின் செல்ல, தேவர்களும், இந்திரனும், திருமாலும், சிவபெருமானும் தேவர் குலத்திற்குத் தலைவர்களாகப் பின் செல்ல, வசுக்கள், மருத்துவர், ஆதித்தர், உருத்திரர் என்னும் உயர்நிலை பெற்ற முப்பத்து மூவரோடும் பதினெண்வகைப்பட்ட தேவகணங்கள் விண் வழியாக இன்பம் மிக்க மண்ணுலகிலே வந்து தோன்றி வள்ளி நாச்சியாருடனாய் முருகப் பெருமானைத் திருவாவினன் குடியென்னும் ஊரில் கோயில் கொண்டிருப்பவனைக் காண்கின்றனர். திருவாவினன்குடியில் மேலேயுள்ள சிவகிரி, சத்திகிரி, என்னும் மலைகளுள் சத்திகிரியில் சத்திதரனாகிய முருகப் பெருமான் ஸ்ரீ தண்டாயுதபாணியாகத் துறவுக் கோலத்தில் எழுந்தருளியிருப்பதாலும், அக்கோலத்தில் இருப்பவரைப் பார்வதி தேவியார், உலகைச் சுற்றி முதலில் வந்து சேர்ந்து தாய் தந்தையரைச் சேவிப்பவர்க்கு மாங்கனி கொடுக்கப்படுகிற சம்பவத்தில் முருகப் பெருமானுக்கு மாங்கனி கொடுக்கப்படாததற்குக் காரணம் "பழம் நீ" என்பதே, என்று கூறியது சிவபெருமான் பார்வதி தேவியாரிடம் முருகப் பெருமான் "ஆதலினால் நமது சத்தி அறுமுகன், அவனும் யாமும் பேதமன்றால், நம் போன்ற பிரிவிலன், யாண்டும் நின்றான், ஏதமில் குழவிபோல்வான், யாவையும் உணர்ந்தான், சீரும், போதமும், அழிவில் வீடும் போற்றினர்க்கு அருளவல்லான்" என்று கூறியதால் "பழம் நீ" என்றது, முருகப் பெருமான் ஆருயிர்களுக்கும் பேரா இயற்கைப் பேரின்பமயமான முத்திக் கனியை அருள் பவனாகையால், அவனுக்கு மாங்கனி கொடுக்கப்படாடதின் உட்குறிப்புபின் அடிப்படையிலேயே என்பதும், அத்தகைய பிரான் தண்டாயுத பாணிக்கோலத்தில் சத்திமலையில் கோயில் கொண்டெழுந்தருளியதால் அம்மலை பழநி என்றாயிற்று. கிரிப் பிரதஷணம் வரலாம் தலபுராணமும் உண்டு. பழநி ஊரிலுல் சுப்பிரமணிய சுவாமி கோயில் இருக்கிறது. அதற்கும் சிவகிரி, சிவமலை, சித்தன் வாழ்வு, பழனாகிரி என்ற பெயர்களுமுண்டு. கந்தர் அலங்காரத்தில் "படிக்கின்றிலைப் பழநித்திருநாமம் படிப்ப வர்தாள் முடிக் கின்றிலை" என்றும், திருப்புகழ் "சிவமயமாம் நின் பழநி", "பதினாலுலகோர் புகழ் பழநி", "காசியின் மீறிய பழநியங் கிரி", "அதிசயம் அநேகமுற்ற பழநிமலை" என்றெல்லாம் இத்தலத்தைச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. மலையில் உள்ள ஸ்ரீ தண்டாயுதபாணித் திருக்கோலப் பாசநீக்கம் அடைந்த உயிர் உலகத்தைத் துறந்து சிவனையே தியானித்து சிவயோகநிட்டையில் நிலைபெறுவதை உணர்த்துகிறது.

வெருங்கர்மயோகம் சிவயோகத்தை நோக்க அவயோகமே என்பதும், பதஞ்சலியின்யோக தரிசனம், ஹடயோகம் போன்றவை உடல் நலத்துகே ஏதுவாகுமேயன்றி, சிவயோகத்திற்கு நிகராகாது என்பதும், அருணகிரிகிரிநாத சுவாமிகள் அருளிய கந்தர் அலங்காரச் செய்யுள் 71 "துருத்தி என்னும்படி கும்பித்து வாயுவைச் சுற்றி முறித்து அருத்தி உடம்பை ஒருக்கில் என்னாம், சிவயோகம் எனுங்கருத்தையறிந்து முகமாறுடைக் குருநாதன் சொன்ன கருத்தை மனத்திலிருத்தும் கண்டீர் முத்திகைக் கண்டதே" என்றதும் ஈண்டுகுறிப்பிடத்தக்கன. தண்டபாணி என்ற சொற்றொடரில், தண்டு என்ற சொல்லின் அகராதிப் பொருட்கள்(1)கோல், (2)கதை, (3)உலக்கை, (4)முதுகுத்தண்டு(spinal column அதாவது சுழுமுனைநாடி) என்பனவாகும். இச்சொல்லை வினைச் சொல்லாக உபயோகப் படுத்தும்போது (1)வருத்து அதாவது தண்டித்தல் செய், (2)இணைத்தல் செய்(to join அதாவது செறியச் செய்) என்பனவாகும். எனவே ஸ்ரீ தண்டாயுதபாணிக்கோலம் உயிர்களை இறைவனோடு இணைக்கும் அல்லது செறிந்திருக்கச் செய்யும் யோக நிலையைக் குறிப்பது. தண்டாயுதம் ஞானநிலையைப் பெறுவதற்கு ஏதுவான யோகநிலையைப் பெறுவதற்கு ஏதுவான யோகநிலையையும், வேலாயுதம் ஞான நிலையையும் முறையே பெறச் செய்வன.

## திருமுருகாற்றுப்படையில் நான்காவது வீடாகிய திருவேரகம்(சுவாமிமலை).

கும்பகோணத்திற்கு மேற்கே நான்கு மைலில் உள்ள தலம். முருகப் பெருமான் சிவபிரானுக்குப் பிரணவோபதேசம் செய்த திருப்பதி. இதனால் இத்தலத்திற்குச் சுவாமிமலை, சுவாமிக்கு சுவாமிநாதன், தகப்பன் சுவாமி, புத்ர குருக்கள் என்ற திருருநாமங்கள் வழங்கி வருகின்றன. நக்கீர தேவர் சுவாமியை "வாரிது வந்து ஏரகத் துறைதலும் உரியன்" என்கிறார். திருமுருகாற்றுப்படையில் அருணகிரிநாத சுவாமிகள் பாததரிசனம் பெற்ற தலம் இது. அருணகிரிநாதர் "பரமகுருக்கொரு குருக்களென முத்தர் புகழ் தம்பிரானே" என்கிறார். இப்படை வீடு பக்குவமடைந்த ஆன்மாவுக்குக் குருவாக எழுந்தருளி உபதேசசித்து மெய்யுணர்வளிப்பதைக் குறிப்பது.

## திருமுருகாற்றுப் படையில் ஐந்தாவது படை வீடாகிய குன்று தோராடல் மலைகள் மீதுள்ள பலமுருகதலங்களுக்கும் பொதுவாக உரியது.

முருகப் பெருமான் குறிஞ்சி நிலமக்கள் வணங்கும் தமிழ்த் தெய்வமாகையால் "மலைகிழவோன்", "கிரிராஜன்", "குறிஞ்சி வேந்தன்", என்றெல்லாம் விளங்குகின்றான். குறிப்பாகத் தணிகைமலை, வள்ளிமலை, திருச்செங்கோடு, குன்றக்குடி போன்ற புகழ்பெற்ற தலங்களில் அடங்கும். மெய்யுணர்வு பெற்ற உயிர் மூர்த்தி, தலம், மூர்த்த உணர்வுடன் சிவநல்வினையில் ஈடுபட்டிருப்பதை இப்படைவீடு உணர்த்துகிறது.

## திருமுருகாற்றுப்படையில் ஆறாவது படை வீடாகிய பழமுதிர்ச்சோலை

மதுரைக்கு வடக்கே பன்னிரண்டு மைலிலுள்ள தலம். இத்தலத்திற்கு அழகர் கோயில் என்றும் பெயர் உண்டு. இது அடிவாரத்தில் விஷ்ணு தலமாகவும், மேல்மலை முருகத்தலமாகவும், இயற்கை வளமிக்க சோலையாக இருப்பதால் சோலைமலை எனவும் அமைந்துள்ளது. அருவியை உடையதால் "நூபுரம் இரங்கு கங்கை" என்றதால் சிலம்பாறு ஒலிக்கும் தலமாக உள்ளது. கந்தர் அந்தாதியில் இத்தலம், "தண்கார்வரை", எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. பரிபாடல் "மாலிருஞ் குன்றம்" எனவும், "இருங்குன்றம்" எனவும் கூறுகின்றது. "திருமாலிருஞ் சோலை" எனவும் வழங்குகின்றது. இத்தலத்துப் பிரதான மூர்த்தியின் பெயர் "பரமசாமி" என்று கல்வெட்டுகளிற் காணப்படுவதால், இத்தாலத்தில் முன்பு சிவாலயமும் இருந்ததெனத் தெரியலாம். சிலப்பதிகாரத்தில் காடுகாண் காதை இதைக் குறிப்பிடுகின்றது. இங்கு சரவணப் பொய்கை உள்ளது. இப்படை வீடு உயிர்கள் முத்திப் பேறடைவதைக் குறிப்பிடும் தலமாக உள்ளது.

இந்த ஆறுபடை வீட்டின் முக்கியத்துவத்தைக் குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவின் இறுதியில் "ஆறு திருப்பதி கண்டு ஆறெழுத்தும் அன்பினுடன் கூறுமவர் சிந்தை குடி கொண்டோனே" எனப் புகழ்ந்துள்ளார்.

## "ஸ்ரீ தண்டாயுதபாணி"

இனி மூன்றாவது படை வீடாகிய பழநிமலையில் ஸ்ரீ தண்டயுதபாணியாகத், தலையில் உருத்திராஷக்கண்ணியும், நெற்றியில் திரிபுண்டரமாகத் திருநீறும், கண்டத்தில் ருத்திராஷமும், கழுத்தில் ருத்திராஷக் கண்டிகை(மாலை)யும், கையில் கண்டமும், அரையில் கோவணமும், தரித்த வடிவத்தில் துறவுநிலையையும் சிவயோக சாதனையையும் உணர்த்தும் பழநி ஆண்டவராக விளங்குகின்றார். இக்கோலத்தை "மணிமாலை" என்னும் தொகுப்பு நூலில் செய்யுள் 6 கையில்

தண்டமும், மருங்கில்ஏருகை, மார்பில் அசையும் மாலை, அருகில் அஞ்சும் வேல், காதில் மகர குண்டலம், இடுப்பில் நல் அரைஞான் என்னே அவன் அழகு எனக் குறிப்பிடுகிறது. அருணகிரிநாத சுவாமிகள் கந்தர் அநுபூதி செய்யுள் 15ல் "குருபுங்கவஎண்குண பஞ்சரனே" என்றும், செய்யுள் 41ல் "யோகாசிவஞானோப தேசிகனே" என்றும், செய்யுள் 51ல் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்றும், மேலும் அவர் திருப்புகழ் செய்யுட்கள் 871லும், 1212லும் பழநிப்பதியில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ தண்டாயுதபாணியை விளித்து அருள் பெறவும், ஞானிகளோடு இணங்கவும் பிரார்த்தித்துப் பாடியுள்ளார். திருவகுப்பில் முதலாவது வகுப்பாகச் சீர்பாத வகுப்பையும், இருபத்து நான்காவது வகுப்பாகத் திருப்பழநி வகுப்பையும், கடைசியில் இருபந்தைந்தாவது வகுப்பாகத் திருப்ரங்கிரி வகுப்பையும் அமைத்து நூலை முடித்திருப்பதும் திருவடிப்பேறே உயிரின் வாழ்க்கை இலஷியம் என்பதையும், உலகு உடல் யான் எனது என்னும் உயிர்ப்பற்றற்ற முழுத் துறவு நிலையிலான சிவயோகத்தாலேயே உயிர்த்திருவடியைப் பொருந்திச் சிவபோகமான பேரா இயற்கைப் பேரின்பத்தை எப்போதும் துய்த்துக்கொண்டு முடிந்த முத்தி நிலையில் ஆனந்தமேலீட்டில் ஆழ்ந்திருக்கும் என்பதையும் குறிப்பதாகும்.

24. திருப்பழநி வகுப்பு

"எந்த வினையும் பாவமும் எந்த விடமும் படரும்
எந்த இகலும் பழியும் எந்த வழுவும் பிணியும்
எந்த இகழ்வும் கொடிய எந்த வசியும்
சிறிதும் அணுகா

எந்த இரவும் தனிமை எந்த வழியும் புகுத
எந்த இடமும் சபையில் எந்த முகமும்
புகலும் எந்தமொழியும் தமிழும் எந்த
இசையும் பெருமை சிதராமலே

வந்தனை செய்து உன் சரண நம்புதல் புரிந்த
அருள் வந்து அனுதினந்தனிலும் நெஞ்சில்
நினை வின்படி வரம்தர வந்தருள்
இதம் பெறுவதன்றி நெடுவலை வீசியே

வஞ்சவிழி சண்டன் உறுகின்ற பொழுதும்
குமர கந்த என நன்கு அறையவும்
தெளிவு தந்து உயிர் வருந்து பயமும்
தனிமையும் தவிர அஞ்சலென வரவேணும்
----------------------------------------------
----------தென் பழநியம் பதியின் முருகேசனே"
(சண்டன் = எமன்)

மேலும் அருணைகிரிநாத சுவாமிகள் பழநித் திருப்புகழில் யோக நிலையில் விளங்கும் பழநியாண்டவரை வழிபடுவோர் பெறும் பேறுகளை 130 பாடல்களில் கூறியவற்றுள், 42 பேறுகளைக் கீழே காண்போம்:

1. மாகயிலையிலேகும் அருள்பெறுவர்
2. மாதர் மயக்கத்தை மாயா காரியமென அறியும் அறிவைப் பெறுவர்.
3. ஞானிகளோடு இணங்கும் நுண்ணறிவைப் பெறுவர்.
4. பூவும் நீரும் சொரிந்து இருபாத பங்கயத்தை வணங்கிப் பூசை செய்யும் அருளைப் பெறுவர்.

5. முற்றும் உணர்ந்த தியான மூர்த்தியான நிலையில் உள்ளத் தாமரையில் விளங்குகின்ற மௌன சுந்தர ரூபியான யோக நாயகனால் ஆண்டருளப் பெறுவர்.
6. திருப்புகழைத் தினந்தோறும் தவறாமல் பாடவேண்டுமென்ற அன்பை(பக்தி சிரத்தையை)ப் பெறுவர்.
7. தண்டாயுத பாணியாக விளங்கும் தேசிகர் அருளிய உபதேச மந்திரப் பொருளையே துணையாகக் கொள்ள அருள் பெறுவர்.
8. உயிர் தன் வசமழிந்து தனக்கு உள்ள சேமநிதி அந்த தண்டாயுத பாணியே என நினைத்து அப்பெருமானையே புகழ்வர்.
9. அறிவு மனத்திற் பெருகி வரவும், இடர்கள் நீங்கவும், திருவருளா ஞான இன்பத்தை அருள பெறுவர்.
10. பக்தர்களுக்கு மயில்மீது அற்புதமாக எழுந்தருளி வருகின்ற காட்சியுடன் அருளும் பெறுவர்.
11. இப்பெருமானின் திருவடிகளைப் பரவுதல் நல்லதென்று மனத்தில் அறிந்து, என்றும் திருக்கோயிலுக்குச் சென்று தொழுகின்ற பெருமையின் பண்பைத் தனது அறிவினில் அவனருளால் பெற்று, அவ்வருளால் இன்பமும் நற்பண்பும் உற்சாகமும் சேர்ந்த பூரண அன்பைப் பெறுவதற்கான வழியும் அருளப் பெறுவர்.
12. பொதுமகளின் கலவிச்சையலின் இன்பமே இனிமையானதென்று மனம் நாள் தோறும் அலையாதபடி பெருமானின் கருணை வழியே ஆண்டருளப் பெறுவர்.

ஸ்ரீ தண்டாயுதபாணியை வழிபட்டுப் பிரார்த்திக்க வேண்டியன:

13. இறைவனின் அன்பை வேண்டிப் பிரார்த்திப்பர்
14. அடியாரோடு கூடப் பிரார்த்திப்பர்
15. திருவடியைப் பற்றி நின்று ஈடேறப் பிரார்த்திப்பர்
16. பிறவிக் கடல்விட்டு உயர்நற்கதியைப்பெற அருளை நாடிப் பிரார்திப்பர்.
17. இறைவனது உயர்வும் ஒப்புமிலாத கிருனபனயத்தரவும், ஓர் உபதேசச் சொல்லையருளவும் பிரார்த்திப்பர்.
18. இறைவனைத் தியானிக்கும் கருத்தையும் ஞானத்தையும் அருளப் பிரார்த்திப்பர்.
19. தன்னையும் சஞ்சரிக்கும் மனத்தையும் இறைவசப் படுமாறு அருள்புரியவும் அடிமைகொள்ளவும் பிரார்த்திப்பர்.
20. கீர்த்தி உற அதாவது பிரசித்தமடைய அன்புகூர்ந்து அருளவும், திருவடியைத் தந்தருளவும் பிரார்த்திப்பர்.
21. அரகர சிவாய என்று தினமும் நினைக்க அருள் புரியப் பிரார்த்திப்பர்.
22. மெய்ஞான இன்ப அமுதை ஒழியாதருந்த அருள் புரியப் பிரார்த்திப்பர்.
23. இருவினை பொதிந்த பிறப்பு இறப்பை ஒழிக்கத் திருவடியை வணங்க அருள்பாலிக்குமாறு பிரார்த்திப்பர்.
24. தண்டையணிந்த திருவடியைத் தனது தலையிற் சூடி அழுது அழுது அருளை, விரும்பி இறைவனது இனிய புகழை விளம்ப அருள்புரியப் பிரார்த்திப்பர்.
25. இறைவனது காவிய நூல் ஆராயும்போது இடர்பாடு ஏற்படாதிருக்க அருளவேண்டுமெனப் பிரார்த்திப்பர்.
26. பழநிக்குப் போய் பிறவி என்கின்ற வினை நீங்கத் தரிசித்துக் குராமலர்த் திருவடியை பற்றுப்படியான நாளைப் பெரிதும் விரும்பிப் பிரார்த்திப்பர்.
27. இறைவனைப் போற்றி வழிபடும் பணியைத் தந்தருளப் பிராத்திப்பர்.
28. பழநி மாமலையில் வீற்றிருக்கும் பெருமானை முத்தியருளப் பிரார்த்திப்பர்.
29. எமனது பாசக்கயினின்றும் விலகி பழநியாண்டவரது திருவடித் தாமரையை அடைந்து தமிழ்க் கவிகளைவோதிப் பணிந்துருகும் படியான அன்பையருளப் பிரார்த்திப்பர்.

30. பரமஞான மயமான சிவகதியைப் பெறத் திருநீற்றை, நல்ல நிலையைத்தான்பெற அருளித் திருவடியையும் தந்தருளப் பிரார்த்திப்பர்.
31. இக்கலியுகத்தே புகழ்ச்சிவத்தே பதித்து அருள்வாயே எனப் பிரார்த்திப்பர்.
32. தன்மனது பதமுற எனது கலை பதமருள்வாயே என, அதாவது திருவடி தீக்ஷை பெறப் பிரார்த்திப்பர்.
33. சீவாத்மாவும் இறைவனும் ஆகிய இருவரும் ஒன்று சேரும் முடிவை அடைந்து சிவஞானம் என்னும் யானையின் மேல் கூறி அற்புத நிற் குண நிலையைப் பெற்றுப் பொலிவுற அருளப் பிரார்த்திப்பர்.
34. கல்விக்குமுடிவில்லை, அதுமுடியப்பெருமானை நின்று பக்தியால் செம்மையான சொற்களால் துதிக்க அருள்புரியப் பிரார்த்திப்பர்.
35. மெய்ப்பக்தியினைப் பெறுமாறு உள்ளம் குளிரும் புத்தியை அருளப் பிரார்த்திப்பர்.
36. சிவலோகத்தில் உள்ளவர்களுடன் கூடி விளையாட அருள்புரியப் பிரார்த்திப்பர்.
37. யோகநிலையிற் கேட்கப்படும் பாட்டொலி நாதத்திலும், சிலம்பொலியுடன் கழலொலியாலும் அன்பு அன்பு பெருகும்படியாக அருளப் பிரார்த்திப்பர்.

ஸ்ரீ தண்டாயுபாணியை வழிபடுவோர் மற்றும் பெறும் பேறுகள்

38. திருப்புகழ் என்னும் சந்தப்பாவால் இறைவனைப் புகழும் உரிமையைப் பாக்கியமாகப் பெற்ற அடிமையானவன். உலக வாழ்வை விட்டு அந்த ஆண்டானையே நம்பியிருப்பான்.
39. செய்யுள் 152இல்

"ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி
ஆகம் அணி மாதவர்கள் பாதமலர் சூடும் அடியார்கள்
பாதமே துணையதென்று நாளும்

ஏறுமயில் வாகனா, குகா, சரவணா எனது
ஈசா என மனம் உற என்றும் ஓதும்

ஏழைகள் வியாகுலம் ஈதேன வினாவில் உனை
ஏவர்புகழ்வார் மறையும் என் சொலதோ

-----------------------------------------------
-----------ஆனை முகவதெவந்துணைவா
சிகர் அண்டகூடம்
சேரும் அழகார் பழநிவாழ் குமரனே
பிரம தேவர் வரதா முருகா தம்பிரானே"

எனப் பழநிப் பெருமானை வழிபடுபவர் வியாகூலப்பட நேர்ந்தால் யார்தான் அவரை வழிபடுவர் என்று பாடியதன் மூலம், அவரை வழிபடுபவரின் வியாகூலம் நிச்சயம் தீர்ந்து அடியார் துணையையும் பெறுவர் என்று

அறுதியிட்டுக் கூறப்பட்டுள்ளது.

40. பழநிமலை என்னும் ஊரைச் சேவித்து அறியேனே பெருபுவியில் உயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே, பிற வியற நினைகுவன் என் ஆசைப் பாட்டைத்
தவிரேனோ என்றதால் ஆசையை அறுத்து மரணமிலாப் பெருவாழ்வைப் பெறுவர் என்றது.

41. பழநியாண்டவரது பிரசித்தமாகிய கனதனமொத்த மேனியும், முகம் ஆறும், அதிபல வஜ்ரவாகுவும், அயில்நுனைவெற்றி வேலதும், அரவு பிடித்த தோகை(மயிலும்), உலகமும் அதிர அரற்று கோழியும், அடியர் வழுத்திவாழ்வுறும் அபிநவ பத்மபாதமும் மறவேனே என ஆண்டவரின் திருவுருவத்தை மறவாதிருக்க அருள் பெறுவர் என்றது.

42. ஆரவாரமுடன் இருந்தாலும் விரிந்த தாமரை மலர்ப் பாதத்தை மறவாதிருக்கும் அருளைப் பெறுவர் என்றது.

திருவாவினன்குடி(பழநி)யில் அருணகிரிநாத சுவாமிகள் அருள்பெறப் பாடியதிருப்புகழ் செய்யுள் 871:

நாதவிந்து கலாதி நமோநம
வேதமந்த்ர சொரூபா நமோநம
ஞான பண்டிதசாமி நமோநம வெகுகோடி
ஞானச ம்புகுமாரா நமோநம
போகஅந்தரி பாலா நமோநம
நாக பந்தமயூரா நமோநம பரசூரர்
சேத தண்ட வினோதா நமோ நம
கீத கிண்கிணி பாதா நமோ நம
தீரசம்ப்ரம வீரா நமோ நம கிரிராஜா
தீப மங்கள ஜோதி நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவகுஞ்சரிபாகா நமோ நம அருள்தாராய்
ஈதலும் பல கோலால பூஜையும்
ஓதலும்குண ஆசார நீதியும்
ஈரமுங் குருசீர்பாத சேவையும் மறவேனே
ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை
சோழமண்டல மீதே மனோகர
ராஜ கம்பீர நாடாளு நாயக வயலூரா
ஆதரம் பயில் ஆரூரர் தோழமை
சேர்தல் கொண்டவரோடே முனாளினில்
ஆடல் வெம்பரிமீதேரிமா கயிலையிலேகி
ஆதிஅந்த உலாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே

*குறிப்பு: இத்திருப்புகழில் யோகநிலையும் போக நிலையும் கூறியிருப்பது சிவயோகத்தால் சிவபோகமடைவதை குறிப்பிடுகின்றது.*

திருவாவினன்குடி (பழநி)யில் ஞானிகளோடு இணங்க அருள் வேண்டிய திருப்புகழ் செய்யுள் 1212:

மூலமந்திரம் ஓதல் இங்கிலை
ஈவது இங்கிலை நேயம் இங்கிலை
மோனம் இங்கிலை ஞானம் இங்கிலை மடவார்கள்
மோகம் உண்டு அதிதாகம் உண்டு
அபசாரம் உண்டு அபராதம் உண்டு
இடு மூகன் என்றொரு பேரும் உண்டு அருள்பயிலாத
கோலமும் குணஈன துன்பர்கள்
வார்மையும் பலவாகி வைந்துளமு
கோர கும்பியிலே விழுந்திட நினைவாகிக்
கூடுகொண்டு உழல் வேனை அன்பொடு
ஞான நெஞ்சினர்பால் இணங்கிடு
கூர்மைதந்தினியாள வந்து அருள்புரிவாயே
பீலிவந்து உயர் ஆவிவெந்து அவ்சோகு
வெந்து அமண மூகர் நெஞ்சிடை
பீதி கொண்டிட வாதுகொண்டருள்
பேணி அங்கு எதிர் ஆறு சென்றிட எழுதுஏடு
மாறனும் பிணிதீர வஞ்சிசககர்பீறு
வெங்கழு வேற வென்றிடும் முருகோனே
ஆலமுண்டவர் சோதி அங்கணர்
பாகம் ஒன்றிய வானவ அந்தரி
ஆதிஅந்தமும் ஆனசங்கரி குமரேசா
ஆரணம் பயில் ஞானபுங்கவ
சேவல் அம்கொடியானபைங்கர
ஆவினன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே

குறிப்பு: இத்திருப்புகழில் அருணகிரி நாத சுவாமிகள் பொதுவாக மக்களுக்கு உள்ளவற்றையும் இல்லாதனவற்றையும் குறிப்பிட்டு, மக்கள் திருந்தி ஞானசம்பந்தர் போன்ற மெய் அடியார்களோடு இணங்கி நல்வாழ்வுபெற முருகப் பெருமானை வணங்கி அருள்பெற வேண்டுமென்பதை வலியுறுத்தியுள்ளார்.

“உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே”
-கந்தர் அநுபூதி செய்யுள் 51

“உல்லாச நிராகுல யோக இதச்
சல்லாப வினோதனு நீயலையோ
எல்லாமற என்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா சுரபூபதியே”
-கந்தர் அநுபூதி செய்யுள் 2

“மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்”
-கச்சியப்பசிவா சாரியர், கந்தபுராணம்

# திருமுருகன் எந்திர பந்தம்

வெண்பா வேந்தன், கவிதா மணி, சித்திரப் பாவலர், கவிஞர்
வி.இக்குவனம்






| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| முதற் சுற்று – | பா | தா | வா | கா | வ | ரு | க | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | |
| 2ஆம் சுற்று - | நா | தா | வே | தா | நா | ய | கா | |
| | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | |
| 3ஆம் சுற்று - | தா | நீ | மு | ரு | கா | போ | தா | |
| | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | |
| 4ஆம் சுற்று - | தா | யா | ய் | மே | லா | ய் | தா | பா |
| | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 |

இந்த எண் வரிசையில் படத்தைப் படிக்கவும்

பாதா வாகா வருக
நாதா வேதா நாயகா
தாநீ முருகா போதா
தாயாய் மேலாய் தாபா

**படமும் பாடலும்**
**வி. இக்குவனம், சிங்கப்பூர்**
**10-05-2008**

# மங்கல நீராட்டு விழா

*நினைவில் வாழும் சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினம் செட்டியார்*

"கும்பாபிஷேகம்" என்பது வட சொல், இதனைக் "குடமுழுக்கு" என தமிழில் வழங்கும் ஆட்சி அண்மைக் காலத்தில் ஏற்பட்டது. சேரன் செங்குட்டுவன் இமயமலையிலிருந்து கல் எடுத்து வந்து கண்ணகிக்குச் சிலை வடித்தான், வடித்த சிலையைக் கோயிலில் பிரதிட்டை செய்து மிகப் பெரிய அளவில் கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தான். அக்கும்பாபிஷேகத்தை மங்கல நீராட்டு விழா என இளங்கோ அடிகள் குறிப்பிடுகிறார். இதிலிருந்து பழங்காலத்தில் கும்பாபிஷேகத்தை மங்கல நீராட்டு விழா எனத் தமிழகத்தில் வழங்கி வந்தனர் என்பது புலனாகிறது.

கடவுள் எங்கும் நிறைந்தவர். அவரை அருவமாக வழிபடுதலே சிறப்பு என நம்மில் சிலர் கருதுகின்றனர். காற்று எங்கும் நிறைந்ததுதான், அஃது அருவமாகவே இருக்கிறது. அப்படியானால் அது கடவுள் ஆகுமா? காற்றுக்கு அழிவில்லை, படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய தொழில்களை அதனால் செய்ய இயலாது. இதனால் காற்று கடவுளாக முடியாது என்பது தெளிவு. எங்கும் நிறைந்திருப்பதும் அருவமாக இருப்பதும் கடவுளுக்குச் சிறப்பிலக்கணமாக இருக்குமானால் காற்றையே கடவுள் என்று சொல்லிவிடலாம். முற்றறிவும் எல்லாம் வல்லமையும் எல்லையில் கருணை உடைமையுமே கடவுளுக்குச் சிறப்பிலக்கணமாகும். இச்சிறப்பிலக்கணத்தை யாரும் மறுக்க இயலாது. அங்ஙனமானால் அவர் அருவமாகவே இருப்பார் என வரையறை செய்வது எங்ஙனம் பொருந்தும்? எல்லா வல்லமையும் முற்றறிவும் உடைய அவர் நினைந்த ஒரு திருமேனியைத் தன் சக்தியால் கொள்ளுவார் என்று சொன்னால் தானே அவரின் முற்றறிவுக்கும் எல்லா வல்லமைக்கும் எல்லையில் கருணை உடைமைக்கும் பொருத்தமாக இருக்கும் உருவமாக அவர் வரமாட்டார் என்றோ, வரமுடியாது என்றோ சொன்னால் அஃது அவர்க்கென்றே சொல்லப்படும் வல்லமைக்கும் கருணைக்கும் இழுக்காக முடியும் அன்றோ? இதனைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். எனவே நம் சமயம் உருவத் திருமேனியை ஒப்புக்கொள்கிறது.

அருவம் உருவத்தினும் பார்க்கச் சிறப்புடையதன்று. அருவப் பொருட்களில் பல அறிவற்ற சடமாக இருத்தல் கண்கூடு. மேலும் அருவம் உருவம்போல் எல்லைக்குட்பட்டதே ஆகும். காற்று அருவமாக இருந்தும் அஃது உடலில் படும்போது மனம் உணர்கிறது. மனம் குறிப்பிட்ட அளவுக்குமேல் எதனையும் கிரகிக்கும் ஆற்றல் அற்றது. இதனால்தான் கடவுளை மனம், வாக்கு இரண்டிற்கும் எட்டாதவன் என்று சொல்கிறோம். காற்று மனத்திற்குப் புலனாவதால் அருவமும் எல்லையுடையதே என்பது தெளிவு. கடவுள் உண்மையில் அருவமும் கடந்தவராவார். அவரின் சொரூபநிலை அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்றையும் கடந்தது. அந்நிலை சொல்லால் கூறவொண்ணாதது. நாம் அவனருளைப் பெறாமல் அந்த நிலையை உணரவராது. அந்த அருளை நாம் பெறுவதற்காகவே காணவும் கருதவும் முடியாத அவர்தம் எல்லையில் கருணை காரணமாக அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்று திருமேனிகளிலும் தோன்றி நம் வழிபாட்டை ஏற்றுக்கொள்கிறார். இதனால் அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்றும் அருள்தருவதில் ஒரு நிகரனவே என்பது பெறப்படும். எந்தத் திருமேனியில் வழிபாடு செய்தாலும் பயனில் ஏற்றத்தாழ்வு இருப்பதற்கில்லை.

நம் திருக்கோயில்கள் அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூவகை

திருமேனிகளையும் உணர்த்தும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. கோயிலெங்கும் கடவுள் வியாபித்திருக்கிறார் என்னும் உணர்வு அவரின் அருவத்திருமேனியையும் சிவலிங்கம் அவரின் அருவுருவத் திருமேனியையும் பிள்ளையார், முருகன், நடராசர், அம்பாள், தட்சணாமூர்த்தி முதலிய மூர்த்தங்கள் அவரின் உருவத் திருமேனியையும் உணர்த்துகின்றன.

இறைவனின் உருவத் திருமேனியைப் பெரியார்கள் பலர் நேரில் கண்டுள்ளனர். ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர், முதலிய நம் குரவர்கள் இத்திருமேனிகளைத் தாம் கண்டதாகத் தம் பாடல்களில் அருளிச்செய்துள்ளனர். அவை அகச்சான்றாக நின்று நமக்கு உண்மையை உணர்த்துகின்றன. "கண்டேன் அவர் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்" என்பது அப்பர் வாக்கு.

பெரியார்கள் கண்ட திருவுருவங்கள் பல: இறைவனுக்கென்று தனி உருவம் இல்லை. அவன் அன்பர்கள் விருப்பிற்கேற்ற திருமேனிகளில் தோன்றிக் காட்சி அளித்திருக்கின்றான். இறைவன் ஒருவனாயிருந்தும் அவன் கொண்ட மூர்த்தங்கள் பல ஆகியமைக்குக் காரணம் இஃதே ஆகும். அதி தெய்வங்களும் சிறு தெய்வங்களும் பல உண்டு. உதாரணமாக நவக்கிரகங்கள் அதிதெய்வங்களாகும். மாடன், காடன், மதுரைவீரன் முதலியவை சிறு தெய்வங்களாகும். இவை முழுமுதற் பொருளின் மூர்த்தங்கள் அல்ல. பிள்ளையார், முருகன், சிவலிங்கம், நடராசர், அம்பாள் முதலிய மூர்த்தங்களே முழுமுதற் பொருள் மூர்த்தங்களாகும். இவை ஒரே இறைவனின் வெவ்வேறு வடிவங்களாதலால் இவற்றுள் எந்த ஒன்றையும் நாம் இஷ்ட மூர்த்தமாகக் கொண்டு வழிபடலாம். பயன் ஒன்றே ஆகும். இவற்றுள் ஏற்றத்தாழ்வு இல்லை.

ஆகமங்களிலும் பெரியோர்கள் வாக்குக்களிலும் இறைவனின் உருவத் திருமேனிகள் பற்றிய விவரங்கள் காணப்படுகின்றன. அடியவர்கள் தாம் நேரில் தரிசித்த வடிவங்களில் தன்மையைத் தெளிவுற விவரித்திருப்பதால் அவ்வாக்குக்களை ஆதாரமாக வைத்தே கற்களிலும் உலோகங்களிலும் அவை வடிக்கப்பட்டுள்ளன. கற்பனையாக மனிதன் இவ்வுருவங்களை அமைத்தான் என நம்மில் சிலர் கூறுவதுண்டு. இது தவறாகும். இறைவனே காட்டக் கண்ட வடிவங்களாக இவை இருக்கின்றன என்பதற்குத் திருமுறைகள் சான்று பகர்கின்றன. தத்துவ உண்மையை உணர்த்துவதற்காக இவை அமைக்கப்பட்டன என்றும் சிலர் சொல்வதுண்டு. கடவுள் காட்டிய வடிவங்களிலிருந்து தத்துவ உண்மைகள் புலனாகின்றனவே அல்லாமல் தத்துவங்களிலிருந்து கடவுள் வடிவங்கள் புலனாகவில்லை என அறிதல் வேண்டும்.

உருவத் திருமேனிகள் பிரதிட்டை செய்யப்பெற்றிருக்கும் இடமே திருக்கோயிலாகும். திருக்கோயில்கள் இல்லாவிட்டால் இத் திருமேனிகளை நாம் தெரிந்துகொள்ள இடமில்லை. இதனால் கோயில்கள் எவ்வளவு அவசியம் என்பது இனிது விளங்கும்.

திருக்கோயில்களைப் புதிதாகக் கட்டினாலும் புதுப்பித்தாலும் கும்பாபிஷேகம் எனப்படும் மங்கல நீராட்டு விழாச் செய்யவேண்டுவது அவசியமாகும். கல்லிலோ, செம்பிலோ உருவத்தை வடிக்கிறோம். அவை கல் அல்லது செம்பு என்னும் நினைவு நம்மைவிட்டு அறவே நீங்கிப் பார்த்த மாத்திரத்திலேயே அவை இறைவனின் மூர்த்தங்கள் என்னும் நினைவு தோன்றவேண்டும். இதற்காகவே கும்பாபிஷேகக் கிரியைகள் செய்யப்படுகின்றன.

உலகம் பஞ்சபூதத்தாலானது: வான், காற்று, நெருப்பு, நீர், மண் என அவை கூறப்பெறும். இறைவன் வான் பூதத்தில் சூக்குமமாக வியாபித்திருக்கிறான். அவனை மெல்ல மெல்ல இறக்கு ஒவ்வொரு பூதத்திலும் முனைக்கச்செய்வதே கும்பாபிஷேக கிரியைத் தத்துவமாகும். இறைவன் எல்லாவற்றிலும் நிறைந்தே நிற்கிறான். ஆனால் மந்திரம் ஜபிக்கப்படும்போது, ஜபித்த இடத்தில் முனைத்து நிற்பது அவன் இயல்பு.

யாகசாலையில் குடங்களில் நீரை நிரப்பித் தேங்காய்களை அவற்றின் வாயில்களில் வைத்துப் பூஜையைத் துவக்குகிறோம். குடம் ஓர் உடல்போல் உருவகிக்கப்படுகிறது. குடத்தைச் சுற்றியுள்ள நூற்கள் நரம்புகளைக் குறிக்கும். தேங்காய் தலையையும் உள்ளே இருக்கும் நீர் இரத்தத்தையும் குறிக்கும். இவ்வாறு குடங்களைப் பாவித்து வைத்து, அருகே அக்கினிக்குண்டம் அமைத்து நெய் ஊற்றி நெருப்பை வளர்க்கிறோம். சிவாச்சாரியார்கள் சுற்றி வர இருந்து மந்திர ஒலியை இடைவிடாது எழுப்புகின்றனர். சூக்குமமாகிய ஆகாயத்தில் அருவமாக நிறைந்துள்ள இறைவன் மந்திர ஒலிக்கு வயப்பட்டு அதற்கு அடுத்த சூக்கும நிலையிலுள்ள காற்றில் வந்து முனைக்கின்றான். பின்னர் அதற்கு அடுத்த நிலையிலுள்ள - சிறிது தூலமாகிய அக்கினியில் வந்து இறங்குகிறான். அதன்பின் குடத்தில் நிரப்பப்பட்டுள்ள நீரினுள் புகுகிறான், குடம் உயிர்பெறுகிறது. மந்திர ஆற்றலால் அக்கினியிலும் பார்க்கத் தூலமாகிய நீரில் இறைவன் ஆவேசிக்கிறான். "உருவேறத் திருவேறும்" என்பது பழமொழி. மந்திர ஜபத்தில் அதிகக் கவனம் செலுத்தாமல் ஏனைய ஆரவாரக் கிரியைகளில் கவனம் செலுத்தினால் பயன் குறையும். மந்திர ஜபமே முக்கியம். ஏனைக்கிரியைகளைத் துணையாகவே செய்யவேண்டும்.

கும்பாபிஷேகத்தை நடத்துவதற்குரிய நேரம் வந்ததும் யாகசாலைகளில் உள்ள குடங்களுக்குத் தீப ஒளி காட்டி அவற்றை வலம் வந்து எடுத்துக்கொண்டு கோபுரத்தளத்திற்குச் சென்று முதன்முதல் கோபுரக் கலசத்தின் மீது குடத்திலுள்ள நீரை அபிஷேகம் செய்விக்கின்றோம்.

நீரின்கண் முனைத்து நின்ற இறைவன் மலர் தத்துவமாகிய கலசத்தின் மீது இறங்கித் திருக்கோயில் முழுதும் வியாபிக்கிறான். இதன்பின் ஏனை குடங்களிலுள்ள நீரைக் கோயிலுக்குள் சென்று அங்கே பிரதிட்டை செய்யப்பெற்றுள்ள ஒவ்வொரு மூர்த்தத்திற்கும் அபிஷேகம் செய்விக்கிறோம். இஃதே கும்பாபிஷேகம் எனப்படும். இதனால் கற்சிலையாக இருந்த வடிவங்கள் உடனே மூர்த்தி சாந்நித்தியம் பெற்று வழிபாட்டுக்குரிய தெய்வங்களாகின்றன. கல் என்னும் உணர்வு நீங்கி இறை என்னும் உணர்வு தோன்றுகிறது. நீரை விடக் "கல்" என்னும் மலர் தத்துவம் தூலம், நீரில் முனைத்த இறைவனை அதற்கடுத்த தூலப் பொருளாகிய மண்ணில் முனைக்கச் செய்வதே கும்பாபிஷேகத்தின் இறுதித் தத்துவமாகும். நீர் அபிஷேகம் இதனையே குறிக்கிறது. கும்பாபிஷேகக் கிரியைகள் கட்டிடத்தைக் கோயிலாக்கிக் கல்லைத் தெய்வமாக்கி இம்மை, மறுமை, முத்தி ஆகிய முப்பயன்களையும் நாம் பெறத் துணை செய்கின்றன என அறிதல் வேண்டும். எல்லா மூர்த்திகளும் சாந்நித்தியம் பெறுவதை விடச் சிறந்த மங்கலம் வேறில்லை. இதனாலேயே மங்கல நீராட்டு விழா என இஃது பெயர் பெற்றுள்ளது. நாம் எல்லா மங்கலமும் பெற இம் மங்கல நீராட்டு விழாவே காரணமாக அமைகிறதென்பதும் ஈண்டு நினைவு கூறத்தக்கதாகும்.

கூலிமில் உள்ள அருள்மிகு தண்டாயுதபாணி கோமில் புதுப்பிக்கப் பெற்று இப்பொழுது மங்கல நீராட்டு விழா நடைபெறுகிறது. யாவரும் எல்லா மங்கலமும் பெற்று இனிது வாழ தண்டபாணியின் திருவருளை வேண்டுகின்றோம்.



# தில்லையம்பலம்

தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகள்,பேருராதீனம்

அம்பலவாணர் அடியினைத் தொழுவார்க்கு
இன்பமும் வீடும் எளிதினில் வரும்

என்பது அருளாளர் வாக்காகும். தில்லை சிற்றம்பலவர்க்கு அன்பு பூண்டவர்க்கு அல்லல் இல்லை, அருவினையில்லை. இன்பமே எந்நாளும் வாய்க்கும். உலகில் துன்பமும் வினைகளும் அனைவருக்கும் உண்டு. அவற்றிலிருந்து விடுபட முயல்வது இயல்பு. அவை விலக நமது முயற்சியால் முழுமையாக நீங்குவதில்லை. அல்லல் ஆகிய துன்பம் தன்னால் வருவதும், பிறரால் வருவதும், ஊழால் வருவதும் என மூவகைப்படும். புலன், பொறிகளை நெறிப்படுத்தாமல் பேராசையால் வரும் பிணிகளாகும்.

பிறவுயிர்களால் வரும் துன்பம் என்பது எறும்பு, பறவை, விலங்கு ஆதியனவற்றால் வருவன. மழை, வெயில், காற்று, நீர், நிலம் ஆகியவற்றால் வரும் துன்பங்கள் ஊழால் வருவன.

அருவினை அரிய வினைகள் பிறப்பு, இறப்பு உடல்கூறு ஆகியவைகளால் இடர்ப்படுத்துவது. தொல்லை வல்வினை, தோன்றி நின்று அழிந்து பிறந்து இறந்து பிறவிப் பெருங்கடலில் ஆழ்த்துவது. எனவே இவற்றை அம்பலவாணர் பேரருள் நோக்கு நீக்கும். தலின்,

'அல்லல் என்செய்யும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தம்தான் என்செயும்
தில்லை மாநகரச் சிற்றம்பலவனார்க்கு
எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே'

என அப்பரடிகள் அருளியுள்ளார்.

தில்லை மாநகர் சிற்றம்பலவன் காட்சியில் திளைக்கும் அப்பரடிகட்குப் புறச்சூழல்களும் மகிழ்வைத் தருகின்றன. திருக்காட்சியைக் காண்கின்றார். திருமுன் நின்று காணும் அத்திருவுருவக் குறிப்புத் தமக்குத் தம் நிலையை உணர்த்துவதாகக் காண்கிறார். அயல் சமயத்தவரால் தடுமாறி நிலை குலைந்து மீண்டும் சிவனருள் பெற்றபின் முதன்முறையாக அம்பலவாணர் திருமுன் வந்த போது திருமுகக் குறிப்பு என்று வந்தாய் என்று கேட்பது போலத் தோன்றுகிறது. அன்பர்களை நோக்கிப் பிறசமயச் சூழலில் அல்லல் உற்றேன் நீங்கள் சிற்றம்பலவனை நினையுங்கள். ஒன்றியிருந்து நினைமின்கள். ஊனமாகிய மனக்குறை நீங்கும். அம்பலவன் அடி சென்று தொழுங்கள் என வழிகாட்டும் பாடல்,

'ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை
கன்றிய காலனைக் காலால் கடிந்தான் அடியவர்க்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுள் சிற்றம்பலத்து நட்டம்
என்று வந்தாய் என்னும் எம்பெருமான் தன் திருக்குறிப்பே'

என்பதாகும். நான் மயக்கத்தால் அயல்நெறி சென்று உருகிப் போற்றும் நிலையிழந்து நின்றேன். நீ மேலானவன்; காட்சியால், செம்பொருளால் ஈர்க்கும் நிலையின் நின்று அருள் புரிந்தேன். இனி உருகிப் பத்தி செய்வது எவ்வாறு? யான் செய்த பிழை கருதி இகழ்ந்து ஒதுக்க வேண்டாம். நீ மேலானவன் முழு முதல் எம்மை ஆட்கொள்ளச் சிற்றம்பலத்தில் ஆடுகின்றாய். அருட் தந்தையாகிய உன் ஆடலைக் காண்பதற்கு வந்துள்ளேன் என்பதை,

'பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகீ
எத்தினால் பத்திசெய்கேன் என்னை நீ இகழவேண்டா
முத்தனே முதல்வா தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
அத்தா உன் உடல் காண்பான் அடியனேன் வந்த வாறே'

என்று அருளியுள்ளார்.

அருட்காட்சியாகிய ஆடலில் திளைக்கின்றார். அப்பரடிகள் பிறவிப் பயன் இதுவென உணர்கிறார். அதனால் உயர்நிலை பெற்றவர்கள் பிறவி வேண்டாம் என்பர். உன் காட்சியைக் காண்பதற்கு மனிதப் பிறவி வேண்டும் என்பதை,

'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே'

கையும் தலைமிசை குவிந்தது, கண் மழை நீங்காது வழிந்தது, மனம் முதலிய கருவிகள் உருகின, எய்தற்குரிய பேறாகக் கண்ட அவ்வாடல் காட்சியால் தோன்றிய பேரார்வம் அளவிடற்கரியது என்று சேக்கிழார் பாடுகிறார்.

இத்தகைய பேரருட் காட்சிக்குரிய திருத்தலம் தில்லை. சமயக் குரவர்கள் நால்வரும் சிற்றம்பலத்தில் சென்று பாடியுள்ளனர். சேக்கிழார் திருக்களிற்றுப்படியின் பக்கமிருந்து பாடியதாக அருளியுள்ளார். தில்லைக் கோயில் வழிபாடு நின்றிருந்தபோது ஆட்சியாளர்களைக் கண்டு மீண்டும் முறையான வழிபாடு நடத்த திசிவப்பிரகாசர் ஏற்பாடு செய்த வரலாறும், திருவாவடுதுறைஆதீனக் குருமுதல்வர் நமசிவாய தேசிகர் ஆணை வழங்கியதும் அறிய முடிகிறது.

பண்ணின் இசையாக விளங்கும் அம்பலவாணரைச் சாந்தலிங்கர் ஞானக்கண் கொண்டவர்களுக்கு மட்டுமல்லாது ஊனக் கண் கொண்டவர்க்கும் விடை மீது நாடி வந்து அருளக்கூடியவர் என்பதை,

'பிரானே திருத்தில்லையுளாய் அன்(று) இப் பேதையேன் முன்
ஓரானேறிவர்ந் தம்பிகையோ டெளிதோடி வந்தாய்
வரானோ இனம் எம்மிறை என்றுணை நாடிவாடி
இராநாயடியேற் கெதிர்தோன்றில்லை இன்றி தென்ன'

என மனமுருகப் பாடியுள்ளார்.

தில்லைக் கோயில் வழிப்பாட்டிற்குத் தடைவந்தபோது, கோயில் செம்மையுற வழிகண்டவர் சிவப்பிரகாசராவார். இவரே, ஞான ஆசிரியருமாவார். சிவபெருமானே ஞான ஆசிரியராக வந்தார் என்பதைச் சாந்தலிங்கர்.

'தில்லைப்பதிமேய சிவப்பிரகாச சனேயோ
தொல்லைப் பிறவா நெறிமேவிய தோன்றலேயோ
அல்லர் பிறவிக்(கு) இளைத்தேன் தனை அஞ்சலென்றோர்
சொல்லைப்பகராய் விடைமீ தினம்தோன்றி நின்றே'

எனத் தில்லையில் ஆட்கொண்ட திறத்தையும் பழமையான பிறவாநெறித் தலமாகிய திருப்பேரூரில் எழுந்தருளி அருள் வழங்குபவரும் கூத்தப் பெருமானே என உணர்ந்து,

'தொல்லைப் பிறவா நெறிமேவிய தோன்றலேயோ'

என அருளியுள்ளார்.

திருப்பேரூர் அம்பலவாணர் அருள்பெற்ற சாந்தலிங்கர் தமக்குக் குருவாகி வந்தவர், விடைமீதேறி வந்து காட்சி கொடுத்தார். அருள்நிலையில் நிற்பதற்கும் திருப்பேரூர் பிறவா நெறித்தலத்தில் அருள்சுந்தரர் என்பதை,

'சார்ந்தாய் குருவாதியவாய் விடைதன்னில் வந்தாய்
கூர்ந்தாய் அருளிற் பிறவாநெறி கூட்டுவித்தாய்
ஓர்ந்தேன் குறையின் றெனினும் குறைபுண்டு கண்டாய்
பேர்ந்தோடும் என் நெஞ்சுள் உன்னன் புபிறக்குமட்டே'

என்னும் தில்லை கண்ட காட்சி மேலைச் சிதம்பரமாகிய திருப்பேரூரில் அருளார்ந்த வாழ்வைப் பெறுவதற்குத் துணை புரிந்ததாகத் தம் வரலாற்றுச் செய்தியையும் வெளிப்படுத்தியுள்ளார். மேலும்,

'எண்ணும் வடிவே தினிநீ புனைந் தெய்தினாலும்
திண்ணம் என்அவா அகலா அச்சிதம் பரத்தே'

என அம்பலவாணர் திருவருளை நினைந்து போற்றியுள்ளார்.

எண்ணும் வடிவெய்தினாலும் திண்ணம் என அவா, அகால அச்சிதம்பரத்தே என்று அகநெகிழ்ந்து போற்றியதால் நமது ஆதீனம் போற்றும் அம்பலவாணரது வழிபாட்டுத் திருத்தலம் தில்லை. தில்லைச் சிற்றம்பல மேடை நால்வரும் சென்று வழிபட சிறப்புடையது. உமாபதியார் போற்றி வழிபாடாற்றிய பெருமையுடையது. அயல் மொழி திக்கத்தால் அதன் சார்புடையவர்கள் திருமுறை பாடத் தடையாக இருந்தனர்.

திருநெறிய தெய்வத் தமிழுக்கு இடம் இல்லை என்று தமிழகத் திருக்கோயிலில் கூறுவது ஏற்புடையதா? கீழே இருந்துதான் பாட வேண்டும் என்பது திருமுறைக்குச் சிறப்பு தருவதாகுமா? என்ற கேள்வி பலரிடத்தும் உருவாகியது. சிற்றம்பலமேடையில் திருமுறை ஓதவேண்டும் என்ற விருப்பத்தை அறநிலையத்துறை ஏற்று ஆணை வழங்கியது. தடைகளையும் சிக்கல்களையும் தவிர்த்து மக்கள் எழுச்சியால் திருமுறைகளை அனைவரும் சிற்றம்பல மேடையில் பாட வாய்ப்பு ஏற்பட்டிருப்பது தமிழ்ச் சைவ நெறியாளர்கட்கு மனநிறைவைத் தருகிறது.

சிற்றம்பலமேடை திருமுறை பாடுவதற்கு உரியது என்பதைச் சிவநெறியாளர்கள் நீண்ட காலமாகத் தெரிவித்துப் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டனர் என்பது அனைவரும் அறிந்ததே. தமிழார்வலர்கள் தலையீட்டினையும் மறப்பதற்கில்லை. எனினும் தில்லைச் சமய அமைப்புகள், ஓதுவார்கள் இதில் நாளும் பங்கு கொள்வது தெய்வத்தமிழ்ப் பணியாகும்.



உ
சிவமயம்

# வாயுரை தராத மெய்யுரை

மா.திருநாவுக்கரசு (எ) மா.தி.அரசு

பாண்டி நாட்டில் தாமிரபரணி நதியின் வடகரையில் திருவைகுண்டத்தில், முருகப் பெருமான் மீது அளவுகடந்த பக்தியும் தமிழ்த் திறமையும் கொண்ட சண்முக சிகாமணிக் கவிராயர், அவரது துணைவியார் சிவகாம சுந்தரி அம்மையாருக்கும் கி.பி1625ல் ஙித் திங்கள் திருவாதிரை அன்று ஓர் அழகிய ஆண்மகவு பிறந்தது. பெற்றோர் குழந்தையை மிகச் சிறப்பாக வளர்த்து வந்தனர், என்றாலும் குழந்தை ஐந்தாண்டளவும் வாய்பேசாதிருந்தமை கண்ட கவிராயரும் சிவகாமசுந்தரியும் குழந்தையைத் திருச்செந்தூர் சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்று தங்கள் செல்வனுக்கு ஏற்பட்டுள்ள குறையைத் தீர்க்குமாறு வேண்டி, உப்பில்லா வெறுஞ் சோற்றினை ஒருவேளை உண்டு கடுமையான விரதம் மேற்கொண்டனர். நாற்பத்தாறாம் நாள் ஆதவன் மறைவிற்குப்பின் செந்திலாண்டவன் அர்ச்சகர் வடிவில் தோன்றி பூ ஒன்றினைக் காண்பித்து 'இது என்ன?' எனக்கேட்டு அருள்பாலித்தார். செல்வன் 'பூ' என்று வாய்திறந்து பேசினான். சங்கத் தமிழின் தலைமைப் புலவனாகிய அறுமுகப்பெருமான் அருளால் 'பூமேவு செங்கமலப் புத்தேளும்' எனத் தொடங்கி பாவினத்தில் உயர்ந்ததான பஃறொடை வெண்பாவில் கந்தர் கலி-வெண்பாவினை ஐந்தே வயதில் குழந்தை பாடியது. இதனைக் கண்ட உலகத்தோர் அதிசயித்துப் புகழ்ந்தனர். முருகக் கடவுள் கனவிலே குமர வடிவங் கொண்டு 'நீ குருபரனாகுக' என்றருளியதால் அன்றுமுதல் குமர குருபரரென அழைக்கப்பட்டார்.

முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போனாகிய குகப் பெருமான் அருளால் தமிழ் இலக்கண இலக்கியங்களையும், வேதம், ஆகமம், யோகம், ஞானம் முதலான அனைத்தையும் கற்றுத் தேர்ந்தார் குமரகுருபரர்.

பின்பு தம் ஊரில் எழுந்தருளியிருக்கும் கைலாச நாதர் மீது 'கைலைக் கலம்பகம்' என்னும் பனுவலைப் பாடினார். ஓதாது உணர்ந்த ஞானச் செம்மலாகிய குருபரர் பல்வேறு திருத்தலங்கட்கும் சென்று வணங்கவேண்டுமென்று ஆவல் கொண்டு மதுரைக்கு வந்து திருமலை நாயக்கர் முன்னிலையில் மீனாட்சி அம்மையின் மீது பிள்ளைத் தமிழ் ஒன்றை அரங்கேற்றினார்.

'பிள்ளைத் தமிழுக்கு விளக்கங்கூறவந்த மகாவித்துவான் முனைவர் சி.அருணை வடிவேலு முதலியார் கூலிம் நகரத்தார் ஸ்ரீ தண்டாயுதபாணி கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலரில்(22-1-1999)ல், "பிள்ளைத் தமிழாவது உயர்ந்தோராயினும் கடவுளராயினும் அவர்களைக் குழந்தையாகப் பாவித்துப் பருவ வளர்ச்சி முறையில் புகழ்ப்பாடல்களைப் பாடுவது," என்பார்.

மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ் அரங்கேற்றம் நடந்து கொண்டிருந்த வேளை மீனாட்சியம்மை சிறு குழந்தை வடிவில் வந்து குமரகுருபரரின் பிள்ளைத் தமிழைக் கேட்டு, வருகைப் பருவத்து ஒன்பவதாவது பாடலாகிய,

'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே அகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்....

என்ற பாடலில் குமரகுருபரர் விளக்கமளித்தபோது மீனாட்சி அம்மையார் மகிழ்ந்து, அர்ச்சகர் மகள் வடிவில் தோன்றி, அரசர் கழுத்திலிருந்த முத்து மாலையைக் கழற்றிக் குருபரர் கழுத்திலிட்டு மறைந்தனர் என்பர் ஆன்றோர். மதுரையிலிருந்த காலத்தில் அடிகளார் "மதுரைக் கலம்பகம்", "நீதிநெறி விளக்கம்" ஆகிய நூல்களை இயற்றினார்.

'திருக்குறள் பருவத்திலேயே பெற்ற பிள்ளை நீதி நெறி விளக்கம்" என்பார் திரிசிரபுரம் வித்துவான் சி. தியாகராசர். பின்பு திருவாரூர் வந்த குமரகுருபரர் 'திருவாரூர் நான் மணிமாலை' என்னும் பனுவலைப் பாடினார்.

அதன்பின் தருமபுரம் சென்று அங்கு குரு மூர்த்தியாக எழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரிடம் துறவுபெற எண்ணி தேசிகரை அணுகினார். துறவுபெற விரும்புவோர், துறவியாகுமுன் பல திருப்பதிகளுக்குச் சென்று வணங்கி வரவேண்டுமென்பது தருமபுரி ஆதீனத்தில் தொன்று தொட்டு வரும் பழக்கமாகும். அம்மரபுப்படி காசிக்குச் சென்று வழிபாடு செய்து வருமாறு தேசிகர் கட்டளையிட குமரகுருபரர் காசிக்குச் சென்றுவர காலம்பிடிக்குமென விண்ணப்பிக்க குருபரரைச் சிதம்பரம் வரையாவது சென்றுவர ஆணையிட்டார். சிதம்பரம் செல்லப் புறப்பட்ட குமரகுருபரர் இடையே வைத்தீசுவரன் கோவிலில் கோயில் கொண்டிருக்கும் முத்துக் குமாரசுவாமி மீது பிள்ளைத் தமிழ் ஒன்று அருளினார். சிதம்பரம் சென்று "சிதம்பர மும்மணிக் கோவை", 'சிதம்பர செய்யுட் கோவை" முதலிய நூல்களை அருளிச் செய்து பின் தருமபுரம் மடம் சென்று மாசிலாமணி தேசிகர் ஆசிபெற்று துறவு மேற்கொண்டார்.

சுவாமிகள் தேசிகரைச் சந்தித்ததை வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் இப்படிக் கூறுகிறார்,

'அன்னவன் வந்து அம்முனியே அருட்செந்தூர்
சானாத்
தன்னது கண்களில் தோற்றச் சாட்டாங்கமாத்
தொழுதான்' (13)

திருச்செந்தில் ஆண்டவனாக, குமரகுருபரர் கண்களுக்கு மாசிலாமணி தேசிகர் தோன்றினாராம். வாய்பேசாதிருந்த தம்மை மெய்யுரை தர வைத்த தேசிகரின் திருத்தாள்களில் சாட்டாங்கமாய் விழுந்து வணங்கினாராம்.

**குமரகுருபரரின் நூல்கள்:**

உ.வே.சாமிநாத ஐயரின் 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு' என்ற நூலின்படி அடிகளார் அருளிய நூல்களின் எண்ணிக்கை பன்னிரண்டு. ஒரு கலிவெண்பா, இரண்டு பிள்ளைத் தமிழ், மூன்று கலம்பகங்கள், ஒரு நான்மணி மாலை, இரண்டு மும்மணிக்கோவைகள், ஒருமாலை, நீதி நெறி விளக்கம் என்னும் நீதி நூலொன்று, சிதம்பரச் செய்யுட் கோவை எனப் பன்னிரண்டு நூல்களை முனிவர் இயற்றியுள்ளார்.

**கந்தர் கலிவெண்பா**

சுவாமிகள் அருளிய நூல்களில் கந்தர் கலிவெண்பாவின் சிறப்பைக் காண்போம். திருச்சீரலைவாய் எனப்படும் திருச்செந்தூர் முருகப் பெருமான்மீது தம் ஐந்தாவது வயதில் ஊமை நீங்கிய சுவாமி, அறுமுகப் பெருமானைப் பாடி அவன் அருளைப் பெற்றார்.

மும்மொழிச் செல்வர் கா.சுப்பிரமணியபிள்ளை கந்தர் கலிவெண்பாவிற்கு எழுதிய முன்னுரையில் இப்படிக் கூறுகிறார்,

"இதனுள் சைவ சித்தாந்தக் கொள்கைகளின் சுருக்கமும், அறுமுகப் பெருமான் திருவடிச் சிறப்பும், கந்த புராணக் கதைக் கருத்தும் அழகாகத் தொகுக்கப்பட்டுள்ளன"

வித்தெழுத்தெனப்படும் உயர் மந்திரங் கலந்த சொற்கள் கலந்த நூல் கலிவெண்பா என்பர் சான்றோர். இந்நூல் 122 கண்ணிகளை உடையது. அடிகளார் சைவசித்தாந்தக் கருத்தை, முதல் 36 கண்ணிகளில் சுருக்கமாகவும் அழகாகவும் எடுத்துக் காட்டுகிறார். இறுதியில் 111 முதல் 122 கண்ணிகளில் கவசமாய் வேண்டுகோளாய்க் கூறி நூலை முடிக்கிறார்.

**வடநாடு வென்ற தெய்வத் தமிழ்ப் புலவர்**

அடிகளார் தமிழையும் சைவத்தையும் அறத்தையும் பனிமலைச் சாரல் வரை(இமயம்) பரப்பும் முகத்தான் வடநாடு செல்ல முடிவு செய்து பலரது அழைப்பினை ஏற்று தில்லி மாநகருக்குப் பயணமானார். இந்துஸ்தானி மொழி சற்றும் அறிந்திராத முனிவர் தில்லியை அப்பொழுது ஆண்டுகொண்டிருந்த முகலாய மன்னரைக் காண்பதற்கு முன் அரசரின் மொழியாகிய இந்துஸ்தானியைக் கற்க வேண்டுமென்ற அவாவில் கலைமகளை நோக்கிப் பிரார்த்தனை செய்து பாடிய நூல்தான் 'சகலகலா வல்லிமலை'. பத்தே பாடல்கள் கொண்ட இப்பனுவலைப் பாடி சரஸ்வதி தேவியின் திருவருளை வேண்டித் தம் பத்தாவது பாடலில்,

'மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரும் என்
பண்கண்டளவிற் பணியச் செய்வாய்
படைப்போன் முதலா
விண்கண்ட தெய்வம் பலகோடி
உண்டேனும் விளம்பில் உன்போற்
கண்கண்ட தெய்வம் உளதோ
சகல கலா வல்லியே'

என்று பாடிக் கலைமகளாம் சரசுவதியின் திருவருளால் வடமொழியை முழுக்க அறியும் ஞானத்தைப் பெற்றார்.

தில்லிப் பாதுஷாவிடம் பேசிப் பழகி மன்னர் வைத்த சோதனைகளில் வென்று அரசரின் ஆதரவுடனும் அனுமதியுடனும் குமர குருபர சுவாமிகள் வாரணாசி என்னும் காசி மாநகரில் கேதாரத்துறையில் தாம் தங்குவதற்குக் குமாரசாமி மடம், கேதார மந்திரம், அறச்சாலை முதலியன ஏற்படுத்தி அங்கிருந்து தமிழ்மொழியையும் சைவத்தையும் பரப்பினார்.

**குமாரசாமி மடம்**

தென்னன் தமிழைக் குறிப்பாகத் திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கம்பராமயணத்தில் உள்ள விளக்கங்கள் மற்றும் புராண விரிவுரைகள் போன்ற பணிகளை இம்மடத்திலிருந்தவாறே அடிகளார் செய்து வந்தார்கள். துளசிதாசர் போன்ற வடமொழி அறிஞர்கள் குமாரசாமிமடம், வந்து சுவாமிகளின் சொற்பொழிவுகளை இந்துஸ்தானி மொழியில் கேட்டுத், தாம் இயற்றிய வடமொழி நூல்களில் அமைத்துக் கொண்டனர் என்பர் அறிஞர்.

'நான் ஒரு நிரத்தரமான நாத்திகன்' என்று சூளுரைத்த பாவேந்தர் பாரதிதாசனே குமரகுருபரரின் வாழ்விலும் வாக்கிலும் தம் உள்ளத்தைப் பறிகொடுத்துள்ளார்; அடிகளாரின் வாழ்வினை ஒரு நாடகமாகப் படைத்துத் தந்துள்ளார். கவிஞர் தமிழ்நாடன் குறிப்பிடுவதுபோல், 'குமரகுருபரர் தமிழ்த் தொண்டராய், வடநிலத்தை, மொழியை வென்றவராய்க் கவிஞருக்கு முன்மாதிரி காட்டியிருக்கக்கூடும்(பாரதிதாசன், குமரகுருபரர்,ப.3).

பேராசிரியர் டாக்டர் மு.வரதராசனார் தம் 'தமிழ் இலக்கிய வரலாறு' நூலில் தமிழ்ப்புலவர்களுள் வடநாட்டுக்குச் சென்று தங்கியிருந்து தமிழ்நூல்களைப் பாடியவர் குமரகுருபரர் ஒருவரே வார் என்று கூறியுள்ளார்(ப.210).

காசி நகரில் முனிவர் 'சகலகலா வல்லிமாலை', 'காசிக்கலம்பகம்' எனும் இரண்டு நூல்களையும் அருளினார். 1813ம் ஆண்டு வாக்கில் கல்கத்தாவில் தொழில் செய்துவந்த தமிழ்நாட்டைச் சேர்ந்த நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்கள், காசி மகாராஜாவிடம், இந்தியா மற்றும் உலகெங்குமுள்ள இந்துக்களின் புனிதக் கோயிலிலும் காசி, விசுவநாதர் லயத்திற்குத் தினந்தோறும் நடைபெறும் நான்கு காலப் பூசைகளில் மூன்று காலப் பூசைகளைச் செய்யும் உரிமையைப் பெற்றார்கள். ஆம்! பூஜைக்குரிய அத்தனைப் பொருட்களையும் அதிகாலை 4 மணி, காலை 11.30 மணி, இரவு 9.00 மணி என்று மூன்று காலப் பூஜைகளுக்கும் பெரும் பொருட் செலவில் ஸ்ரீ விச்வேசர் கோயிலுக்கு நகரத்தார்கள் அனுப்பிவந்தனர். இன்றும் இப்பொழுதும், அனுப்பி வருகின்றனர்.

1863-ம் ஆண்டுவரை குமரகுருபர சுவாமிகள் அமைத்த குமாரசாமி மடத்தில் தங்கியிருந்துதான் பூஜைக்குரிய பொருட்களை நகரத்தார் அனுப்பி வந்தனர். 1863ல் இந்துஸ்தானி கோஷாயி சாதுக்கள் மடத்தை, விலைக்கு வாங்கிப் புதுப்பித்து 'நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்' என்ற பெயரில் தொடங்கி இன்றும் பணி ஆட்களும் சாதுக்களும் அபிஷேக ஆராதனைப் பொருட்களுடன் வடநாட்டு உத்தரப் பிரதேச காசி நகரில், தமிழ்நாட்டு நாதஸ்வர இன்னிசையுடன் 'சம்போ சங்கர மஹாதேவா' என்று வாரணாசி வீதிகளில் வழிநெடுகச் சொல்லிக் கொண்டே செல்லும் அழகு அழகுதான்.

உலகத் தமிழர் பெருமைப்படும் வண்ணம் வடநாட்டு காசி விசாலாட்சி கோயில் முழு நிர்வாகப் பொறுப்பு, காசி அன்னபூரணி கோயிலுக்குப் பெரும் பொருட் செலவில் தினசரி இரண்டு காலத்திற்குரிய பூஜைப் பொருட்கள் அனைத்தும் இன்றும் அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். காசி விசாலாட்சி அம்மன் ஆலயத்திற்கு. இதுவரை மூன்று முறை நகரத்தார் குடமுழுக்கு விழா நடத்தியிருக்கிறார்கள்.

முன்னூற்று எண்பது ஆண்டுகளுக்கு முன்பே சைவசமயத்தையும் அன்னைத் தமிழையும் வடக்கே பரப்பியருளியவர் துறவி குமரகுருபரர். காசியில் விசுவநாதர், விசாலாட்சி, அன்னபூரணி அம்மன் ஆகிய தெய்வங்களுக்கு ஆன்மிகப் பணி செய்யும் உரிமை தமிழர்களாகிய நகரத்தார் பெருமக்களுக்குக் கிடைத்திருப்பதை நினைத்து நினைத்து ஒவ்வொரு தமிழனும் மகிழலாம்.

மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்!
வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!
வாழிய வாழியவே!



# "ஆரணப் பொருளே அருளுக"

கவிஞர்கோ - கவிமாமணி - காப்பியக்கவிஞர்
நா.மீனவன்
கண்டரமாணிக்கம்

அருள்பொழியும் கதிர்காமம் எண்கண் செந்தூர்
ஆவினன் குடிசிக்கல் அமர்ந்த தேவா
இருளனைய அசுரர்குலம் இல்லா தாக்கி
இடும்பனுக்கும் அருள்செய்த எங்கள் வேலா
திருவளரும் மார்பனுக்கு மருகன் ஆகித்
தெய்வானை கரம்பிடித்த தெய்வக் கோவே
கருவளரும் நாள்முதலாய்க் கந்தன் பாதம்
கண்டுதொழும் பேறுற்றோம் காத்து வாழ்க

செந்தமிழர் தம்தலைவா நாடு தாண்டிச்
சித்தியவான் திருத்தலத்தைச் சேர்ந்து நின்றாய்
வந்தவர்கள் எவரெனினும் காக்கும் தெய்வம்
வள்ளிமண வாளனென வந்த செவ்வேள்
சிந்தையெலாம் கோயிலெனக் கொண்டு வாழும்
செல்வமுத்துக் குமரனெனச் சிறந்த சாமி
கந்தனெனும் சண்முகனே கடம்பா போற்றி.

செங்கமல வதனங்கள் ஆறும் வண்ணச்
சீர்விழிகள் ஆறிரண்டும் கரமீ ராறும்
பொங்குமருள் பொழிகின்ற அடியி ரண்டும்
பொதியமலைச் சந்தனச்சே(று) அணிந்த மார்பும்
சிங்கார மணிமுடியும் சேரக் காணும்
சித்தியவான் சேர்முருகா செய்ய மேனி
தங்கமென இலங்குமெழிற் காட்சி கண்டுன்
தாள்மீது தலைவைத்தோம் தாங்கிக் கொள்க.

காவிரிசேர் வயலூர் மயிலம் கண்டி
கலைபொலியும் பரங்குன்றம் பாதை எல்லாம்
பூவிரிக்கும் வள்ளிமலை புகழ்சால் போரூர்
போற்றுபழ முதிர்சோலை திருச்செங் கோடு
தேவனுக்குப் பிரணவம்சொல் சுவாமி வெற்பு
திருப்பதியாய்த் தானுவந்த திருக்க டம்பன்
ஆவலுடன் சித்தியவான் அமர்ந்து நம்மை
அருள்கொண்டு காக்கின்றான் அடிகள் போற்றி.

கனகவரை மீதுறைவான் கண்ணில் தோன்றிக்
கரிக்கிளையன் எனவந்த கதிரை வேலன்
மனமொழிமெய் கொண்டடிகள் வணங்கு வாரை
மயிலேறிக் காக்கின்ற சுவாமி நாதன்
வனமகளை மறவாத வாஞ்சை யோடு வாழ்பவனே
சித்தியவான் கோவில் வந்த
பனியிமயப் பரன்மகனே பழனியப்பா
படைவீடும் ஆறுபடையாய் பணிகின் றோமே.

முருக்குடைய குறிஞ்சிமலர் முகிழ்க்கும் வெற்பின்
முதற்பொருளே முத்தமிழின் மூவா ஞானச்
செருக்குடைய அருணகிரி செப்பி வைத்த
சீருடைய திருப்புகழின் பொருளே செல்வப்
பெருக்குடைய சித்தியவான் கோவி லுக்குள்
சிலைவடிவில் திகழ்ஞானக் கந்தா உன்றன்
அருட்கமலச் சேவடிகள் காப்ப தாக
ஆரணத்தின் முதற்பொருள்நீ அருள்வ தாக.

மந்தரத்தை வில்லாக்கி மகிழ்ந்தான் பெற்ற
மதலையெனச் சரவணத்தில் மலர்ந்த செல்வா
கந்தரத்தில் நஞ்சுடைய கயிலை நாதன்
கற்றுணரப் பிரணவத்தைக் கற்பித் தோனே
அந்தரத்தார் முதல்மக்கள் அல்லல் நீங்க
அசுரர்குலம் அழியவென வேல்வி டுத்தாய்
சந்ததமும் சித்தியவான் நாட்டு மக்கள்
சந்ததமும் பணியவென வந்தாய் போற்றி.

நீலமயில் தானேறும் நிமலா மக்கள்
நெஞ்சுறையும் விராலிமலை வேலா அந்நாள்
ஆலமதைக் கண்டத்தில் அடக்கிக் கொண்ட
ஆலவாய்ச் சிவபெருமான் கண்ணிற் பூத்த
கோலமுகம் ஆறுடையாய் உலகி லுள்ள
குன்றமெலாம் குடியிருப்பாய் உனைவ ணங்கும்
சீலமுள சித்தியவான் நாட்டு மக்கள்
சிந்தையெலாம் நிறைந்தவனே போற்றி போற்றி.

சேவடியில் நாதத்தைச் சிலம்பு சிந்தும்
சித்திரமாய் முகமாறும் ஒளியைச் சிந்தும்
காவடிகள் பொன்மயிலின் காட்சி காட்டும்
கைவேலோ நின்னருளின் பொலிவு காட்டும்
பாவடிகள் உன்ஞானப் பாங்கு காட்டும்
பன்னிரண்டு கண்மலரும் பரிவு காட்டும்
பூவடியில் சித்தியவான் நாட்டு மக்கள்
பூவெடுத்துப் போற்றுகின்றனர் போற்றிக் காக்க

கிஞ்சரத்திற்(கு) இளையவனே குன்று தோறும்
குடியிருக்கும் திருக்குமரா வேடர் தங்கள்
அஞ்சுகத்தை மணந்தவனே அமரர் கோவே
அழகிருக்கும் சித்தியவான் அமைந்த கோவில்
நெஞ்சிருக்கும் படியிருக்க நிற்கும் உன்னை
நினைவகலா திருக்கவென வணங்கு கின்றோம்
கஞ்சமலர் அனையதிரு வடிகள் தம்மில்
கைவைத்து வணங்குகிறோம் காப்பாய் போற்றி.



# திருக்குறளின் சிறப்பும் தன்முனைப்பும்

டாக்டர் ர.காதர் இபுறாஹிம் A.R Ph.D

உலகப் பொதுமறையான திருக்குறள் இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு முன் தமிழ்நாட்டில் திருவள்ளுவர் என்ற தமிழரால் எழுதப்பட்டது. இந்நூலை இன்று இந்தியாவில் தமிழ்நாட்டு நீதிமன்றங்களிலும் சட்டமன்றங்களிலும் உறுதிமொழி எடுக்கும்பொழுது மற்ற சமய மதங்களுக்கு ஈடாகக் கை வைத்து உறுதிமொழி எடுத்துக்கொள்ள அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

திருக்குறளில் அறம், பொருள், இன்பம் என மூன்று வகைகளாக 1330 குறள் பாக்களாய் மானுடத்தை நோக்கி உலகைத் தழுவி எழுதப்பட்டுள்ளது. இதில் தனி மனிதன் எவ்வாறு அவ்வழியில் நின்று சமுதாயத்தில் பொருளீட்டி கூடி வாழ்ந்து குடும்ப வாழ்வில் தலைவியோடு இன்பங்கண்டு மெய்ஞானம் பெற்று வானவர்க்கு ஈடாக இவ்வுலகில் வாழ்வாங்கு வாழ வேண்டும் என 1330 இரண்டு அடி குறட்பாக்கள் மூலம் அறிவுறுத்துகின்றது. இத்திருக்குறளானது காலத்தால் அழியாது என்றும் நிலைத்து நிற்கின்றது. எல்லாச் சமயங்களும் தனது என்று உரிமை கொண்டாடும் ஒரேநூல் திருக்குறளாகும்.

லியோ டால்ஸ் டாய், மகாத்மாகாந்தி, ஆல்பர்ட் சுவைட்சர் போன்ற அறிஞர் பெருமக்களின் வாழ்க்கைப் பாதையையே திருத்தி மேன்மையுற வைத்த நூல் திருக்குறளாகும். மேலும் காலத்தை வென்று என்றும் மனித குலம் வாழ வழிகாட்டும் அறநூல், மறைநூல், வாழ்வியல் நூல் திருக்குறளாகும். பிரெஞ்சு மேதை எம்.எரியஸ் என்பவர் திருக்குறளில் மிகவும் அற்புதமான அம்சமாக விளங்குவது, சாதி, மக்கள் நம்பிக்கைகள் என்று வேற்றுமை பாராட்டாமல் மனித குலம் முழுவதற்கும் பொதுமையாக கூறியிருப்பதாகும்.

இந்நூல் இறையான்மை மற்றும் அறநெறியை வகுத்துரைக்கின்றது. முழுமையான பகுத்தறிவை உணர்த்துகின்றது. இல்லறத்தில் சமூக வாழ்வின் நெறிமுறைகளை விளக்குகின்றது. திருக்குறள் உலகளாவிய அளவில் எந்த அளவுக்கு உலக மாந்தர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது என்பதை நாம் அறிகிறோம்.

குறிப்பாக இல்வாழ்க்கை என்ற அதிகாரத்தில்,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல் வாழ்க்கை
பண்பும் பயனும் அது"

என்ற திருக்குறளில் இல்வாழ்வில் இருவர் கொள்ளும் அன்பும் மற்றவருடன் கலந்துவாழும் அறமும் உடையதாயின் அதுவே இல்லறத்தில் பண்பும் பயனும் ஆகும் என்று நமக்கு விளக்குகிறது.

ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முன்பு மனிதகுலம் எட்டிய நாகரீக மற்றும் மாட்சியையும் ஆற்றிய அறிவார்ந்த சாதனையாகத் திருக்குறள் விளங்குகின்றது. மனிதனுக்கு மனத்தூய்மை வேண்டும் என்றும் திருக்குறள் வலியுறுத்துகின்றது. அழுக்காறாமை என்ற அதிகாரத்தில்,

"ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இல்லாத இயல்பு"

மனத்திலேதான் முதலில் பொறாமை தோன்றும் தன்மனத்தில் என்றும் குற்றமில்லாத இயல்பினை ஒருவன் இடையறவுபடாத ஒழுக்க நெறியாகக் கொள்க என்றுரைக்கின்றது. திருக்குறளில் உயிர்த்துடிப்பான ஆன்மீகப் பண்பும் கனிந்த பக்குவமும் காணப்படுகின்றன. குறள் தமிழ் இலக்கியத்தில் மிகச்சிறந்த படைப்பு மனித சிந்தனையின் மிக உயர்ந்த தூய்மையான வெளிப்பாடாகும்.

மேலும் திருக்குறளில் இல்வாழ்க்கை, கல்வி, இனியவை கூறல், செய்நன்றி அறிதல், இறைமாட்சி, சொல்வன்மை போன்ற அதிகாரங்களை இன்னும் பல்வேறு அதிகாரங்களிலும் உலக மாந்தர்கள் எந்த முறையில் மக்களிடம் அளவளாவி அன்பு பாராட்டி வாழ வேண்டிய வழிமுறைகளையும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. உதாரணமாக, கல்வி என்ற அதிகாரத்தில்,

"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றவை யவை".

கல்வியே சிறந்த செல்வமாகும் ஒருவனுக்கு மற்றவையெல்லாம் அதுபோன்ற சிறந்த செல்வம் ஆகாது. கல்விச் செல்வம் பிறரால் கொள்ளை கொள்ள முடியாது. கொடுத்தால் குறையாது உயிரோடு ஒட்டியதாகும் ஏனையப் பிரிக்கக் கூடிய செல்வங்களை விட இது ஒருவனுக்கேயுரிய அவனுடைய சொந்தச் செல்வமாகி விடுவதால் மற்றவை (மாடு-செல்வம்) என்றுரைக்கின்றது.

நாம் பிறரிடம் பேசும் பொழுது எப்படி தன்முனைப்புடன் பேசவேண்டும் என்று இனியவை கூறல் என்ற அதிகாரத்தில்,

"பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற"

பணிவும் இன்சொல்லும் ஒருசேர வாய்க்கப்பெற்ற ஒருவன் பலரிடையே பழகும் போது விளங்கித் தோன்றுவான் அவனுக்கு அணிகலன்களாய் அவன் தோற்றத்தை ஆளுமையை மேம்படுத்திக் காட்டும். பிற உடம்பில் அணிவன அத்துனைச் சிறந்த அணிகலன்கள் அல்ல குறள் நமக்கு அறிவுறுத்துகின்றது. மேலும் இறைமாட்சி என்ற அதிகாரத்தில்,

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்"

ஆள்பவன் குடிமக்களால் காண்பதற்கு எளியவனாக இருக்க வேண்டும். அவர் மட்டும் கடுஞ்சொற்களை பேசாது அவர்களை நடத்திச் செல்பவனாக விளங்க வேண்டும். அத்தகையவனது நாட்டைப் பிறநாடுகளிலும் மேம்பட்டதென உலகம் உயர்ந்து பேசும். இதன்மூலம் ஒரு நாட்டை ஆளும் மன்னன் எப்படியிருந்து நாட்டுமக்களுடைய நலன்களில் அக்கறையுடன் செயல்படவேண்டுமென்று எடுத்துரைப்பதை நாம் அறிகிறோம்.

மேலும் செய்ந்நன்றி அறிதல் என்ற அதிகாரத்தில்,

''நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று''

என்ற குறளில் பிறர் செய்த தீங்கை நினைவில் கொள்வதும் நன்மையை மறந்து விடுவதும் காழப்பேறிய மனத்தின் செயலாகும். அது தவறு. பிறர் செய்த நன்றியை மறப்பது நல்லதல்ல என்றும் நினைவில் கொள்ள வேண்டும். அவர் செய்த தீமையை அது நிகழ்ந்த பொழுதே மறந்து விடவேண்டும். அதுவே, நல்லது என்று ஆணித்தரமாக உலக மாந்தர் எப்படிப்பட்ட மனதுடன் வாழ வேண்டுமென குறள் வலியுறுத்துகிறது.

இத்தகைய பேரும் பெருமையும் பெற்ற திருக்குறளை ஓதியும் உணர்ந்தும் ஒளிமிக்க வாழ்வை ஒவ்வொருவரும் அடைவாராக.



# திருவாசகம் உணர்த்தும் வாழ்வியற் சிந்தனை

முனைவர் தமிழண்ணல்

தமிழர் சமயம் பற்றிச் சிந்திக்குமுன், சில அடிப்படைகளை விளங்கிக் கொள்ள வேண்டும். தமிழர் வழிபாட்டில்

1) வரலாற்றுப் பார்வை
2) வாழ்வியற் பார்வை
3) மெய்மை ( தத்துவம் ) இயல் பார்வை என

மூன்றும் வேண்டும். இன்று தத்துவங்களையே பேசி பேசித் தமிழர் சமயங்கள் விளங்காமற் போயின.

ஐந்து நிலப் பகுப்பாக, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழகம் விளங்கியது. ஐந்து நிலவழி வழிபாடுகள் இருந்தன

குறிஞ்சி - சேயோன் (செந்நிறத்தவன் )
முல்லை - மயோன் ( கரு நிறத்தவன் )
மருதம் - வேந்தன் (இந்திரன்)
நெய்தல் - வருணன் (பல வண்ணத்தன் )
பாலை - கொற்றவை ( அம்மன், சக்தி )

இவற்றுள் மருதநில வழிபாடு, சூரிய வழிபாடாகி, இந்திர வழிபாடென்று பெயர் மாற்றப்பட்டு, பொங்கல் விழாவுடன் நின்றது. நெய்தல் வழிபாடு 'சுறாமீனின்' எலும்பை வைத்து, வழிபடுவது போன்ற, சில சடங்குகளோடு நின்றுபோனது. குறிஞ்சி நிலம் மலைப் பகுதி. சேயோன் - செந் நிறத்தவன், சேய் - குழந்தை என்றும் பொருள். அது முருக வழிபாடும் பொன்னார் மேனியனாம் சிவ வழிபாடும் கலந்த ஒன்றாக, ஆயிரம் ஆண்டுகளாக வளர்ந்தது. மாயவன் வழிபாடே கண்ணன், திருமால் சார்ந்ததாக உருப்பெற்றது. கொற்றவை வழிபாடு அம்மன் அல்லது சக்தி வழிபாடாக மலர்ந்தது. சர்வேபள்ளி இராதாக்கிருட்டிணர் குறிப்பிடுவது போல,

சிவ வழிபாடு ( சிவனியம் - சைவம் )
திருமால் வழிபாடு ( மாலியம் - வைணவம் )
அம்மன் வழிபாடு ( கொற்றவை - சக்தி )

மூன்றும் தமிழருடையன. இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, வடமொழி வாணறின் வேத வைதிகமும் புத்தமும் சமணமும் இங்கு ஊடுருவின. எனினும் தமிழர் சமயத்தின் மெய்ம்மைகளைத் தொல்காப்பியம், அவையப்பாடல்கள் (சங்க இலக்கியம் ), திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றில் தேடித் தொகுக்க வேண்டும். புறத்திணை சார்ந்த காஞ்சித்திணை, பாடாண் திணைகளில் தமிழர் சமய வேர்கள் பின்னிக் கிடக்கின்றன. முது மொழிக் காஞ்சி, பொருள் மொழிக் காஞ்சி என வருவன சிந்திக் கற்பாலன.

## சிவ வழிபாட்டின் தோற்றம்

பொதியில், மன்றம், அம்பலம் என்பனத் தமிழகம் முழுவதும் கிராமங்களின் நடுவே இருந்தன. இன்றும் ஊர் நடுவே பழைய சிற்றூர்களில் இதைக் காணலாம். மானுடவியல் ஆய்வின்படி உலகெங்கும் மரவழிபாடு (மரங்களைத் தெய்வமாக வழிபடுவது) பரவியிருந்தது. தமிழர்கள் இப்பொது மன்றத்தில் முதலில் மரங்களை வழிபட்டனர் (இன்று தல விருட்சம் என்பது அதன் தொடர்ச்சியே). பிறகு மரத்தறியை வைத்து வழிபட்டனர். சுற்றிலும் மேடை அமைத்து, அம்மன்றமே அவ்வூராரின் ஆட்சி, நீதி, வழிபாடு மூன்றும் நிகழுமிடமாக இருந்தன. இது தறி, கந்து எனப்பட்டது. அப்பர் பெருமான் 'கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே' என்பார். 'கந்துடை நிலையினும்' என்பது திருமுருகாற்றுப்படை. 'மாத் தாள் கந்து' என்பது போலச் சங்கப் பாடல்களில் இடம் பெற்றிருக்கின்றது. கந்து அல்லது தறியைச் சுற்றிலும் அது அசைந்து விடாமலிருக்க, அமைத்து சிறு சார்புதான், பிறகு இன்றைய அருவுருவ வழிபாடாகச் சிவத் தோற்றமாக உள்ளன. இதனை லிங்கம், சிசின தேவ என்றெல்லாம் அழைத்த வடமொழியாளர் (வேதம் சிசின தேவ அல்லது லிங்கம் என்பது ஆண் குறி எனப்பொருள்படும்). இவ்வாறு இருக்கு வேதம் முதல், சிவனை இழிவு படுத்திய தோடு, சிவ வேள்வியை மறுத்தனர். தக்கன் கதை இதன் சாரமேயாகும். பின்னர் இவர்கள் வாழ்வு, வருமானம் கருதி, மேலுலகிலுள்ள ருத்ர என்ற தங்கள் கடவுளுடன் இணைத்து, 'சிவ ருத்ர' என மாற்றி, சிவ வழிபாட்டைக் குழப்பி, சீர்கேடு செய்தனர். இடைக் காலத்தே ஆதிசங்கரர் புத்த மதத்தின் சிறந்த சிந்தனைகளைத் தங்கள் வேத வைதிகத்தில் இணைத்துப் புதிய விளக்கம் தந்து, அம்மதம் பரவ விடாமல் ஒழித்துக் கட்டினார். அதேபோல, தமிழர்களின் முற் கூறிய மூன்று வழிபாடுகளையும் கூட, அவர்தான் தமது சூழ்ச்சித் திறத்தால் குழப்பினார். ஆறு சமயக் கோட்டைக்கூடப் புகுத்தி, தமிழர் சமயங்களை வேத வைதிக அத்துவைதக் கோட்பாடுகளுடன் கலப்படமாக்கிப், பார்ப்பனர்கள் வாழ, நம் திருக்கோயில்களுக்குள் நுழைய வழிவகுத்தார். இச்சூழலில், 'தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்ற மணிவாசகத்தை எண்ணிப் பார்க்க வேண்டும். இவ்வேத வைதிக வேள்விகள் அக்கினி வழிபாடாகும். வேத வைதிகர்களின் கடவுளர்கள் எல்லாம் மேலுலகிலேயே உள்ளனர். அவர்களுக்கு அக்கினி தேவன் வழியாக, இவ்வுலகில் மக்களுக்குப் பயன்படும் பொருள்களை எல்லாம் நெருப்பில் போட்டு அனுப்புகின்றனர். தமிழர் வழிபாடு படையவிடுவது (பொங்கல் வைப்பது, நெய் விளக்கு ஏற்றுவது முதலியன).

வடமொழி வேத வைதிகம் - அத்துவைதம் இவ்வுலகைப் பொய் என்றும் மேலுலகமே மெய்யென்றும் கூறும். இவ்வுலகம் பரப்பிரம்மத்தின் நிழலேயாகும்.

நம் சமய நெறி உருவ வழிபாடு; இவ்வுலகையும் உலக வாழ்வையும் மெய் என ஏற்பது. தொல்காப்பியம் முதல் நம் நூல்கள் அனைத்தும், இவ்வுலக வாழ்வை, அளவறிந்தும் வகையறிந்தும் துாய்ப்பதைப் பாவம் என்றோ கூடாது என்றோ கூறவில்லை.

வேத வைதிகர்களுக்கு உருவ வழிபாடு இல்லை. வேதங்களிலோ, பகவத் கீதையிலோ கோயில் எனும் சொல்லோ அருச்சனை வழிபாடு பற்றியோ ஒரு சொல் கூட இல்லை. எனவே நம் சிவநெறி, 'நம்மை இவ்வுலகில் நல்ல வண்ணம் வாழலாம்' என வழிகாட்டுகின்றது. நாம் இவ்வுலகில் ஐம்பொறிகளைக் கண்டவாறு மேய விடாமல், அடக்கி அளவாகத் துய்த்து, மக்களுக்குப் பணியாற்றி, இவ்வுலகினின்றும் விடுபடுவதையே 'வீடு பேறு' என்று கூறும் (வீடு - விடுதல், விடுதலை என்பதன், முதனிலை திரிந்த தொழிற்பெயர்).

மேலுலகக் கற்பனைகளை எல்லாம் யார் கண்டார்கள்? அப்பரடிகள் ‘மனிதப் பிறவியும் வேண்டுவதே இம் மாநிலத்தே’ என்பர். ‘அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம், பொன்னம் பாலிக்கும் மேலும் இப் பூமிசை; என் அம்பு ஆலிக்குமாறு கண்டு இன்புற, இன்னம் பாலிக்குமோ இப் பிறவியே’, என்பது அப்பரின் திருவாக்கேயாகும்.

**1) சமையம் - சமயம் (ஒரு வாழ்வியல் சிந்தனை)**

சமையம் என்பது பக்குவப் படுத்துவது. சமயல் - உணவைப் பக்குவப் படுத்துவது. பெண் சமைந்தாள் என்பர்; மகப் பேற்றுக்குறிய பக்குவப் பருவத்தை அடைந்தாள் என்பதாம். பழைமை - பழமை ஆவது போல், சமையம் - சமயம் ஆனது. எனவே, (மதம்) என்பது கோட்பாடு; அதனிலும் சமையம் என்பதே சிறந்தது.

சிவநெறியின்படி, நாம் பக்குவப்பட்டால் இறைமை தானே வந்து உதவும். ஆலமர் செல்வன், தென்முகக் கடவுள் இதைத் தட்சிணாமூர்த்தி என்பது வடமொழியாக்கியது. நம் திருக் கோயில்களில் எல்லாம் தென் முகக் கடவுள், ஆலமர் செல்வன் என்றே எழுதி வைக்க வேண்டும். தாழ்வு மனப்பான்மையில் மூழ்கிப்போன தமிழன் தமிழில் எழுதி வைக்கத் தயங்கவே செய்வான், ‘சின் முத்திரை’ என, ஓதாது உணர்த்துவது, பக்குவப் பட்ட உயிரை, இறைவன் வந்து ஆட்கொள்வான் என்பதேயாகும்.

திருவாதவூரர் திருப் பெருந்துறையில் ஒரு பக்குவ நிலையை அடைந்தார். சிவபெருமான் குருந்த மரத்தடியில் ஒரு குருவாக வந்து ஆட்கொண்டார்.

‘கண்ணுதலான் தன் கருணைக் கண் காட்ட வந்தெய்தி’
‘நிலந்தன் மேல் வந்தருளி’
‘அவனியில் வந்து’
‘வந்து எனை ஆட்கொண்டு’
‘தந்தருள வந்தருளும்’

இவ்வாறு ஏறத்தாழ நூறு இடங்களில் ‘வந்து, புகுந்து, காட்டி’ என வருவதன் நுட்பம் கருதற்பாலது. கல்வி கற்பவன், நன்கு கற்றுத் தகுதியை வளர்த்துக் கொண்டால், பதவி தானே வந்து சேரும்! ஒரு தொழிலை, வாணிகத்தைப் பக்குவப்படச் செய்தால், ஊதியம் தானே வந்து சேரும்.

‘ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா,
ஊக்கம் உடையானுழை’ (குறள் 294).

சமையமும் வாழ்க்கை முன்னேற்றச் சிந்தனையையும் தன்னம்பிக்கையையும் தருவதேயாகும். சமயத்தின் வாழ்வியற் சிந்தனைகளை எடுத்துக் கூறாததால்தான், இளைஞர்களிடம் சமயம் சென்று சேரவில்லை.

**2) சிவன் - சிவமாக வேண்டும்**

சிவம் - செந்நெறி, தூய அறநெறி. பக்குவப் பட்ட பண்பாடே சிவம். இந்த ஆருயிர் சார்ந்ததன் வண்ணமாகும் மனத்தையுடையது. மாசு சேரும் இயல்புடையது இது. இவ்வுயிர் மாசு நீங்கிச் சிவமாக வேண்டும்.

நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து
சிவமானவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ!

சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அந்தமிலா ஆனந்தம்

சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்

இம் மணிவாசகங்கள் எதை உணர்த்துகின்றன? நம் ஆருயிர் சிவமாதல் வேண்டும். எவ்வாறு? இது வாலறிவைப் (தூய நல்லறிவை) பெற வேண்டும்; வேண்டுதல் வேண்டாமை இல்லாததாக வேண்டும்; பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்க வேண்டும்; பிறவிப் பெருங்கடலை நீந்திக் கடக்க வேண்டும். அந்த நிலையை அடைதலே 'சிவம்' ஆதல்.

## 3) பக்குவப் படுத்தும் முயற்சித் துன்பங்கள்

நமக்கு வரும் பட்டறிவு அனுபவத் துன்பங்கள் நம்மைப் பக்குவப் படுத்த வருவனவே. 'இடும்பைக்கு இடும்பை படுப்பத், இடும்பைக்கு இடும்பை படா அதவர்' என்பது திருக்குறள். துன்பங்கண்டு அஞ்சாது, அதிலிருந்து ஒரு பாடங் கற்றுக் கொள்ள வேண்டும். அத்தகையவனிடம் மீண்டும் மீண்டும் துன்பம் வராது.

நடித்து மண்ணிடைப் பொய்யினை
நான் எனது எனும் மாயக்
கடித்த வாயிலே நின்று முன் வினை மிகக்
கழறியே திரிவேனைப்
பிடித்து முன்னின்று அப் பெருமறை தேடிய
அரும் பொருள் அடியேனை
அடித்து அடித்து அக் காரம் முன் தீற்றிய
அற்புதம் அறியேனே

பொய்யான நிலையில் கிடந்து உழன்ற மாணிக்க வாசகரிடம், வேதங்களும் தேடிக் காணாத இறைவன், தேடிவந்து, அவருக்குத் துன்பம் பல தந்து அடித்து அடித்துப் பக்குவப் படுத்தினாராம். எப்படி?

அடியேனை அடித்து அடித்து அக்காரம் முன்தீற்றிய அற்புதம் அறியேனே' - மாவுருண்டை செய்ய மாவுடன் சர்க்கரையைக் கலந்து அடித்தடித்து உருட்டுவார்கள்! இரண்டும் ஒன்றாகும் வரை அடிப்பார்கள். இந்த உயிர் சிவமாகிக் கலந்து ஒன்றாகும் வரை, துன்பம் பல தருகிறது இறைமை.

நம் வாழ்விலும் முயற்சித் துன்பங்கள் நம்மைப் பக்குவப் படுத்தப் பட்டறிவும் தரவே வருகின்றன என்பதை நாம் உணர்ந்தால், வாழ்வில் வெற்றி பெறுவது உறுதி!

## 4) இலக்கை அடையும் வரை நடந்து கொண்டே இருக்க வேண்டும்!

அமெரிக்கக் கவிஞன் இதாபர்ட்டு பிராஸ்டு,

'Many miles to go before a sleep
Many miles to go before a sleep'

என்றான்.

குதிரையில் போய்க் கொண்டிருக்கின்றான். வழியிடையே அழகிய பள்ளத்தாக்கு; அருவி நீர், சோலைகள், பழத் தோட்டம், நிழல் எல்லாம் சோர்வை நீக்கி, ஓய்வெடுக்கத் தூண்டுகின்றன. ஆனாலும் போக வேண்டிய தூரம் இன்னும் வெகு தொலைவு உள்ளதே. ஓய்வெடுத்தால் காரியம் கெட்டுவிடுமே!

ஆகவே அவன் தன் மனதை அடக்கிக் கொண்டு, மேலும் மேலும் போய்க் கொண்டே இருக்கின்றான். யாத்திரைப்பத்தில் மாணிக்க வாசகர் பாடுவதைப் பாருங்கள்:

நிற்பார் நிற்க, நில்லாவுலகில்
நில்லோம் இனி நாம் செல்வோமே!
பொற்பால் ஒப்பான் திருமேனிப்
புயங்கள் ஆள்வான் பொன்னடிக்கே,
நிற்பீர் எல்லாம் தாழாதே
நிற்கும் பரிசே ஒருப்படுமின்!
பிற்பால் நின்று பேழ்கணித்தால்
பெறுதற்கு அரியான் பெம்மானே!

இறைமையை அடைய வேண்டும்; சிவமாதல் வேண்டும். மாணிக்க வாசகர் யாத்திரை புறப்பட்டுவிட்டார். தம்முடன் வரவிருக்கும் அடியார் கூட்டத்தைப் பார்த்துப் பேசுகின்றார். நிற்பவர் நில்லுங்கள்! இதுவோ நிலையற்ற உலகம். காலம் போய்க் கொண்டே இருக்கும். இனி நாம் நில்லோம்; உங்களுக்காகக் காத்திருக்க மாட்டோம்! சென்று கொண்டே இருப்போம்! பொன்னிறச் செவ்வானம் சிவனது பொன்னடியே நாம் அடைய வேண்டிய இடம். அக்குறிக்கோளை அடைய வேண்டும். இங்கு நிற்கின்ற நீங்களெல்லாம், ‘தாழாதே நிற்கும் பரிசு! (தாமதம் செய்யாத நிலை) ஒன்றையே கடைபிடியுங்கள்! பிறகு காலந் தாழ்த்து, அடைய வேண்டிய குறிக்கோளை அடைய முடியாமல், பிறழப் பிறழ வீழ்ந்தால், பயனில்லை. எம் பெருமான் பெறுதற்கு அரியான்!’ இதை அறிவீராக!

குறிக்கோளை அடைய விரும்பும் மாணவனுக்கு இது பொருந்தாதா? தொழிலில் போட்டியிட்டு வெற்றி பெற விரும்புபவனுக்கும் இது மிகவும் ஏற்புடையதல்லவா? பழனிக்கு நடப்பவர்களுக்கும் இது பொருந்துமே.

இவ்வாறு எத்தனையோ வாழ்வியற் சிந்தனைகள் திருவாசகத்தில் உள்ளன. நம் சமயமே, இவ்வுலகை வாழவைக்கும் இடமாகக் கருதுவது; இவ்வாழ்வை விருப்போடு பார்க்க வைப்பது. இந்த உலகை விட்டு ஓட வேண்டியதில்லை.

பக்குவப் பட்டவன் வீடு பேறு அடைவான்; சிவனாவான். இது நம் சமயச் சிந்தனை. பக்குவப் பட்டவன் இவ்வுலக வாழ்விலும் வெற்றி பெறுவான். இதுதான் வாழ்வியற் சிந்தனை. நம் திருமுறைகளை இந்த நோக்கிலும் பார்க்க வேண்டும்.

# ராஜராஜன் திருமுறை கண்டது

அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் முதலியவர்களால் பாடப் பெற்ற தேவாரத் திருமுறைகள் தில்லையம்பதியில் அடைபட்டுக்கிடந்தவற்றை நம்பியாண்டார் நம்பியார் பேருதவியால் கண்டு வெளிப்படுத்தியவன் நம் இராஜ ராஜனே. அப்பணியில் பண்சுமந்த பாடல்களும், தமிழும், சிவநெறியும். பக்தித்துறையும் பெற்ற பேறு அளப்பரியதாம். கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியார் அருளிய திருமுறை கண்ட புராணம் ஓரளவு அப்பெரும் பணியைப் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

அதில் இராஜராஜன்,

“உலகம் மகிழ்தரு ‘சையம்’ மீது தோன்றி ஓவாது வரு பொன்னி சூழ் சோணாட்டின் திலகம் என விளங்கும் மணி மாட ஆரூர்த் தியாகேசர் பதம் பணிந்து செங்கோல் ஓச்சி அலகு இல் புகழ்பெறு ராசராச மன்னன் அபய குல சேகரன்”. என்று அருமையாகக் குறிக்கப் பெறுகிறான். கதை இதுதான்; சிவபெருமான் மீது எல்லையில்லாபக்தி பூண்டொழுகியவன் இராஜராஜன். ஒரு நாள் தேவாரப் பாசுரங்களில் சிலவற்றை ஓதக் கேட்டான். செவிக்குத் தேனென இனித்த அப்பாக்கள் அவன் உள்ளத்தில் பாய்ந்து மெய் புளகிக்க, விழிநீர் அருவிபாய, ஒப்பரிய ஓர் உணர்ச்சியை விளைத்தது. பாடியோரைக் கேட்டான். எவர் அருளிய தெய்வப் பாசுரங்களைப் பற்றியும் அறிந்தவாறு எடுத்து உரைத்தார்கள். ஏனைய பல்லாயிரம் பாசுரங்கள் இருக்குமிடமெது எனக் கேட்க பிறவற்றின் இருப்பிடம் யாதெனப் புலப்படுத்த அவர்களால் இயலவில்லை.

மிக்க ஆர்வத்தனாய் நாடெல்லாம் தேட ஆணையிடுகிறான். அப்படியும் அவை கிடைத்தபாடில்லை. அந்தச் சந்தர்ப்பத்தில் திருநாரையூரில் ஆதிசைவ மரபில் தோன்றிய நம்பியாண்டார் நம்பிகள் அவ்வூர்ப்பொல்லாப் பிள்ளையாரை அமுது படையலை உண்ணச் செய்யும் அற்புதம் நிகழ்த்தியும் அவர்பால் தமருடன் வளர்தரு சதுர் மறைகளைக் கேட்டு உணர்ந்தும் வருதலை இராஜராஜன் கேள்விப்படுகிறான். முக்கனிகளும், பால், தேன் முதலிய பற்பல உண்டிகளும் எடுத்துக் கொண்டு திருநாரையூருக்கு மல்லல் மிகு சேனையுடன் இராஜராஜன் மன்னனும் வந்து சேர்ந்தான். வந்த மக்களையும் பண்டங்களையும் கொள்ள அந்நகரமே போதவில்லை. இராஜராஜன் நம்பியை அடிபணிந்து வேழமுகத்தோனுக்குக் கொணர்ந்த பல பண்டங்களையும் எடுத்துரைத்து அனத்தையும் இப்போழுதே அவனுக்குப் படைத்தருள்க என வேண்டி நின்றான். நம்பி வினாயகனை அடிபணிந்து அனைத்தையும் உண்டருள வேண்ட ஒன்றுவிடாமல் உண்டருளினார் பொல்லாப் பிள்ளையார். இந்த அற்புதத்தைக் கண்டு மெய் அரும்பி, உளம் நெகிழ்ந்து, விழிநீர் சோர வியந்து மகிழ்ந்து நின்ற மன்னர் மன்னன். இவர் உதவியால்தான் திருமுறைகளின் இருப்பிடத்தை அறிய முடியும் என்ற முடிவிற்கு வந்தான். மூவர் அருளிய திருமுறைகளை உலகில் விளக்கம் பெற நீர் அருள வேண்டும் என நம்பிகளை வேண்டி நின்றான். நம்பிகளோ கண்ணீர் மல்கி, உள்ளம் கசிந்துருகி, பிள்ளையார் அடி பணிந்து மூவர் தமிழ் இருந்தவிடம் தெரிந்தருள்க என, பொல்லாப் பிள்ளையார் தில்லைச் சிற்றம்பலத்தின் புறக்கடையின் பக்கம் கைமுத்திரையிட்ட அறையினுள்ளே அவை உள என உரைத்தார். கேட்ட மன்னன் கிளர்ந்தெழு மனத்தினனாகி, திருச்சிற்றம்பலத்தை அடைந்து மறையோர்கள் பலருக்கும் “கணபதி கூறியது இது” என்று நிகழ்ந்ததை எடுத்துரைத்தான். தில்லை வாழ் அந்தணர்களோ அவற்றைச் செய்து வைத்த மூவர் வந்தாலன்றி அறையைத் திறக்க முடியாது எனக் கூறினார்.

நுண்ணறிவுமிக்க இராஜராஜன் கூத்து வல்லானுக்குரிய ஆதிரைத் திருநாள் அன்று பெருவிழாவை எடுத்துத் தமிழ் விரகர் மூவர் தமிழ் இருக்கும் அறையின் முன் கொணர்ந்து "மூவரும் வந்தாயிற்று. இனி அறை திறக்கப்படலாம்" என ஆணையாக வெளிப்பட்டது இராஜராஜன் குரல் கேட்டது. வேறு வழியின்றி அறைக்கதவு அந்தணர்களால் திறக்கப் பட்டது. ஏடு இருந்த இடத்தில் எழும்பியிருந்தது கரையான் புற்று. மன்னன் மாதுயரம் உற்றான். மண் செறிவை எல்லாம் நீக்கி தைலக்கிடங்கள் பலவற்றைச் சொரிந்து செல்மடியச் செய்து திரு ஏடுகளை எடுக்க, அளவற்ற ஏடுகள் அழிந்து பயனற்றதாய் விளங்கக் கண்டு உள்ளம் நைந்து அழுது புலம்பி அயர்ந்து நின்றான். அப்போது "சைவநெறித் தலைவரெனும் மூவர் பாடல் வேய்ந்தனபோல் மண்மூடச் செய்தே- ஈண்டு வேண்டுவன வைத்தோம்" என்று ஓர் அசரீரி ஒலித்தது. அதைக் கேட்ட மன்னன் மண்டிய துயரம் மாற மகிழ்ச்சியுற்று நம்பியாண்டார் நம்பி அடிகள் முடி சேர்த்து நன்றிப் பெருக்கைப் புலப்படுத்தினான். சிவனடியார்க்கெல்லாம் உதவுக என்று தனது பண்டாரத்தைத் திறந்து விட்டான்.

அத்தெய்வப் பாடல்களுக்குப் பண்டிருந்த வகையில் இசை அமைப்பு செய்ய எண்ணினான். அந்த நோக்கத்தோடு திருஎருக்கத்தம்புலியூர் திருக்கோவில் சென்று சிவனை வணங்கிப் பண்ணமைக்கும் பணி சிறக்க உதவவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். இசையும் யாழும் வல்ல பாணர் குடியில் தோன்றிய நங்கை ஒருத்திக்குப் பண்ணியல்பு முழுது பொருந்த அருள்புரிந்துள்ளோம் என்று இறை சிவன் எதிர் மொழிந்தான். அதைக் கேட்டு உளம் மகிழ்ந்த இராஜராஜன் அவளை அழைத்து வந்து அவளைக் கொண்டு பண்ணமைக்கும் வழி என்ன என்று சிந்தித்தான். அப்பொழுது, அவளை அழைத்த திருச்சிற்றம்பலத்தின் உள்ளே கூத்தப்பிரான் திருமுன்புசகல மரியாதைகளுடனனும் அமரச் செய்து அவள் பணித்தவாறு அப்பாடலுக்கு இசை அமைப்பது பொருந்தும் என ஓர் ஒலி கேட்டது. அந்த ஒலியை மன்னன், நம்பி மறையவர்கள், மற்ற பல சிவனடியார் முதலியோர்கள் கேட்டார்கள். எனவே அதற்கேற்ப ஏழு திருமுறைகளாக மூவர் தமிழை வகுத்துப் பண் அமைத்து ஒப்பரிய மெய்ப்பணியைச் செய்து உயர்ந்தான்.

சொல்லொணாப் பெருமுயற்சியின் காரணமாக வெளிப்படுத்தப்பட்ட உண்மையும். இயல்பாகவே அப்பாசுரங்களின் தத்துவச் செறிவிலும் இலக்கிய நயத்திலும் பக்திச் சுவையிலும் ஈடுபட்டு மகிழும் ஆர்வமும் இராஜராஜனைத் திருமுறைச் செல்வனாகவே ஆக்கிவிட்டன. பல்லாயிரம்பாடல்கள் அநியாயமாக அழிந்தவை போக எஞ்சியுள்ள இச்சில்லாயிரம் பாடல்களாவது பொன்றாது பொலிய வேண்டும் என்ற பெருங்காதலால் இதற்கென ஒரு பெரும் அறக்கொடை நிறுவியிருக்கின்றான். நான் முழுவதும் இடையீடின்றித் தேவாரத் திருப்பதிகங்களை ஓதிக் கொண்டே இருப்பதற்காக நாற்பத்தெட்டு ஓதுவார்களையும் இரண்டு உடிக்கை, மத்தளக்கைஞர்களையும் நியமித்திருக்கிறான். இவர்கள் ஐம்பது பேருக்கும் நாளொன்றுகு ஒவ்வொருவருக்கும் முக்குறுணி (இருபத்துநான்கு பட்டணம் படி) நெல் சம்பளமாகக் கொடுத்து வைத்திருக்கிறான். இனியும் எக்காரணத்தினாலும் உள்ள பாடலுக்கும் ஊறு வந்து விடப்படாது என்ற அக்கறையும், ஆர்வமுமே இதைச் செய்ய இராஜராஜனைத் தூண்டியிருக்க வேண்டும்.



# அறுபடை வீடுறை அழகன்

முதல்வர், முனைவர் திருமதி.இளம்பிறை மணிமாறன்

முருகு என்ற சொல் ஒரு அழகிய தமிழ்ச்சொல். அழகன் முருகன் என்றும் இளைஞன். இளமையும் அழகும் இனிது நிரம்பி, நம் கண்ணையும் மனதையும் நிறைக்கும் எழிலன். அறுமுகமும் ஒருமுகமாய் மலர்ந்தொளிரும் இனியவன். அவன் குடிகொண்ட இடமெல்லாம் அழகின் தேக்கம். சோலை நடுவில், ஆழ்கடலில் அருகில், மலையின் முகட்டில், என்று அவனுக்குத்தான் எத்தனை அழகிய இடங்கள். நமக்கெல்லாம் நல்வழிகாட்டி, உய்விப்பதன் பொருட்டு அவன் அமர்ந்திருக்கும் படைவீடுகள் ஆறு என்பர். ஆறு என்ற சொல்லுக்கு 'வழி' என்று ஒரு பொருள் உண்டு.

உய்வுக்கு வழிகாட்டும் முருகனின் திருத்தலங்களே ஆறுபடைவீடுகள் என்று கொள்ளலாம். "வாருங்கள்! உங்களை ஆதரித்துக் காத்து, அருள் தருவேன் என்கிறான் முருகன்! "அவனது தாமரைத் திருவடிகளைச் சரணடைய வாருங்கள்!" என்று நம்மை அழைத்து முருகனிடம் ஆற்றுப்படுத்தும் திருத்தலங்கள் என்பதாலும் இவை ஆறுபடைவீடுகள் என்று அழைக்கப்படுகின்றன. முருகன் எழுந்தருளி அருள்பாலிக்கும் இடங்கள் எல்லாம் ஆறுபடைகள் வீடுகள் தாம் என்றாலும், குறிப்பாக ஆறு இடங்களை ஆறுபடை வீடுகள் என, நம் முன்னோர் நமக்கு அறிமுகப்படுத்தி உள்ளனர்.

இவற்றுள் முதல் இடம் பெறுவது திருப்பரங்குன்றம் என்ற முதலாம் படைவீடு. சொந்தமும் பந்தத் தொடரால் சிக்கித் தவிக்கும் மனிதர்களுக்கு, பாவ விமோசனம் தந்து அருள்பாலிக்கும் குருபரனாக பரங்குன்றத்துச் சரவணபவன் எழுந்தருளி உள்ள திருத்தலம். சூராதி அவுணர்களின், கொடுமையிலிருந்து தேவாதி தேவர்களை மீட்டு, அவர்களுக்குத் தேவலோகத்தைத் திருப்பிக் கொடுத்த கருணையை நினைத்து, 'முருகனுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்' என்று மருகினான் வானுலக தேவர்களின் தலைவனான தேவேந்திரன். பின்னர் ஒருவாறு சிந்தித்துத் தன் பெண்மகளான தேவசேனையை முருகனுக்குத் திருமணம் செய்து கொடுத்து மகிழ்ந்தான். 'கூந்தலஞ் சிறுபுறக் குஞ்சரம்' தன்னை மகபதி முருகனுக்குத் தந்தான்.

'முத்தைத் தரு பத்தித் திருநகை அத்தி' எனப்படும் தேவசேனையைத் திருக்கல்யாணம் செய்து கொண்ட இடமே திருப்பரங்குன்றமாகும். முதலாம் படைவீடு ஒரு திருக்கல்யாணத் தலம்.

"சிவபூஜையில் கவனம் சிதறிப்போனதால், குகையில் அடைபட்டுக் கிடந்த நக்கீரர் உட்பட்ட ஆயிரம் பேரையும், முருகனின் கைவேல், கற்கிமுகி என்ற பூதத்தின் கையிலிருந்து காப்பாற்றி இரட்சித்த சம்பவம் நடைபெற்றது திருப்பரங்குன்றத்தில் தான். இந்தப் படைவீட்டில்தான் குகைக்குள், பூதத்தால் அடைக்கப்பட்ட நக்கீரர் முருகன் தன்னைக் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கையுடன் திருமுருகாற்றுப்படை என்ற தோத்திரப் பாடலால் முருகனது அருளை இறைஞ்சினார். ஆறுபடை வீடுகளிலும் உறையும் முருகனின் அருள் தன்னை முன்னின்று காக்க வேண்டும் என்று நக்கீரர்,

'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல் கண்டாங்கு'

என்று தொடங்கி

'பழமுதிர்ச் சோலை மலை கிழவோனே'

என்று பாடித் துதித்தார். அடைபட்டுக் கிடந்த ஆயிரம் பேரையும் குளத்தில் குளித்துவிட்டு வந்து, தன் பசிக்கு இரையாக்கிக் கொள்ளலாம் என்று குளிக்கச் சென்ற பூதத்தைத் தேடிப் புறப்பட்டது முருகனின் கைவேல்! வீரவேல்! தீரவேல்! விண்ணோர் சிறைமீட்ட தாரைவேல்! பூதத்தினை வீழ்த்தி, ஆயிரவர் அடைபட்டுக் கிடந்த குகையை உடைத்து, நக்கீரர் உட்பட்ட ஆயிரம் பேரைக் காப்பாற்றியது. திருமுருகாற்றுப் படையைத் தொடங்கிச் சொல்லி முடிக்க ஆறு நிமிடங்களே ஆகும். ஆறு நிமிடங்களில் ஆயிரம் பேர் உயிரைக் காப்பாற்றிய மந்திரம் திருமுருகாற்றுப்படை. உயிர்காக்கும் மந்திரம். அன்று ஆயிரவர் உயிர்காத்த முருகனின் கைவேல் என்றும் நம்பினாரைக் காக்கும். சிலம்பும் கனக தண்டையும், கிண்கிணியும் ஒண் கடம்பும் புனையும் அடியுடை முருகனைக, கந்தன் என்று உற்று நாளும் அன்புடன் நினைவாருக்கு முன்வினைத் தீமையனைத்தும் போக்கி அருள் பாலிப்பான்.

அலைபாயும் கடலோரம், அழகிய படைவீட்டில், அறிவால் அறிந்து, இருதாள் இறைஞ்சும் அடியார் மனத் துயரை மாற்றும் மருந்தாக எழுந்தருளியிருப்பவன் திருச்செந்திலாதிபன்.

திருச்செந்தூர், முருகனின் இரண்டாம் படைவீடு, எனவே அங்கு எழுந்தருளி அருள்பாலிக்கும் முருகனை ஒரு கோடி முத்தம் தெள்ளித் தெளிக்கும் கடற்செந்தில் மேவிய சேவகன் என்று அழைக்கிறார் அருணகிரிநாதர்.

திருச்செந்தூர் தேவாதி தேவர்களின் துன்பம் முருகப் பெருமானால் நீக்கப்பட்ட இடம். சூராதி அவுணர்களுடன் முருகன் நிகத்திய யுத்தம் தேவாசுரயுத்தம் எனப்படும். இந்த யுத்தம் நடைபெற்ற கடற்கானலில் முருகப்பெருமான் சூரனை வெற்றிகொண்டு தேவேந்திரனுக்கு அவன் இழந்த பதவியை மீட்டுக் கொடுத்தான். சூரனை முற்றிலுமாக அழித்து வீழ்த்தி விடாமல், அவனைச் சேவலாகவும், மயிலாகவும் மாற்றித், தன்னை வழிபடுகிறவர்கள், சேவலையும் மயிலையும் வழிபடும்படியாகச் செய்த கருணையாளன் திருச்செந்தூர் பாலசுப்பிரமண்யப் பெருமான்.

தீவினை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவராகி மேலைத் தொல்கதி அடைவார் என்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் இந்நாட்செய்த
மாயையின் மகனும் அன்றோ வரம்பிலா அருள் பெற்றுய்ந்தான்

என்று பாடுவார் கச்சியப்ப சிவாச்சாரியார், தீயவனாக சூரனுக்கும் அருள்புரிந்து, அவனைத் தூய்மையானவனாக மாற்றிய முருகன். கொள்ளித் தலையில் எறும்பதுபோல் குலையும் நம் உள்ளத் துயரை ஒழிப்பவன்.

இருபத்து நான்கு தீர்த்தக் கட்டங்களை உடைய புண்ணிய பூமியில் சமுத்திரக் கரையில் எழுந்தருளி அருள் பாலிக்கிறான் முருகன். அருணகிரிநாதருக்கு அருள்பாலித்தான். சாக்தரான ஆதிசங்கரரும் பழுத்த வைணவர் பகழிக் கூத்தனாருக்கும் அருள்பாலித்தவன். தலபுராணம் பாடிய வென்றிமாலைக்கும், கந்தசாமிப் புலவருக்கும் அருள்தந்தவன். வாய்பேச இயலாத குமரகுருபரக் குழந்தையைப் பேசவைத்து கந்தர்கலிவெண்பா பாடச் செய்தவன். ஞானியாருக்கு

கருணை பாலித்தவன். அவன் அந்தண்மறை வேள்வி காவற்காரன்; செந்தமிழ்ச் சொல் பாவின் மாலைக்காரன்; அண்டர் உபகார வேலைக்காரன்; முடிமேலே அஞ்சலி செய்வோர்கள் நேயக்காரன்; அந்தம் வெகுவான ரூபக்காரன்; சிந்துரமின் மேவு போகக்காரன், விந்தை குறமாது வேளைக்காரன்; செஞ்சொல் அடியார்கள் வாரக்காரன்; செஞ்சமரைமாயு மாயக்காரன்; செந்தில் நகர் வாழும் ஆண்மைக்காரன் என்று மகிழ்ந்து துதிக்கிறார் அருணகிரிநாதர்.

சிவபெருமானைப் பூஜைசெய்வதற்குக் கையில் எடுத்த மலருடன் காட்சிதரும் மூலவர் பாலசுப்ரமண்யப் பெருமான் என்றழைக்கப்படுகிறார். உற்சவர் ஆறுமுகநயினார் என்னும் அழகுமிகு சண்முகர்! ஆனந்தத் திரள்! நம் உள்ளங்களை எல்லாம் கொள்ளை கொள்ளும் பேரழகர்! இரண்டாம் படைவீட்டில் உறையும் எல்லையில் சீர் இளங்குமரனின் பேரழகில் ஈடுபடாதவர் யார்? இரண்டாம் படைவீட்டு முருகன் தன்னை நாடி வந்தவர்களின் துன்பத்தைத் துகளாக்குகிறவன். நாம் துன்பப்படும் போதெல்லாம் 'இது என் தலை விதி' என்று நொந்து கொள்கிறோமே அந்த துன்பந்தரும் விதியையே மாற்றி அமைக்கும் அருட்பேராற்றல் உடையவன் தான், இரண்டாம் படைவீட்டு முருகன். எல்லையற்ற அவன் கருணையைப் பாடும்போது, நமக்கு தலை எழுத்து பிரம்மனால் மோசமாக எழுதப்பட்டிருந்தாலும் நாம் முருகனின் திருவடியை சிரமேற் கொள்வோமாகில், அந்த மோசமான எழுத்து முருகனால் அழிக்கப்பட்டு, நமக்கும் ஒரு புதிய எழுத்து நல்ல எழுத்தாக எழுதப்படும் எனச் சொல்கிறார் அருணகிரிநாதர்.

'சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில, தேங்கடம்பின்
மால் பட்டழிந்தது பூங்கொடியார் மனம், மாமயிலோன்
வேல் பட்டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும், இங்கவன்
கால் பட்டழிந்ததென் தலைமேல் அயன் கையெழுத்தே'

விதியையே மாற்றி அமைத்து, எமனையும் வெற்றி கொள்ளும் பேராற்றலுடன் இரண்டாம் படைவீட்டில் மாலயன் தனக்கும், மற்றை வானவர் தமக்கும், மூல காரணமாய் நின்ற மூர்த்தியாக எழுந்தருளி உள்ளான் முருகன்.

எம்பெருமானின் மூன்றாவது படைவீடு பழனி என்றழைக்கப்படும் திருவாவினன்குடி.

ஞான பண்டிதனாக மலைமேல் எழுந்தருளி இருக்கும் மயிலேறிய மாணிக்கம் உறையும் திருஆவினன்குடி, ஐவர் தபசுசெய்த இடம். 'திரு' என்ற சொல் மகாலட்சுமியையும், 'ஆ' என்ற எழுத்து காமதேனுவையும் 'இனன்' என்ற சொல் சூரியனையும் 'கு' என்ற எழுத்து பூமாதேவியையும் 'டி' என்ற எழுத்து அக்னியையும் குறிக்கும். இவ்வாறு ஐவர் தவம் செய்த இடம் திருஆவினன்குடி என்றழைக்கப்படுகிறது. அம்மையப்பரைச் சுற்றி வந்து, விநாயகர் முதலி.ல் மாங்கனியைப் பெற்று கொண்டதால் கோபமுற்ற முருகன் கோபத்தில் பழனிமலையில் வந்து அமர்ந்தான் என்பதை புராணக் கதை நமக்குச் சொல்கிறது. பழனிமலைப் பரமன் ஞான பண்டிதன்,

'நாத பிந்து கலாதி நமோ நம
வேதமந்த்ர சொரூபா நமோ நம
ஞான பண்டித சாமீ நமோ நம'

என்று பாடிப் பரவுகிறார் அருணகிரிநாதர். கும்பிட்டவனை கோடீஸ்வரனாக ஆக்குபவன் பழனி முருகன். எல்லாம் தனக்கு வேண்டுமென்று எண்ணுபவன், யாருக்கும் எதையும் தரமாட்டான். தனக்கு எதுவும் வேண்டாம் என்று ஆண்டிக் கோலத்தில் நிற்கும் பரம்பொருள், அனைத்தையும் நமக்கு வழங்கும் வள்ளலாக

விளங்குகிறான். 'அதிசயம் அநேகம் உற்ற பழனிமலை' என்று பாடுவார் அருணகிரிநாதர். பழனியின் நாயகனான முருகன் நிகழ்த்தும் அருளிச் செயல்கள் ஒரு கோடி என்றால் பெரிதாமோ?" என்கின்ற நிலை தான்.

ஞானபண்டிதனை வணங்குவோருக்கு செல்வம் கிடைக்கும். நினைப்பது நடக்கும்; நல்ல உணவு; உடை; நீண்ட ஆயுள், நல்ல கண்ணொளி, அனைத்தையும் அருள்வான் முருகன். பகையின்றி அனைவரும் நம்முடன் உறவு கொள்ளச் செய்வான். நல்ல நிலபுலம், பூமிச் சொத்துகள், வாகனங்களைப் பெற்று அனுபவிக்கும் வாய்ப்பினைத்தரும். அக்னிபகவானின் தயையும் நமக்குக் கிடைக்கப்பெறலாம். ஏனெனில் இந்தப் புண்ணியத் தலத்தில் ஐயர் தவமியற்றி உள்ளனர்.

'ஒருபொழுதும் இரு சரணம் நேசத்தே வைத்து உணரேனே! உனது பழனி மலை என்னும் ஊரைச் சேவித்து அறியேனே' எனப் பாடுகிறார் அருணகிரியார். இந்த வரிகள் பழனி என்ற ஊரைச் சேவித்தாலேயே புண்ணியம் உண்டாகும் என்பதனை நமக்கு எடுத்துரைக்கின்றன. "பழனி மலையருள் செய் மழலை மொழி மதலை; பழனி மலையில் வருபெருமாளே" என்று அருணகிரிநாதர் உருகுகிறார். அருணகிரிநாதருக்குத்தான் இந்த மூன்றாம் படைவீட்டு முருகனிடம் எத்தனை ஈடுபாடு.

ஆதரம் பயில் ஆரூரர் தோழமை
சேர்தல் கொண்டவரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயிலையில் ஏகி
ஆதி அந்த உலா வாசு பாடிய
சேரர் கொங்கு வைகாவூர் நன்னாடதில்
ஆவினன் குடி வாவான தேவர்கள்-பெருமானே

என்று பாடுவதில் தான் எத்தனை அழகு. கேட்டவர்களுக்கு, கேட்ட வரம் தரும் ஞான பண்டித முருகன், பழனி ஆண்டவர் என்ற செல்லப் பெயருடன் நம்மை அரவணைத்து அருள்பாலிக்கும் தலம் மூன்றாம் படைவீடான திருவாவினன் குடி.

'ஏர்' என்ற சொல்லுக்கு அழகு என்று பொருள். திரு என்றால் செல்வம், அழகு. திருவேரகம் என்று அழைக்கப்படும் நான்காம் படைவீடு, செல்வமும், அழகும் நிறைந்த சுவாமிமலை. செயற்கைப் படிகள் அறுபது ஏறிச் சென்று ஆறுமுகனைத் தரிசிக்க வேண்டும். இந்த அறுபது படிகளும் அறுபது தமிழ் வருடங்கள். மனித வாழ்க்கையில் அறுபது வயது என்பது ஒரு முழு நீள வாழ்க்கை. அறுபது படியேறிச்சென்று அதனையும் கடந்து சுவாமிநாதனை வணங்குபவன், அறுபது வயதினையும் தாண்டி வாழ்ந்து முருகன் திருவருளால் நல்ல கதி அடைவான் என்பது நம்பிக்கை.

ஆஜானுபாகுவாகத் தோற்றமளிக்கும் சுவாமிநாதப் பெருமான் தீர்க்காயுளைத் தருபவன். தந்தைக்கு மந்திரத்தைச் சாற்றிப் பொருள் உரைத்தமையால் இவன் தகப்பன்சாமி. சிவனார் மனங்குளிர இருசெவிமீதிலும் உபதேச மந்திரம் பகர்ந்த குருநாதன். இவனே அருணகிரிநாதருக்குப் பிரணவத்தின் பொருளை உணர்த்தி அருளியவன். சுவாமிநாதனை வணங்கினால் எமபயம் இன்றி இருக்கலாம் என்பதனை சற்று சிலேடை கலந்த நகைச்சுவையுடன் பலபட்டடைச் சொக்கநாதர் என்ற புலவர் பாடுகிறார். சுவாமிநாதனைச் சரணடைந்தவனுக்கு எமனால் பயமில்லை. இந்த காயம் எனப்படும் உடம்பில் இருந்து உயிர் போய்விட்டால், அயச்செந்தூரம் என்ற மருந்தைக் கொடுத்து, உயிரை வரவழைத்துவிட முடியுமா? உயிர் போன பின், இந்த காயத்தை சுமந்து கொண்டு இருப்பார்கள் யாருமில்லை. எனவே சீரான அகத்தை எனக்குத் தந்து, என்னை சம்சார சாகரத்தில் இருந்து கரையேற்றிக் காப்பாற்றினால், இனியொரு பிறவி வேண்டாம் என்று அவன் திருவடியில் கலந்து மகிழ்வேன் என்ற கருத்தை.

'வெங்காயம் சுக்கானால், வெந்தயத்தால் ஆவதென்ன
இங்கார் சுமந்திருப்பார் இச் சரக்கை
மங்காத சீரகத்தைத் தருவீரல் வேண்டேன் பெருங்காயம்
ஏரகத்துச் செட்டியாரே '

என புலவர் நகைச்சுவை தோன்றப் பாடுகிறார்.

அருணகிரிநாதர், இந்த முருகனை வழிபடுபவனைக் கண்டால், உயிர் பறிக்க வரும் காலனே அஞ்சி ஓடுவான் என்கிறார். காலன் வருமுன்னர் முருகனிரு கால்களே கதியென்று நாம் இருக்க வேண்டும் என்று நமக்கு நல்வழி காட்டுகிறது. இந்த மூன்றாம் படைவீடு. ஆடும் மயிலினில் ஏறி அமரர்கள் சூழ முருகன் வரும் காட்சியை நம் மனக் கண் முன்னால் கொண்டு நிறுத்துகிறது திருப்புகழ்,

'பாதி மதி நதி அணிசடை நாதர் அருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள் பாதம் வருடிய மணவாளா!
காதும் ஒருவிழி காகமுறவருள் மாயன் அரிதிரி மருகோனே
காலன் எனை அணுகாமல் உனதிரு காலில் வழிபட அருள்வாயே
ஆதி அயனொடு தேவர் சுரருல காளும் வகையொரு சிறைமீளா
ஆடுமயினில் ஏறி அமரர்கள் சூழவர வரும் இளையோனே
சூதமிக வளர் சோலை மருவு சுவாமி மலைதனில் உறைவோனே
சூரன் உடலற வாரி சுவறிட வேலை விட வல பெருமாளே'

எமபயத்தைப் போக்கி, அகாலமான சோதனைகளில் இருந்து நம்மைக் காப்பாற்றி நமக்குத் தீர்க்காயுளைத் தருபவன், நாலாம் படைவீடான திருவேரகத்தில் எழுந்தருளியுள்ள சுவாமிநாதப் பெருமான்.

முருகனுக்குக் குன்றாடும் குமரன் என்று பெயர் எப்போதும் உண்டல்லவா! குன்று கண்ட இடமெல்லாம் குமரன் இருப்பான். மலைமேல் விளங்கும் திருத்தணி முருகன் அருள் செய்யும் இடம் ஐந்தாம் படை வீடு. எண்ணற்ற நலங்களை நமக்கு வாரித் தரும் இந்த அற்புதத் திருத்தலத்தில் உல்லாசமாக எழுந்தருளி உள்ளான் வள்ளி முருகன் தேவசேனா சமேத முருகப்பெருமான். சூரனை சம்ஹரித்த பின்னர், முருகன் சினந்தணிந்து அமர்ந்திருக்கும் மலைதான் செருத்தணி என்னும் திருத்தணி. முத்துசாமி தீட்சிதரும் இசை ஞானம் தந்த முருகன். அருணகிரியாரின் பாடல் கேட்டு மகிழ்ந்த முருகன். முருகன் திருத்தணி மலையில் கொடி கட்டிக்கொண்டு ஆட்சி செய்கிறான். அவன் கட்டியிருக்கும் கொடி சேவற்கொடி. சேவற்பதாகையன் என்பது முருகனின் திருநாமங்களில் ஒன்று. அவன் கொடியில் இருக்கும் சேவல் எழுந்து 'கொக்கரக்கோ' என்று கூவுகிறதாம். 'கொக்கரக்கோ' என்றால் மாமரமாய் நின்ற சூரன் உரம் கிழித்தவன் என்று பொருள். சூரன் என்னும் அசுரனையா முருகன் அழித்தான். இல்லவே இல்லை. சூரன் என்னும் வடிவத்தினுள் புதைத்து நின்ற ஆணவத்தை அழித்தான். இறைவனை நாம் அடைவதற்குத் தடையாயிருக்கும். ஆணவத்தை நீக்க வேண்டும். அப்பொழுது தான் நமக்கு இறையருள் கிட்டும். அந்த ஆணவமும் அவனருளால் தான் விலக வேண்டும். எனவே கொடியிலிருந்து சேவல் கூவுகிறதாம். 'ஆணவத்தை விட்டொழியுங்கள்' என்று.

தன் பக்தர்களைக் காப்பேன் என்றும், அவர்களின் பகைவர்களைக் காப்பேன் என்றும் முருகன் கொடிகட்டிக் கொண்டு மலைக்கு மேல் கோட்டையில் கோட்டை கட்டி அரசாட்சி புரியும் இடமே திருத்தணியாகும். ஆவிக்கு மோசம் வருமுன் அவன் அருட்பதங்களைப் பற்ற வேண்டும் என்று நமக்கு அறிவுறுத்துகிறது கந்தர் அலங்காரப் பாடல்.

ஆவிக்கு மோசம் வருமாறு அறிந்து, உன் அருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றிலேன் வினை தீர்த்தருளாய்!
வாவித் தட வயல் சூழ் திருத்தணி மாமலை வாழ்
சேவற் கொடி உடையோனே அமர சிகாமணியே

இறைவனை அனுபவிப்பதற்குத் தடையாக இருக்கும் நம் கோபம், காமம், வெறுப்பு, பகை, பொய்மை, வஞ்சகம் இவை அனைத்தையும் போக்கி நம்மைத் தூயவர்களாக மாற்றி அவன் திருவடியில் சேர்க்கும் அருளைப் பொழியும் படை வீடே ஐந்தாம் படைவீடான திருத்தணி.

ஞானப் பழமான முருகப் பரம்பொருள் எழுந்தருளி அருள்பாலிக்கும் ஆறாம் படைவீடு பழமுதிர்ச் சோலை. மரத்தில் இருக்கும் பூவானது காயாகி, பின் கனியாகும். கனிந்த பின் நமக்கு உண்ணத் தெவிட்டா இன்பம் நல்கும். அருந்தத் திகட்டாமல், உவட்டாமல் இனிக்கும்தேனான முருகன், திருக்கோவில் கொண்டுள்ள படைவீடு பழமுதிர்ச்சோலை. பழமரங்கள் நிறைந்த சோலையில் பக்திப் பசியோடு வருவோருக்கு ஞானப்பழமாக இருப்பவன் முருகன். காய் முற்றி கனியாவது போல், அறிவு முற்றி, ஞானம் பிறக்கும். ஒருவன் தன் அறிவையெல்லாம் எப்பொழுது இறைவனிடத்தில் அடைக்கலப் படுத்துவானோ, அப்பொழுது ஞானம் பிறக்கும் தன்னை நாடியவனின் உண்மை அறிவை மறைக்கும் அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ம்மை ஞானம் தரவல்லவன் பழமுதிர்ச்சோலைப் பரமன். இந்த ஆறாம் படைவீடு முருகன் எழுந்தருளி இருக்கும் கர்ப்ப கிரகம் எனப்படும் மூலஸ்தானத்திற்கு அருகில், கல்லினால் செய்யப்பட்ட மிகப் பெரிய வேல ஒன்று காட்சியளிக்கிறது. அந்தக் காலத்தில் கதிர்காமம் என்றழைக்கப்பட்ட இடத்தில் மாணிக்க கங்கைக்கு அருகில் எழுந்தருளியிருந்த கதிரேசனை வழிபட்டு வாழ்ந்த ஒரு முதியவர், பழமுதிர்ச் சோலைக்கு வந்து முருகனை வழிபட்டு, அங்கு ஒரு கல்வேலைப் பிரதிஷ்டை செய்து வணங்கினார் என்பது வாய்வழி வந்த செய்தியாகும். இந்தத் தலத்தைப் பாடும் போது இந்தச் செய்தி அருணகிரிநாதரின் மனதில் எழுந்திருக்கக் கூடும். எனவே பழமுதிர்ச் சோலையைப் பாடும்போது கதிர்காமத்தை இணைத்தே பாடுகிறார்.

'வனமுறை வேடன் அருளிய பூசை
மகிழ் கதிர்காமம் உடையோனே
செககண சேகு தகதிமி தோதி
திமியென ஆடும் மயிலோனே
திரு மலிவான பழமுதிர்ச் சோலை
மலைமிசை மேவிய பெருமாளே'

என்ற பாடலில் தான் எத்தனை கனிவு. பழமுதிர்ச் சோலைப் பரமன் அகரமுகமாகி அதிபனுமாகி, அதிகமுமாகி, அகமாகி, அயன் எனவாகி, அரி எனவாகி, அரன் எனவாகி அவர் மேலாய் நிற்பவன். இகரமுகமாகி, இவைகளுமாகி, இனிமையுமாகி, நிற்பவன் எனச் சொல்லி, இருநில மீதில் நாம் வாழ அவன் நமது முன் ஓடி வரவேணும் எனப்பாடுகிறார் அருணகிரிநாதர். எனவே எல்லாமற நம்மை இழந்த நலமான ஞானத்தைத் தருவான் பழமுதிர்ச் சோலைப் பரமன்.

ஆறுபடை வீட்டிற்குள் ஐயன் ஆறுமுகம் நம்மைக் கவர்ந்திழுக்கிறது. அவன் அடி தொழுவோருக்கு ஏது குறை? அந்த ஆறுமுகமான பொருள், ஆறுபடை வீடுறை அழகனாய் நின்றருள் பாலிக்கும் கருணைக்குத்தான் ஏது எல்லை?

ஆறுமுகமான பொருள் நீயருள வேண்டும். அறுபடைவீடு அமர்ந்த பெருமானே என்று இருக்கும் இடத்திலிருந்து மானசீகமாய் 'ஆறுமுகம்' 'ஆறுமுகம்' என்று தொழுவோம். அந்த ஏறுமயில் வாகனன். குகன், சரவணன் நாளும் நமக்கு நல்லருள் புரிவான்.

உ
சிவமயம்

மலேசியா நாட்டுப் பேரா மாநிலத்தில் உள்ள சித்தியவான் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோவில் திருக்குட நன்னீராட்டு மலருக்குக் கண்டனூர்ப் பேராசிரியர் முனைவர் மகாகவி அர.சிங்கார வடிவேலன் என்ற அரசி பாடிய

**பாமாலை**

1. வளங்கள் பொங்கும் மலேயாவில்
வயல்கள் சூழும் பேராவின்
தலமாய்த் திகழும் சித்தியவான்
தழைத்தே ஓங்கத் திருவருளால்
நலங்கள் பொழியும் திருமுருகன்
தண்ட பாணிக் கோலத்தில்
இலங்கும் கோயில் தொழும்அன்பர்
எல்லா ருக்கும் வணக்கங்கள்

2. சுப்பிர மணிய சுவாமிபெயர்
துலங்கும் அருள்மிகு திருக்கோயில்
ஒப்புயர் வில்லாத் திருக்குடநீர்
ஓவிய மான மலருக்கே
எப்புறம் கமழும் மணக்கவிதை
இயற்றும் திருப்பணி நிறைவேற
அப்பா காசி, விசாலாட்சி
அம்மா, அண்ணன் சித்திபுத்தி
துப்பாம் துளசி மணிமார்பன்
துணையாய்க் காப்பாய் அமைவாரே!

3. தம்பி பெயரமை கோயிலிலே
தந்தை தாயார் தமையனுடன்
அம்மான் பாற்கடல் திருமாலும்
அம்பாள் தேவி கருமாரி
ஒம்பது கோள்கள் சன்னிதியும்
ஒருங்கே அமைந்தது புண்ணியமாம்
நம்பிச் சித்திய வான்வாழும்
நல்லோர் செய்த தவப்பயனாம் .

4. தவத்தின் பயனாய்ச் சித்தியவான்
தலத்தில் எழுந்தருள் கடவுள்கள்
சிவத்தின் மணமும் செந்தமிழும்
செல்வ வளமும் பிறநலமும்
சிவப்பின் கனிவாம் முருகருளால்
சேரச் செய்தே காத்திடுக!
உவப்புடன் அடியவர் எல்லாரும்
ஓங்குக! வாழிய பல்லாண்டு.

5. பாரத நாட்டுத் திருமண்ணில்
பைந்தமிழ் நாட்டுத் திருமுகத்தில்
சீரொளி படரும் கண்ணான
சிவகங்கை என்னும் மாவட்ட
ஊர்களில் ஒன்றாம் காரைநகர்
ஒட்டி அமைந்த சிற்றூராம்
கார்வளர் சோலை வளமிக்க
கண்ட னூராம் சிற்றூரின்

6. ஓர் மகன் அரசி வடிவேலன்
உயர்தமிழ் கற்ற பேராசான்
சீர்வளர் செந்தமிழ் வழியாகத்
திருவளர் முருகன் அருள்வேண்டிப்
பார்புகழ் பழநி ஆண்டியின்மேல்
பாடிய பாக்கள் படைக்கின்றேன்
மார்வளர் மாலை அதுவாக
மலேயா முருகன் பூணுகவே

7. சீர்வளர் மாலை படைக்கின்ற
சிறந்த வாய்ப்பை எனக்களித்த
பேர்வளர் திருநாவுக் கரசரவர்
பெரிய மனத்தை வணங்குவனே
சீர்வளர் தெய்வப் பாமாலை
தினமும் ஓதும் அன்பரெலாம்
சூர்வதை சுப்பிர மணியருளால்
சூழும் வளத்துடன் வாழியவே!

# சிலப்பதிகாரம் காட்டும் திருமால் பெருமை

பேராசிரியர் டாக்டர் சுப. திண்ணப்பன்.
சிங்கப்பூர் தேசிய பல்கலைக்கழகம் & சிம் பல்கலைக்கழகம், சிங்கப்பூர்

தமிழர்களில் இருபெருஞ் சமய நெறிகளில் ஒன்று வைணவம் எனப்படும் திருமால் நெறி. விஷ்ணுவை வழிபடும் சமயம் வைணவமாகும். விஷ்ணு எனும் சொல்லுக்கு எங்கும் நிறைந்திருப்பவன் என்பது பொருளாகும். இறைவன் என்னும் தமிழ்ச் சொல்லும் இந்த பொருளை உணர்த்தும் ஒன்றே. அதற்கு எல்லா இடங்களிலும் தங்கி இருப்பவன் என்பதே பொருள். இறைவன் என்னும் பொருளை விளக்க எழுந்த பழமொழியிலேயே “தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான்” என்பதாகும். “மாயோன் மேய காடுறை உலகம்” என்று தமிழின் தொய்மை நூலாகிய தொல்காப்பியம் கூறுவதால் திருமால் வழிபாடு, பழந்தமிழர் வழிபாடு என்பது விளங்கும். மாயோன் என்பது கரிய நிறமுடைய திருமாலைக் குறிக்கும். “திருமால் வேத முதல்வன் மாநிலமே அவன் சேவடி; கடலே அவனது ஆடை; ஆகாயம் அவன் உடல்; திசைகள் அவன் கைகள்; சூரியனும் சந்திரனும் அவன் கண்கள்; இயன்ற அனைத்தையும் உள்ளடக்கிய இயல்புடையன்” எனச் சங்க இலங்கியமாகிய நற்றிணையின் கடவுள் வாழ்த்து கூறுகிறது. இத்தகைய எங்கும் நிறைந்த திருமாலைச் செந்தமிழில் தோன்றிய முதல் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தின் வழி நோக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சிலப்பதிகாரம், கோவலன் கண்ணகி வரலாற்றைக் கவிதை வடிவில் கூறும் நூலாகும். இதனை இயற்றியவர் இளங்கோவடிகள். சேர வேந்தர் மரபினர்; கி.பி இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். கற்பின் வலிமை, ஊழின் பேராற்றல், அறத்தின் வெற்றி ஆகியவற்றை வலியுறுத்தும் அந்தக் காப்பியம் ஐம்பெரும் காப்பியங்களில் முதலாவது வைத்து எண்ணபடுவதாகும். இதன் வழி, திருமால் பெருமையைப் பார்போம்.

## நெடியோன் கொடியோன்

கோவலன் தோன்றிய ஊர் பூம்புகார் எனப்படும் காவிரிப் பூம்பட்டினம். அந்த ஊரில் உள்ள கோயில்களைப் பட்டியலிடும் போது நீலமேனி நெடியோன் என்ற ஒன்றைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. நீல நிறத்தை உடையவன் என்பது நீலமேனி நெடியோன் என்பதற்குப் பொருள். இவ்வாரே, மதுரை நகரிலுள்ள கோயில்களைக் கோவலன் காண்பதாகச் சுட்டும் இடத்தில் “உவணச் சேவல் உயர்ந்தோன்” எனத் திருமாலைக் கூறுகிறது. இதற்குக் கருடக் கொடியுடையவன் திருமால் என்பது பொருள். நீல நிற நெடியோனாகவும், கருடக் கொடியோனாகவும் திருமால் இங்குக் காட்டப்படுகிறார்.

## திருமால் ஆடிய ஆடல்

கோவலனின் காதல் கிழத்தியான மாதவி, இந்திர விழாவின் போது ஆடிய பதினொரு ஆட்டங்களில், மூன்று திருமால் ஆடிய ஆடல்கள். அவை அல்லியம், மற்கூத்து, குடக்கூத்து எனப்படும். திருமால் அவதாரங்களில் ஒன்றாகிய கிருஸ்ணாவதாரத்தில் கண்ணன் அவன் மாமனாகிய கம்சன் செய்த வஞ்சச் செயல்களை வெல்வதற்காக ஆடிய ஆடல் அல்லியத் தொகுதியாகும். அவுணனாகிய அசுரனைத் திருமால் மல்யுத்தம் செய்து வென்றதை விளக்கும் ஆடல் மற்கூத்தாகும். வாணாசுரன் என்பவன் தன் மகள் உழைக் காரணமாகக் காமன் மகனைச் சிறைவைத்தான். அவனை மீட்டும் பொருட்டு, உலோகங்களாலும் மண்ணாலும் செய்த குடங்களை வைத்து வாணனுடைய ஊரில் திருமால் ஆடியக் கூத்து குடக்கூத்து எனப்படும்.எனவே இங்கு திருமால் தொடர்பான புராணச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

## கிடந்த வண்ணம்: திருவரங்கப் பெருமாள்

கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் மூவரும் பூம்புகாரிலிருந்து புறப்பட்டு மதுரை செல்கின்றனர். திருச்சி அருகில் மாங்காட்டு மறையோன் என்பவனைச் சந்தித்து மதுரைக்குரிய வழி கேட்கின்றனர். அவன் திருவரங்கத்தில், திருமால் பள்ளிகொண்ட காட்சியையும், திருப்பதியில், திருவேங்கடத்தில் திருமால் நின்ற கோலக் காட்சியையும் விளக்குகிறான்.
அதனைப் பார்போம்.

ஆயிரம் தலையுடைய ஆதிசேசனாகிய பாம்பு படுக்கையில் பலரும் வணங்கித் தொழத் திருவரங்கத்தில் திருமால் பள்ளிகொண்டிருக்கிறான். இந்தக் காட்சியானது நீலமேகம் பொன்மாலையின் மீது படிந்திருப்பது போல உள்ளது என வர்ணிக்கப்படுகிறது.

## நின்ற வண்ணம்: திருப்பதிப் பெருமாள்

அருவிகள் கொண்ட உயர்ந்த மலையாகிய திருவேங்கடம் எனும் திருப்பதியில் சூரியன் போன்ற சக்கரத்தையும் சந்திரம் போன்ற சங்கினையும் கைகளில் ஏந்தி பகைவரை வருத்தும் ஆழிச் சக்கரத்தையும் பால் போன்ற சங்கினையும் தன் தாமரை போன்ற கையில் ஏந்தி அழகு விளங்கும் மணி ஆரத்தை மார்பிலே பூண்டு, பொன்னாலான ஆடையுடன் செங்கன் நெடியோனாகிய திருமால் நிற்கும் காட்சி, நீலமேகம் ஒன்று மின்னலாகிய ஆடையை அணிந்து கொண்டு, இந்திர வில்லாகிய (வானவில்) அணியை அணிந்து இருப்பது போல இருக்கிறது, என இளங்கோ அடிகள் வருணித்துள்ள அழகு போற்றத் தக்கது.

## எட்டெழுத்து மந்திரம்

வைணவர்கள் போற்றும் மந்திரம் திருமால் பெயரைக் குறிக்கும் "நாராயணாய நம" எனும் எட்டெழுத்து மந்திரமாகும். இது அருமறையாகிய வேதத்தில் உள்ளது என்றும் இதனை ஒரு முறையாக உளம் கொண்டு ஓதினால் நினைத்தது எல்லாம் கிடைக்கும் எனவும் சிலப்பதிகாரத்தில் மாங்காட்டு மறையவன் வாயிலாக கூறப்படுகிறது. குலந்தரும், செல்வந்தந்திடும், அடியார் படுதுயராயின் எல்லாம் நிலந்தரம் செய்யும், நீள் விசும்பு அருளும், பெருநிலம் அளிக்கும்; வலந்தரும், மற்றும் தந்திடும், பெற்ற தாயினும் ஆயின செய்யும் நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம், என நாராயண மந்திரத்தின் பெருமையை பின்பு திருமங்கை ஆழ்வார் பாடுகிறார்.

## கொற்றவை தமையன்

கோவலன் கண்ணகி மதுரை செல்லும் வழியில் காட்டில் வேடர்கள் கொற்றவையைப் பாடி வழிபாடு நிகழ்த்துகின்றனர். அப்போது அவளைத் "திருமாற்கு இளையோள்". என்று பாடிப் போற்றுகின்றனர். அதாவது கொற்றவை திருமாலின் தங்கை எனத் தெரிகிறது.

## இராமனைப் பிரிந்த அயோத்தி

கோவலனைப் பிரிந்த பூம்புகார் நகர் துயருற்றதை அவன் நண்பனாகிய கோசிதமாணி காட்டில் சந்தித்துக் கூறும் போது தசரதன் ஆகிய தன் தந்தையின் கட்டளையை ஏற்று அரசாட்சியைத் துச்சமென கருதி காட்டிற்கு இராமன் சென்ற போது அயோத்தி மக்கள் துயற்றது போல உவமைப் படுத்திக் கூறுகிறான். இங்கு

திருமாலின் அவதாரமாகிய இராமன் பற்றிய செய்தியைக் காண்கிறோம். இராமனை 'நடையின் நின்றுயர் நாயகன்', 'ஒழுக்க நெறியை நடந்து காட்டிய தலைவன்', என கம்பர் தன் இராமகாதையில் அறிமுகப்படுத்துகிறார்.

**ஆய்ச்சியர் குரவையில்**

கோவலன் கொலையுண்ட பின்னர், மதுரை நகரில் தீய நிமித்தங்கள் தோன்ற அங்குள்ள இடையர் சேரி மகளிர் ஆயர்பாடியில் திருமால் ஆடிய பாலசரிதை நாடகத்தை மையமாக வைத்து குரவைக்கூத்தாடுகின்றனர். அப்பகுதியில் திருமால் பெருமை மிகுதியாகப் பேசப்படுகிறது. இந்த ஆய்ச்சியர் குரவை என்பது திருமாலின் அவதாரங்களுள் ஒன்றாகிய கிருஷ்ண அவதாரத்தில் கண்ணன் தன் அண்ணன் பலராமனுடன் விளையாடிய பால சரித நாடகமாகும்.

கண்ணன் வஞ்சத்தால் வந்த பசுவின் கன்றினை குறுந்தடியாகக் கொண்டு விளவின் கனியை உதிர்த்தது, மேருமலையை மத்தாகக் கொண்டு வாசுகி எனும் பாம்பினைக் கயிறாகக் கொண்டு பாற்கடல் கடைந்தது, வஞ்சகத்தால் வந்த குறுந்த மரத்தை முறித்து கோபிகாஸ்திரிகளின் புடவைகளை ஒளித்தது, தொழுனையாற்றில் கன்னியர் நெஞ்சம் கவர்ந்தது, நம்பின்னையும் பலராமனும் அருகில் இருக்க நாரதனார் வீணை மீட்டியது, கோகுலத்தில் வெண்ணெய் திருடி உண்டது, அதற்காக யசோதையார் (கண்ணனின் அன்னை) கயிற்றாற் கட்டியது, உலகை வாயால் கண்ணன் உண்டது முதலிய கோகுலக்கண்ணன் விளையாட்டுகள் ஆய்ச்சியர் குரவைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

மேலும் திருமால் வாமணாவதாரத்தில் மூவுலகையும் ஈரடியால் அளந்தது, இராமாவதாரத்தில் தம்பியோடு கானகம் சென்று இலங்கையை அழித்தது, கிருஷ்ணாவதாரத்தில் கம்சனைக் கொன்றது, பஞ்சபாண்டவர்களுக்காகத் துரியோதனனிடம் தூது சென்றது முதலிய திருமாலின் செய்திகளைக் கூறி "திருமால் சீர் கேளாத செவி என்ன செவியே", "கரியவனைக் காணாத கண் என்ன கண்ணோ, கண்ணிமைத்துக் காண்பார் தம் கண் என்ன கண்ணோ", நாராயணா பின்னாத நாவென்ன நாவோ" என்று திருமால் வழிபட்டினைஅழுத்தமாக வலியுறுத்துகிறது சில்ப்பதிகாரம்.

**ஆடகமாடத்து அறிதுயில் அமர்ந்தேன்.**

கண்ணகிக்கு கல்லெடுக்க இமயம் நோக்கிச் செல்லும் சேரன் செங்குட்டுவன் தமிழரைப் பழித்த கனகவிசயர் எனும் வட நாட்டார்கள் மீது படையெடுத்து மோதினான். அப்போது ஆடக மாடம் எனப்படும் திருவனந்த புரத்தில் பள்ளிகொண்ட பெருமாலின் பிரசதமாகிய மாலையைத் தன் மார்பில் தாங்கிக் கொண்டு சென்றதாக இளங்கோவடிகள் காட்டுகிறார்.

**முடிவுரை**

வைணவ சமய நெறியின் முழுமுதற் பொருளாகிய திருமாலின் சிறப்பினைச் சிலப்பதிகாரம் நாராயணனாகவும் அவதாரமாகவும் காட்டி நிற்கிறது. நாராயணன் என்பது உலகை ஆக்கலும் அழித்தலும் நிலைப்பெறுந்தலுமாகிய உயர்ந்த நிலை. அவதாரம் என்பது அல்லவை அழித்து நல்லவை காத்து நம்மிடையே வெளிவந்த நிலை. இந்த இரண்டு நிலையிலும் திருமாலை வழிபட்டு அருள் பெறுவோமாக.



# சிவமும் முத்தொழிலும் ‘அன்பே சிவம்’

இன்னாசி

‘அன்பே சிவம்’ என்பது சைவப் பெருமக்களின் தாரக மந்திரம். திருமந்திரத்தில் இடம்பெறும் இச்சொற்றொடர் அன்பின் மறுவுருவே இறைவன். அன்பின் கொள்கலன் இறையருள் மாட்சி. அன்பைப் போற்றுவதே இறையருட் பணி. அன்பின் வெளிப்பாடே இறைவனைப் போற்றும் முறை. அன்பின் எல்லைக்கு வரையறை எதுவும் இல்லை போன்ற கருத்துகளைப் புலப்படுத்தும் ஓர் அரிய தொடராகும்.

இறைவனுடைய தொழில்களாக இந்து சமயத்தினர் மூன்றினைக் குறிப்பிடுவர். அவற்றுள், ஆக்கலைப் பிரமனுக்கும், காத்தலைத் திருமாலுக்கும், அழித்தலைச் சிவபெருமானுக்கும் உரியனவாகக் கூறுவர். அவ்வாறாயின் அழித்தல் தொழிலினனாகிய சிவபெருமானுக்கு அன்பினை அடிப்படை உயிர் நாடியாகக் கொள்வது எவ்வாறு பொருந்தும் என்ற ஐயம் எழுவது இயற்கையேயாகும்.

நன்கு சிந்தித்தால், சிவபெருமானின் அழித்தல் செயல்களுள் எல்லாம் அருட்செயல்களே அடங்கியுள்ளன. அவை அனைத்தும் பிற தொழில்களில் மறைபொருளாகவே அமையும். வேறு வகையில் கூறினால், அழித்தல் என்பது ஆக்கலின் ஒரு வழிமுறையாகவே அமைந்துள்ளது. இயற்கையை ஒட்டிய நிகழ்வாகவும் உள்ளது. காடழித்து நாட்டை உருவாக்கினர் நம் முன்னோர். மலையைக் குடைந்து கோவிலாக்கியவர்களும் அவர்களே. மேட்டைக் கரைத்துக் கழனிகளாக அமைத்தனர் உழவோர்; கழனியில் வளரும் பயிர்கள் செழிக்கக் களைகளைப் பறித்தோரும் அவர்களே. பொல்லாரை அழித்து நல்லாரை வாழ வைத்தனர் முன்னைய முடியாட்சி கொண்ட மன்னர்கள். தற்பொழுது கூறப்பெறும் குடியாட்சி முறைக்கும் இவையெல்லாம் ஏற்புடையனவே. அவ்வாறே, சிவபெருமானை அழித்தல் தொழிலுக்கு உரியவராகக் கொண்டாலும், அவ்வழித்தல் தொழிலும் உலகைக் காக்கும் செயலுக்காகவன்றி வேறு தீய நோக்கங்களுக்காக அன்றாம்.

காத்தல் தொழில் மட்டுமின்றிப் படைத்தல் தொழிலும் அவனுடையதே என்பதில் அடியார்களுக்குச் சிறிதும் ஐயம் ஏற்பட்டதில்லை. இன்னும் கூறப் போயின், அவன் படைத்தான் என்பதை காட்டிலும், படைப்பாகவே ஆகினான் என்பதைக் குறித்தும் போற்றியுள்ளனர் அவர்தம் அடியார்கள். தாம் ஒன்றைப் படைப்பதைக் காட்டிலும், படைப்பாகத் தாமே மாறுதல் மிகுந்த சிறப்பிற்குரியது. ஒருவர் தம் இசைத்திறத்தால் மகிழ்வைக் கூட்டுவித்தார் என்பதைவிட, அக்கதை மாந்தராகவே மாறினார் என்பது அவர்தம் திறத்திற்கு மெருகு கூட்டுமன்றோ? அவ்வாறே சிவபெருமான் ஒன்றைப் படைத்தார் என்பதைக் காட்டிலும், அப்படைப்பாகவே ஆயினார் என்பதைச் சிறப்பாகக் கருதி, அவர்தம் அடியார்கள் போற்றிப் பரவியுள்ளனர்.

**மணிவாசகப் பெருந்தகை,**

“வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே!”

என்று பாடுகின்றார். மகாதேவ மாலையில், வடலூர் வள்ளலாரும் இதே நோக்கில்

"வித்தாகி முளையாகி விளைவ தாகி
விளைவிக்கும் பொருளாகி மேலு மாகிக்
கொத்தாகிப் பயனாகிக் கொள்வோ னாகிக்
குறைவாகி நிறைவாகிக் குறைவி லாத
சத்தாகிச் சித்தாகி யின்ப மாகி
சதாநிலையாய் எவ்வுயிர்க்குஞ் சாட்சி யாகி
முத்தாகி மாணிக்க மாகித் தெய்வ
முழுவயிரத் தனிமணியாய் முளைத்த தேவே!"

என்று பாடுகிறார்.

ஒரு நாவால் அவர்தம் திருப்பெருமையைக் கூற இயலாது எனப் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் சுவாமிகளால் பெருமைப்படுத்தப் பெற்றவர் திருநாவுக்கரசர். அவரை அழிக்க புகுவார்போல உலகில் காட்டித் திருதொண்டராக ஆக்கச் சிவபெருமான் மேற்கொண்ட காத்தல் நெறியும் சிந்தனைக்குரியதே. ஆம். தன் தம்பியாகிய திருநாவுகரசர் பிற சமயம் பற்றிட, அதனால் வருந்திய திலகவதியாருக்கு ஆறுதல் கூறி ஆற்றுப்படுத்தினான் இறைவன். அவரது கனவில் கூறியவாறு சூலை நோயைத் திருநாவுக்கரசருக்குத் தர முன்வந்தான். இ து அழித்தல் தொழிலின் ஒரு கூறாம். ஆயின், அதன் பயன் ஆக்கல் தொழிலேயாம். இதனாற்றன், சூலை நோய் போக்கி நாவுக்கரசர் என்னும் திருநாமம் தந்து, திருப்பணிகள் செய்யும் நிலைக்கு ஆளாக்கினான்.

மன்னவன் ஆணையிட நீற்றறையின் உள்ளே வைத்து நாவுக்கரசரை அழிக்க எண்ணினர். அதுவுங்கூட, இறையருளின் ஒரு கூறாயிற்று. அவனன்றி ஓர் அணுவும் அசையாதன்றோ? அவனருள் இருந்தால் அன்றி அவன்தாள் பற்ற முடியாதன்றோ? அவனது ஆக்கல் தொழிலை நாவுக்கரசரின் வாயிலாகப் புலப்படுத்தும் செயல்தான் நீற்றறையில் இட்ட செயல் ஆகும். அந்நீற்றறை மாசில் வீணையாகவும், மாலை மதியமாகவும், வீசு தென்றலாகவும், வீங்கிள வேனிலாகவும், மூசு வண்டறை பொய்கையாகவும் மாறியது. வஞ்சனையால் பாற்சோறாக்கி அமணர் நஞ்சு தந்தது, அழித்தல் தொழிலாம். அஃது அமுதமாக மாறியது காத்தல் தொழிலாக அமைந்தது. வஞ்சகர் விட்ட மத வெங்களிறு அழித்தல் தொழிலின் கூறு. நாவுக்கரசரை அது வணங்கிப் புறம் போகியது காத்தற் தொழிலின் பாற்பட்டது. கடலில் கல்லோடு பிணைந்தது அழித்தல் கூறு. அது தெப்பமாக மாறியது காத்தல் தொழில். அன்பர்களைக் காக்கும் தொழிலைச் சிறப்பிக்கும் மாண்பினை அவருக்கிழைத்த அழித்தற் கூறுகள் மிகுதிப்படுத்திக் காட்டுகின்றன. நாவுக்கரசருக்கு இழைக்கப்பெற்றத் தீமைகளினின்று வெற்றிக் காண நாவுக்கரசருக்குத் துணையானவை சிவபெருமானின் அருட் செயல்களே ஆகும்.

திருதொண்டர் புராணத்தில், இறைத்தொண்டர்கள் அனுபவிக்கும் துன்பங்கள் பலப்பல. வாழ்கையில் இப்படியெல்லாம் இறைவன் தொண்டர்களிடம் எதிர்பார்பானா? இறைவன் இவ்வளவு கொடுமையாகவா சோதிப்பான் என்பனவெல்லாம் சிந்திக்கத் தக்கன. ஆனால், அவற்றின் அடிப்படை அவ்வன்பர்களைத் தம் அன்பால் அரவணைத்துக் கொள்ளும் தன்மையேயாகும். பிள்ளைக்கறி கேட்ட சிவபிரானுக்குப் பிள்ளயைக் கொன்றுதான் கறி சமைத்தல் கூடும் என்பது தெரியாத தன்று. பிள்ளையற்றுப் போகுமாறு அவரை அழித்துவிட வேண்டும் என்பது நோக்கமாக இருக்க வழியில்லை. அவ்வண்டலில் தன் முத்தொழில் ஆற்றலையும் காட்டலுக்கான வாய்ப்பாக அந்நிகழ்வைக் கொண்டார் சிவப்பெருமான். அறுக்கின்றபொழுது பிள்ளை இறக்கிறான். அஃது அழித்தல் தொழிலின் வெளிப்பாடு. படைத்தல் தொழிலின் பெருமை மீண்டும் உயிர்ப்பித்தலால் புலப்படும். காத்தல் தொழில் தம் தொண்டனின் புகழ் பரவுமாறு வெளிப்படுத்திச் சிறக்கச் செய்தலால் அறியப்படும்.

முத்தொழிலுக்கும் உரியோன் என்பதனை மறைபொருளாகவன்றி, நேரடியாகவும் அடியார்கள் குறிப்பிடுவதை மறைத்தலாகாது. காத்தல் தொழிலும் சிவபிரானுக்கு உரியது என்பதனில் மணிவாசகர் உறுதியாக இருக்கிறார். அதனை,

"உழித்தரும் காலத்த! உன்னடியேன்
செய்த வல்வினையைக்
கழிதரும் காலமும் ஆயவை
காத்தெம்மைக் காப்பவனே!"

எனச் சுட்டுவதால் உணரலாம். அது மட்டுமன்று. பற்றுறுதி மிகுதியானதால், மூவரில் சிவனே மேம்பட்டவன். அவனுக்கு நிகராகப் பிற இருவரைக் கொள்ளுவது பொருந்தாது என்னும் நோக்கில்,

"மூவரென் றேயெம் பிரானொடும்
எண்ணி விண்ணாண்டு மண்மேல்
தேவரென் றேயிறு மாந்தென்ன
பாவம் திரிதவரே!"

என்று பிறரைச் சுட்டிச் சிவபிரானைப் போற்றுவதிலிருந்து மற்றிருவருக்கும் உரிய தொழில்களும் சிவபிரானுக்கும் உரியன என்னும் கொள்கைப் பிடிப்பாற்றான் என்பதை உணர லாகும்.

இத்தகைய அடிப்படை கொண்ட வரலாறுகளாகவேத் திருத்தொண்டர் புராண அடியார்களின் வாழ்வியற் கூறுகளைக் கொள்ளலாம். பூக்குடலையை இழித்தலைத்த யானையோடு அதனை அன்பே உருகொண்ட சிவபெருமானின் உள்ளம் ஏற்குமோ எனவெல்லாம் ஐயங்கள் எழுவது இயற்கையாகும். பெரிய புராணத்தின் வரலாறுகளுக்குச் சூசனம் எழுதியவர் ஆறுமுக நாவலர். அவர் எறிபத்தரது கொலையைப் பேறம் என்று குறிப்பிடுவார். அதற்குச் சித்தாந்தப் பாக்களையும் எடுத்துக்காட்டுவார். அவையெல்லாம் பொருந்துமாவெனில், பொருந்தும். இறைவனுக்கு ஏற்புடையதேயாம். செயல்முறை சரியா, தவறா என்பதைக் காட்டிலும் பயனே ஒன்றன் சிறப்பை முடிவிடுவதாகும். முதலில் தொடங்கினாலும், முடிவில் வெற்றி காண்பதே போற்றற்குரியது. அம்முறையில் இறைவனுடையத் திருச்செயல்களை முடிவிடப் புகுவோமாயின், அன்பின் வடிவமே சிவபெருமான் எனக் கொள்வதில் எள்ளளவும் ஐயம் இல்லை.

முக்கண்ணன் என்று சிவபெருமானைக் குறிக்கும் மரபும் உண்டு. முக்கண்களில் ஒன்றனை அன்புப் பார்வையுடையதாகவும், பிறிதொன்றனை அருட் பார்வை கொண்டதாகவும், வேறொன்றனை அழித்தற் பார்வை கொண்டதாகவும் கொள்ள இடனுமுண்டு. அழித்தற் பார்வைக்குரியது நெற்றிக் கண். பிற இரு பார்வைகளும் ஒன்றோடொன்று தொடர்புடையன. அருளுள்ளும் அன்பு பொதிந்துள்ளது. எனவே, அன்பு மயமான இறைவனை அன்பே சிவம் எனல் பொருத்தந்தானே!

"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு"

என்ற திருவள்ளுவர், ஒரு மனிதனுக்கு உயிர் இயங்குகிறது என்பதன் அறிகுறியே அன்பு கொண்டிருப்பதுதான். அன்பின்றேல், அவன் மனிதனல்லன். அவனது உடம்பு, எலும்பும் தோலுமான வெற்றுடம்பாகுமன்றி வேறன்று எனக் குறிப்பிடுகின்றார். அக்கூற்று சைவ சமயத்திற்கும் பொருந்தும். அன்பின் அடிப்படை கொண்டதுவே சைவ சமயம். அன்பில்லாவிட்டால், சமயமன்று. சமயம் என்ற பெயரைக் கொண்ட ஒரு வெற்றாரவார அமைப்பு என்று கருதத் தகும்.

திருத்தொண்டர் புராணத்துள் கூறப்படும் திருத்தொண்டர்களின் அருட் செயல்களெல்லாம் சிவபெருமான்மீது அவர்கள் கொண்ட அன்புப் பெருக்கின் காரணமாகவே அமைந்துள்ளன. அன்பென்னும் ஊற்றில் சுரக்கும் நீர்ப் பெருக்கே அருள். அதனாற்றான் திருவள்ளுவரும், ‘அருளென்னும் அன்பின் குழவி’ என்றார். அன்பின் வடிவமான சிவபெருமானை அதன் குழவியான அருள் வடிவமாகவே கண்டு அன்பர்கள் களிப்பதை வள்ளலார் வாக்கால் உணரலாம். அருள்விளக்க மாலையில் அவர்,

“அருள்விளக்கே அருட்சுடரே அருட்சோதிச் சிவமே
அருளமுதே அருணிறைவே அருள்வடிவப் பொருளே”

என்று பாடுகிறார்.

அழித்தலை விடவும், ஆக்கலையும், காத்தலையுமே சிவபெருமான் தம் தலையாயப் பணிகளாகக் கொள்வார் என்றே அவர்தம் அடியார்கள் கருதியுள்ளனர். தாயுமான பெருமானார், அன்னையைப் போல என்னை வளர்த்தெடுத்தாய் என்னும் குறிப்பில்,

“ஆதியந்தம் காட்டாத முதலாய் எம்மை
அடிமைக்காய் வளர்த்தெடுத்த அன்னை போல”

என்கிறார்.

உலக வாழ்க்கையில், ஒரு குழந்தையைப் பெறுபவள், அதாவது படைப்பவள் தாய். பெறுவதை மட்டும் அவள் தன் கடமையாகக் கொள்வதில்லை. வளர்த்தலையும் அதாவது, காத்தலையும் அவளே செய்கிறாள். அத்தகைய சிறப்பிற்குரியவள் குழந்தையை ஒரு போதும் அழிக்க முற்படுவதில்லை.

எனவே, இறைவன் திரு ஆற்றலை ஒரு சிமிழுக்குள் அடைப்பது போன்று அழித்தல் தொழிலுக்கே உரியவன் என்று மானிடரால் ஒரு வரையறைக்குள் அடக்க முடியாது. அதனாற்றான், தாயுமானாரே பிறிதோரிடத்தில், “சில சமயங்கள் தாயே! தாயே! என்று அழைக்கும். சில சமயங்கள் தந்தையே! தந்தையே என்று அழைக்கும். சில சமயங்கள் ஒன்றும் பயனற்றவாய் ஒன்றைவிட்டு மற்றொன்றாய் உளறும். வெறு சில சமயம் ஒளி என்றும், வெளி என்றும், நாதம் என்றும், தனக்கு நிகரென்று கொள்ள இயலாத ஓர் அணுவே என்றும், முக்காலமென்றும், சொல்லக் கூடும். ஆனால் உண்மையில். உன் ஆற்றலை எவராலும் சொல்லுதல் எளிதன்று” என்று கூற முன்வந்து,

“............................இவையாகி வேறதாய்ச்
சதாஞான ஆனந்தமாய்
என்னேயெனே! கருணை விளையாட்டிருந்தவாறு
எம்மனோர் புகல எளிதோ?
இகபரம் இரண்டிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே!”

என்று பாடுகின்றார். எனவே, இறையாற்றலை எவராலும் எடுத்துரைக்க இயலாது என்பது தெளிவுறும். இப்பாடலிலும் கூட, ‘உயிரினுக்கு உயிராகி’ என்கிறார். உயிரை உருவாக்குவது படைத்தல் ஆகும். கருணை என்பது இரக்கம் என்ற பொருளாயினும், காத்தலுக்குத் தேவையான அருட் பண்பாகும். ஆதலின், சிவபெருமான் முத்தொழிலுக்கும் உரியர் என்பது பெறப்படுகிறது. ஆயின், முத்தொழிலும் அன்பின்றேல் நடைபெறாது. எல்லாவற்றுக்கும் அன்பே அடிப்படை. எனவே, திருமூலர் தம் திருமந்திரத்தில்,

"அன்பும் சிவமுமிரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய மர்ந்திருந் தாரே!"

எனக் கூறுவதை மனத்துட்கொண்டு செயல்படலே சிவபெருமானைப் போற்றுவோர்க்குரிய வழிமுறையாகும்.



# திருமுருகாற்றுப்படையும் திருமுறைச்சிந்தனைகளும்

முனைவர் திருமதி.எம்.எஸ்.ஸ்ரீலஷ்மி
(சிங்கப்பூர்)

தமிழ்மொழி பக்தியின் மொழி! பண்பட்ட மொழி! செஞ்சொற்கவியின்பம் செறிந்த மொழி! உலகியல் காட்டும் கவிதைகள், அருளியல் விதைக்கும் கவிதைகள் எனக் கவிதைகள் பல்கிப் பெருகியுள்ள பைந்தமிழின் முடிமணியாகத் திகழ்வன சங்கக்கவிதைகள். இச்சங்கக்கவிதைகளில் 'பால்படுநெய்யாய்க்' கரைந்து நின்றுள்ளது பக்திநெறி. இந்நெறியின் விளக்கமாகப் பதினோராம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது தெய்வத் திருமுருகாற்றுப்படை. 'சாத்திரமும் தோத்திரமும் ஆனார் தாமே' எனும்படிச் சாத்திரம், தோத்திரம் ஆகியவற்றின் உட்கிடக்கையாய் - உட்பொருளாய் விளங்கும் ஈசனின் பேசரிய பெருமைகளை விரித்துரைக்கிறது திருமுருகாற்றுப்படை.

தெய்வத்திருப்பாடல்கள் உதிரிப்பூக்களாக ஒளிரும் சங்கக்கவிதைகளின் இடையே நீண்ட நெடும்பாடலாக 317 வரிகளைக் கொண்டிலக்கும் திருமுருகாற்றுப்படை சைவர்களின் பிரமாணநூல் - பாராயணநூல் என்பன போலப் பல சிறப்புகளைக் கொண்டது. "காண்பவை எல்லாம் அவையே போல" என்னும்படித் திருமுருகாற்றுப்படை பல்வேறு நோக்குநிலைகளுக்கு இடமளிக்கும் இலக்கியப்பனுவல். சங்ககாலப் பக்திஉணர்ச்சியின் முழுவெளிப்பாடு (மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப-53) எனவும், ஸ்காந்தத்தின் நாயகனான கந்தனையும், வெறியாட்டயரும் களத்தில் வெளிப்படும் குறிஞ்சி நிலத் தெய்வமான வேலனையும் ஒன்றாக்குவதற்குச் செய்யப்பட்ட முயற்சியே திருமுருகாற்றுப்படை (அ.ச.ஞானசம்பந்தன்,பெரியபுராணம்-ஓர் ஆய்வு, ப-90)எனவும் அறிஞர்கள் மொழிகுவர்.

முருகனின் அருளை நாடும் ஒருவர்க்கு அவ்வருளைப் பெற்ற ஒருவர் "பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்" எனத் தொல்காப்பியம் கூறும் ஆற்றுப்படை நெறிநின்று, வழிகாட்டும் ஆற்றுப்படை இலக்கிய வகையாகத் திருமுருகாற்றுப்படையை இலக்கிய அறிஞர்கள் கூறுவர். தனிமனிதன் ஒருவன் முருகனின் அருளைப்பெற்றுப் பெறுவாழ்வு அடைவதை விடத் தமிழினமே குமரனின் அருட்பெருங்கருணையால் உய்தி பெற வேண்டும் என எண்ணிய நக்கீரர், மக்கள் அனைவருமே வேலவனின் அருளை நாடிப்பெற்றால் அனைத்து நலன்களையும் பெற்று மேலான வாழ்வை அடைவர் என்று இந்நூலைப் பாடியிருக்க வேண்டும் என்பதால் திருமுருகாற்றுப்படையை மக்களாற்றுப்படை எனக் கருதுகிறார் அறிஞர் ஏ.என்.பெருமாள் (இலக்கியத்தின் பயனும் நோக்கமும் ப-75). இங்கணம் கற்றோர் போற்றும் கற்பகக் கனி ஒத்த திருமுருகாற்றுப்படை காலத்தால் முற்பட்டது. இந்நூலை இயற்றிய நக்கீரர் கி.பி.50ல் வாழ்ந்தவராக இருக்க வேண்டும் என்ற கருத்து நிலவுகிறது. இவ்வாறிருக்கப் பதினோராம் திருமுறை நூல்களுள் ஒன்றாகத் திருமுருகாற்றுப்படை தொகுக்கப்பட்டது பற்றிப் பலருக்கும் ஐயம் எழுதல் இயல்பே!

திருவருட்செல்வமாகிய திருமுறைகள் கால அடிப்படையில் தொகுக்கப்படவில்லை. இறைவனால் அருளிச் செய்யப்பெற்ற வேதங்களை 'எழுதாமறை' என்றழைப்பது போல் அருளாளர்கள் பாடிய திருப்பாடல்கள் திருமுறை என்னும் பெயரால் அழைக்கப்பட்டன. இறைவன் பால் வேண்டிய வேண்டியாங்குப் பெறத் துணைப் புரிந்தும், மக்களின் தீரா நோய்களைத் தீர்க்கும் அருமருந்தாகியும், இறையருளை உலகத்தார்க்கு விளக்கும் திருவருளின் மாட்சியாகவும், காட்டலாகப் பரம்பொருளை பரம்பொருளைக் கண்காணக் காட்டியும் இன்னோரன்ன பல அற்புதங்களை இத்திருமுறைகள் நிகழ்த்திக்

காட்டின. ஆதலின் வேதங்களைக் காட்டிலும் மேம்பட்டவையாகத் திருமுறைகள் மதிக்கப்பட்டன. இத்திருமுறைகளை 'எழுதுமறை' என வழங்கும் மரபு உள்ளது என்பதை இவண் நினைவுகூர வேண்டும். 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய திருஞானசம்பந்தரைச் சேக்கிழார் "வண்டமிழால் எழுதுமறை மொழிந்த பிரான்" எனவும், இரட்டைப்புலவர் "எழுதுமறை மொழிந்த கழுமல முனிவன்" எனவும் புகழ்வதை நோக்கத் திருமுறைகளின் மாட்சிமையும், தெய்வத்தன்மையும் அறியவரும். திருமுறைகளைப் பெற்றமையால் தமிழ்மொழிக்கும் ஏற்றம் ஏற்பட்டது என்பதை "ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்" என்னும் சேக்கிழாரின் போற்றுதல் விளக்கமுறச் செய்கிறது.

" மூவரோது திருமுறைகள் ஏழு திருவாதவூரர் முறையொன்று இசைப்
பாவரைந்த முறையொன்று மூலர் முறையொன் பாசுரம தாதியாக்
கோவை செய்த முறையொன்று சேவையர் குலாதி நீதி முறையொன்றுடன்
பாவை பகர் திருவருள் திறந்தமுறை பன்னிரண்டென வைத்தபின்"

என்னும் உமாபதி சிவாச்சாரியாரின் வாக்கினால் திருமுறைகள் பன்னிரெண்டன வழங்கும் வழக்கம் நெடுங்காலமாக இருந்து வந்ததை அறிய இயலும்.

திருமுறைகளை வகைப்படுத்தியதற்குத் திருமுறைகள் கண்ட புராணம் காரணங்கூறுகிறது. மந்திரங்கள் ஏழு கோடி என்பதனால் மூவரோதிய திருப்பதிகங்கள் ஏழு திருமுறைகளாக வகுக்கப்பட்டன. மந்திரங்களைப் பஞ்சப்பிரமம், சடங்கம் என்று சொல்வதனாலும் அவை பதினொன்றாக வருதலாலும் முன்னர் கூறிய ஏழோடு திருவாசகம், திருவிசைப்பா, திருமந்திரம் ஆகியவை முறையே எட்டு, ஒன்பது, பத்துத் திருமுறைகளாக வகுக்கப்பட்டன. மேலும் திருப்பாசுரம் முதலாக நாற்பது பக்தி பனுவல்கள் பதினோராம் திருமுறையாக வகுக்கப்பட்டன. இவற்றுள் பதினேழாம் நூலாக அமைவது திருமுருகாற்றுப்படை.

முழுமுதற்கடவுளாம் சிவனையே பாடுபவை பதினொரு திருமுறைகள் ஆயின் திருவிசைப்பாவில் சேந்தனார் திருவிடைக்கழிமுருகனைப் பற்றியப் பாடிய ஒரு பதிகம் இடம் பெற்றுள்ளது. ஆகவே திருமுறை தொகுத்தோர் சிவகுமாரர் பற்றிய பாடல்களையும் திருமுறைகளில் சேர்க்க எண்ணினார். அவ்வேளையில் திருமுருகாற்றுப்படையையும் பதினோராம் திருமுறையுள் இணைத்தனர். நக்கீர் பாடிய மற்றப் பிரபந்தங்கள் திருமுருகாற்றுப்படையிலிருந்து முழுமையும் வேறுபடுவது திருமுருகாற்றுப்படையின் தொன்மையைக் காட்டுகிறது. மேலும் திருமுறைகள் பற்றிய கோட்பாடும் கண்ணோட்டமும் மாறி விரிவடைந்துள்ளதை விநாயகர், நாயன்மார் பற்றிய பிரபந்தங்களும் பதினோராம் திருமுறையில் இடம்பெற்றிருப்பதன் மூலம் காண்கிறோம். எனவே திருமுறைகளின் தொகுப்பைப் பொறுத்தவரை அவற்றின் பொருண்மையே முக்கிய இடம் வகிக்கிறது. சிவன், சிவகுமார், சிவனடியார் என்னும் பொருண்மை அடிப்படையில் பதினோராம் திருமுறை வகுக்கப்பட்டும், தொகுக்கப்பட்டும் உள்ளது. இதன்மூலம் வழிபாட்டு முறையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் அவதானிக்க முடிகிறது.

பன்னிரெண்டாம் திருமுறையான திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தைச் சிவனடியார் பேரவையில் தில்லையம்பலன் முன்னிலையில் சேக்கிழார் விரித்துரைத்தார் என்பது வரலாறு. அவ்வேளையில் சேக்கிழார் பதினொரு திருமுறைகளை உறுப்பாகவும் தமது காவியத்தை உடலாகவும் பொருள்பட விரித்துரைத்தார்.

திருமுறைகளை அருட்கொடையாக வழங்கிய அருளாளர் பெருமக்கள் அனைவரும் நிறைமொழி மாந்தர் ஆவர். இவர்கள் 'தற்போதம் இழந்து இறைவனின் அருள்வழி ஒழுகும் செம்புலச்செல்வர்கள். இவர்கள் திருவாய் மலர்ந்தருளிய செழும்பாடல்கள்

சிவஞான நிறைவின் வெளிப்பாடுகள் திருவருள் வெளிப்பட்டுத் தோன்றும் ஞான்நூல்கள்! காலத்தால் முற்பட்ட திருமுருகாற்றுப்படையின் கருத்துக்களைக் காலத்தால் பிற்பட்ட திருமுறைகளின் கருத்துகளோடு ஒப்ப வைத்து எண்ணிப் பார்த்தல் சிறப்புடையது.

ஆற்றுப்படை இலக்கியங்களுள் வித்தியாசமான பதியனுவல் திருமுருகாற்றுப்படை. முருகாற்றுப்படை என்னும் தொடருக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் “வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப் படுத்தது” என விளக்குவர். எனவே ஆற்றுப்படை நூல்களினின்று அமைப்பாலும் இலக்கணத்தாலும் மாறுபட்டுள்ளது என்பது தெளிவாகிறது.மற்ற ஆற்றுப்படைகளின் பெயர்வைப்புக்கும் திருமுருகாற்றுப்படையின் பெயர்வைப்புக்கும் வேறுபாடு உள்ளது. மற்ற ஆற்றுப்படைகள் ஆற்றுப்படுத்துவரோரது பெயரோடு சார்த்தி வழங்கப்படும். சான்றாகச் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை முதலியவற்றைக் கூறலாம். இங்ஙனம் அமையாது பாட்டுடைத் தலைவனின் பெயரோடு சார்த்தி வழங்கப்படும் சிறப்புடையது திருமுருகாற்றுப்படை. பிற ஆற்றுப்படைத் துறைகள் இப்பனுவலில் உய்த்துணரும் வகையில் அமைந்துள்ளன.

ஆறுபகுதிகளாகப் பாடப்பட்டுள்ள திருமுருகாற்றுப்படை ‘ஒரு திருமுருகன்’ கோயில் கொண்டுள்ள ஆறு தலங்களை இயற்கை எழில் கொஞ்ச விவரிக்கிறது. திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் எனப்படும் திருச்செந்தூர், திருஆவினன்குடி எனப்படும் பழனி, திருவேரகம் எனப்படும் சுவாமிமலை, குன்றுதோறாடல் எனப்படும் திருத்தணிகை, பழமுதிர்ச்சோலை எனப்படும் அழகர்கோவில் ஆகிய தலங்களை ‘ஆற்றுப்படைவீடுகளாக’ நக்கீரர் நவில்கிறார். படை என்னும் சொல்லுக்குச் ‘சேர்த்தல்’ என்னும் பொருளும் உண்டு. அழகனிடத்து நம்மைக் கொண்டு சேர்க்கும் இந்த ஆற்றுப்படை வீடுகளையே பின்னாளில் ஆறுபடை வீடு என்றழைத்தனர். ஆற்றுப்படை வீடு காலப்போக்கில் மாறி ஆறுபடை வீடு எனவும் அறுபடை வீடு எனவும் வழங்கப்படலாயிற்று.

பரம்பொருளை உணர்வதற்குக் கருவியாகவும், பக்திநெறியைப் பரப்புவதற்குச் சாதனமாகவும் அமைவது ஆலயமாகும். கூடிவாழும் கலை, இசை, சிற்பம், ஓவியம் முதலிய பல்வேறு கலைகளின் மையமாக விளங்குவது திருக்கோவில். ஆறுமுகனின் திருக்கோயில்களை நக்கீரர் கூறுவது கீழ்க்காணும் அப்பரடிகளின் ஆலயப்பெருமை பேசும் பாடலையே நினைவூட்டுகிறது.

“ திருக்கோவில் இல்லாத திருவில் ஊரும்
திரு வெண்ணீறணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையாற் படாத ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட்டுண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே”

ஆறுபடைவீடுகளின் அருமைபெருமைகளை நக்கீரர் விவரிப்பது ‘ஆலயம் தொழுவது சாலவும் நன்று’ என்பதனை அறிவித்ததற்காக எனக் கொள்ளுவது தவறில்லை. வழிபாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றை வழிபடுவதும் அடங்கும் என்பதால் தான் தாயுமானசுவாமிகளும்,

“மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினார்க்கு
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே”

எனக் கூறியுள்ளார். முருகத் தலங்கள், இறைவனோடு உயிர்கள் (ஆன்மாக்கள்) ஐக்கியப்படும் இடம் என்னும் திருமுறைக் கருத்தினை எதிரொலிக்கின்றன.

ஆலயவழிபாடு, புறவழிபாட்டிலிருந்து அகவழிபாட்டிற்கு ஆன்மாக்களை இட்டுச் செல்லும் ஒரு பயிற்சிக்களம் என்பதைத் திருமூலரும்

" நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித்திரிந்து சிவபெருமான் என்றே
பாடுமின் பாடிப்பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாகக் கொள்வனே"

எனக் கூறுவர். வழிபாட்டின் பல படிநிலைகளில் முதல் படி தலவழிபாடு என்பது நக்கீரரின் உட்கருத்து எனக்கொள்ளலாம்.

கந்தனின் கவின்மிகு கோலத்தை வருணிக்கும் திருமுருகாற்றுப்படை முருகனின் வேல், மயில் கொடி, முருகனின் ஒளி, முருகனின் ஆறுமுகங்கள், முருகன் வெறியோடு களத்தில் தோன்றும் காட்சி, தேவியருடன் விளங்கும் காட்சி, குருவாய் உபதேசித்தக் காட்சி எனப் பல்வேறு காட்சிகளையும் நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறது. இவற்றுள் வேலாயுதம், மயில்வாகனம், சேவற்கொடி ஆகியவை செவ்வேளின் சின்னங்கள். இவண் அப்பர் அடிகளின் வாக்கை ஒப்பிட்டுப் பார்த்தல் வழிபாட்டினை வளப்படுத்தும்.

"குறிகளும் அடையாளமும் கோயிலும்
நெறிகளும் அவர்நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலீர் மனம் என்கொல் புகாததே"

குறிகள் என்பது சிவலிங்கம் முதலிய திருமேனிகளைக் குறிப்பதாகும்.அடையாளம் என்பது அத்திருமேனிகளில் உள்ள முக்கண், சடைமுடி, ஊர்தி, கொடி போன்றவை. திருப்பரங்குன்ற முருகனின் வருணனைப்பகுதி 'கண்ட பெருமந்திரம்' எனப்படும் மூவர் தமிழ் உணர்த்தும் எட்டுச் சாதனங்களான குருவருள், திருநீறு, திருஎழுத்து, திருக்கோயில், முதல்வனின் திருவுருவம், திருவடி, அர்ச்சனை, தொண்டு ஆகியவற்றை நினைவூட்டவில்லையா? சிவசின்னங்களைச் சிவனாகக் கருதி வழிபடுவதை அப்பர்,

"எவரேனும் தாம் அக இலாடத்து இட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி
உவராதே அவை அவரைக் கண்டபோதே உகந்து அடிமைத்திறன் நினைந்து
அங்கு உவந்து நோக்கி இவர்தேவர் அவை தேவர் என்று இரண்டு ஆட்டாது ஒழிந்து
ஈசன்திறமே பேணிக் கவராதே தொழுமின் நும் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்
நடுதறியப்பரைக் காணலாம்"

என நவின்றுள்ளார். 'மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் அரனெனத் தொழுதல்' திருமுறைகாட்டும் வழிபாடுநெறி. இத்தகு நெறிக்கு முன்னோடியாய் நக்கீரர் ஞானபண்டிதனின் அடையாளங்களைக் குறிப்பிட்டுப் பாடியிருக்கலாம் என எண்ணவும் இடமுண்டு.

உயிர்நலத்திற்கு மிகவும் அத்தியாவசியமான வழிபாட்டு நெறி ஆன்மதாகத்தைத் தணிவிக்கும். இவ்வழிபாட்டைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நால்வகையாகக் கூறுவது சைவமரபு. இறைவன் திருமேனியைத் தொடாமல் செய்யும் தொண்டுகள் சரியை நெறிச் செயல்கள். அலகிடுதல், மெழுக்கிடுதல், பூமாலை புனைதல், ஏத்துதல், பாடுதல், கும்பிடுதல், கூத்தாடுதல் போன்ற அனைத்தும் சரியையுள் அடங்கும். இறைவன் திருமேனியைத் தொட்டுச் செய்யும் செயல்கள் கிரியையின் பாற்படும்.

யோகநிலையானும், ஞானநெறியாலும் இறைவனைத் தொலுதல் வழிபாட்டின் படிநிலைகளே. இந்நால்வகை வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பவை வழிபாட்டையும் தாசமார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், ஞானமார்க்கம் என வேறுவகையாகவும் கூறும் மரபும் உண்டு. திருமுறைகளை ஓதுதல், ஓதுவித்தல், என்பன வழிபாட்டு முறையுள் அடங்கும்.

"ஞானத்தால் தொழுவார் சிவஞானிகள்
ஞானத்தால் தொழுவேன் உனை நானலேன்
ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தால் உனை நானுந் தொழுவேன்"

என்பது அப்பரின் அருள்வாக்கு. இங்ஙனம் திருமுறைகள் கூறும் வழிபாட்டு முறைகளோடு முருகாற்றுப்படை காட்டும் முறைகளையும் ஒரு சேரச் சிந்தித்துப் பார்க்க இயலும்.

" குடந்தம்பட்டுக் கொழுமலர்சிதறி
...............................................
நறும்புகையெடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழிசையருவியொடின்னியங் கறங்க"

எனப் பழமுதிர்ச்சோலையில் சரியை, கிரியை, நெறிகள் கூறப்படுகின்றன.மேலும்

" வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
..................................................................
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி"

என இடம்பெறும் வரிகள் "கையால் தொழுது தலைசாய்த்து உள்ளம் கசிவார்கள்", "கண்முத்தரும்பக் கழற்சேவடி கைதொழுவார்கள்", "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்" எனப் பல திருமுறைப் பாடல்களை நினைவூட்டுகின்றன.

திருச்சீரலைவாயைப் பாடும் நக்கீரர் முருகப்பெருமானின் ஆறுமுகங்களையும், அம்முகங்களின் வழிப் பெறும் அருளாற்றலையும் விவரிக்கிறார். ஆறுமுகங்களை முருகாற்றுப்படை வருணிப்பதை அடியொற்றியே பின்னாளில் அருணகிரிநாதரும், குமரகுருபரரும் வருணிப்பதோடு போற்றவும் செய்தனர். சண்முகனின் திருமுகங்களைத் தியானிப்பவர்கள் தாம் நினைத்ததை நிறைவேற்றும் நோக்குடன் வழிபடுகின்றார். இதனை,

" தாஇல் கொள்கைத் தம் தொழில் முடிமார்
மனநேர்பு எழுதரு வாள் நிறமுகனே"

என நக்கீரர் நவில்வார். தண்டாயுதபாணியை வழிபடுவோர் பற்றிக் குறிப்பிடுகையில் திருவாவினன்குடியில்,

"செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம் வரம்பாகிய தலைமையர்.................."

எனப் பலபடக் கூறுவர். அடியார்களின் அருஞ்சிறப்பை விரித்துரைக்கும் பெரியபுராணம்.

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

எனக் கூறுவதை மேற்கூறிய முருகாற்றுப்படை வரிகளோடு ஒப்பவைத்து எண்ணலாம்.

வழிபாட்டில் இறைவனது திருநாமங்களை ஓதுவதும் அடக்கம் என்ற கோணத்தில் முருகாற்றுப்படை 'பெரும் பெயர் முருகன்' எனப் போற்றத்தக்க அளவுக்கு 26 முருக நாமங்களைக் கூறுகிறது. 'அறுவர்ப் பயந்த ஆறமர் செல்வ', 'ஆல்கெழுகடவுட் புதல்வ' 'மால்வரை மலைமகள் மகனே', 'மாற்றோர் கூற்றே', 'வெற்றிவேல் போர்க்கொற்றவைசிறுவ', 'இழையணி சிறப்பிற் பழையோள் குழவி', 'வானோர் வணங்குவில் தானைத் தலைவ', 'மாலைமார்ப', 'நூல் அறிபுலவ', 'செறுவில் ஒருவ' 'பொருவிறல் மள்ள', 'அந்தணர் வெறுக்கை', 'அறிந்தோர் சொல்மலை', 'மங்கையர் கணவ', 'மைந்தர் ஏறே', 'வேல்கெழுதடக்கை சால் பெருஞ் செல்வ', 'குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ', 'பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே', 'அரும்பெறல் மரபிற் பெரும் பெயர் முருக', ' நசையுனர்க்கு ஆர்த்தும் இசை பேராள', 'அலந்தோர்க்கு அளிக்கும் பொலம் பூண் சேஎய்', 'மன்றமர் கடந்த நின் வென்றோடு அகலத்து பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்', 'பெரியோர்ஏத்தும் பெரும்பெயர் இயவுள்', 'சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி', ' போர்மிகு பொருந', 'குரிசில்' என 26 திருநாமங்கள் வள்ளிமணாளனின் திருவிளையாடல்களையும், அருளிச்செயல்களையும், புராணவரலாறுகளையும் உணர்த்துவதோடு உபதேச மந்திரங்களாகவும் விளங்குகின்றன. இவ்வாறே திருமுறைகளில் இடம்பெற்றுள்ள அஞ்செழுத்தின் மகிமை, சிவசின்னங்களின் மகிமை, சிவபெருமானின் திருவிளையாடல்கள், சிவனின் அருளிச்செயல்கள், புராண வரலாறுகள் போன்றவை நம் சிந்தனைக்கு விருந்தாகி ஒப்புமையை உணர்த்தும்.

உயிர்கள் (பசுக்கள்) தாமாக இறைவனை அறியமுடியாது. பசுஞானம், பாசஞானம், என்பவற்றால் இறைவனை அறிய இயலாது. சிவஞான போதத்தில் மெய்கண்டதேவர்

"காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

என்று கூறுவர். இச்சித்தாந்தக் கருத்தை "அறிவானுந்தானே அறிவிப்பான் தானே" என்னும் அற்புதத்திருவந்தாதியில் காரைக்கால் அம்மையார் மொழிந்துள்ளார். திருமுறைகள் சைவ சித்தாந்தத்தின் பிழிவுகள். இவ்வடிப்படையில் சிந்தித்தால் தொன்மை மிக்க முருகாற்றுப்படை சைவசித்தாந்தக் கருத்துகளைக் கூறுவதில் முன்னோடி நூலாகத் திகழ்ந்துள்ளது. முருகனின் அருள் வேண்டி வரும் ஆர்வலர்களை முருகனின் அணுக்கத் தொண்டர்களாகிய " குறும்பல் கூவியர்" முருகனிடம் அறிமுகப்படுத்தி - ஆற்றுப்படுத்தி- விண்ணப்பித்துக் கொள்கின்றனர். இதனை மணிவாசகரின் "முத்தி நெறி அறியாத மூர்க்கரோடு முயல்வேனைப் பத்திநெறி அறிவித்தே" பான்மையாய்க் கூறலாம்.

வழிபாட்டுக்கு உரிமை உடையோர் பற்றித் திருமுறைகள் புரட்சி செய்தமையால் அவற்றை மறுமலர்ச்சி நூல்கள் எனப்போற்றும் வழக்கும் உள்ளது. திருமுருகாற்றுப்படை இத்தகைய சமூகப் புரட்சிக்கு வித்திட்டுள்ளது. இறைவனுக்குப் பூசை செய்வது அந்தணர்களாக மட்டும் இருக்கவேண்டியதில்லை. மனிதர்களுள்

எச்சாதியினர் வேண்டுமானாலும் பூசை செய்யலாம் என்பதற்குத் "தொண்டர் தாம் மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற இண்டைசேர் சடையானை எனவும்", "ஒத்த சொல்லி உலகத்தவர் தாம் தொழுதேத்த" எனவும், " பொன்னியல் நறுமலர் புனலோடு தூபம், சாந்தமும் ஏந்திய கையினராகிக் கன்னியர் நாளும் வேடமே பரவும்" எனவும் பல திருமுறைத் தொடர்களைச் சான்று காட்டலாம். ' வெறியாட்டு' என்பது சங்ககால வழிபாட்டு முறை. குறிஞ்சி நிலத்துக்கு உரிய 'வேலன் வெறியாட்டயர்தலைக்' குன்றுதோறாடலிலும், பழமுதிர்ச்சோலையில் குறமகள் பூசாரியாகிப் பூசை செய்வதையும் நக்கீரர் பாடியுள்ளார். பொற்காலமாக விளங்கிய சங்ககால வழிபாட்டுமுறையின் தொடர்ச்சியாக அமையும் திருமுருகாற்றுப்படையின் வழிபாட்டுமுறை மறுமலர்ச்சிச் சிந்தனைக்கு வித்திட்டுத் 'தேவார மூவர்' சமயப்புரட்சி செய்ய உரமாகியது.

இறைவனின் கருணை இரு திறத்தது. அவை அறக்கருணை, மறக்கருணை என்பவனாகும். இவ்விரு கருணையைப் பொழியும் கரங்களையும், திருமுகங்களையும் கொண்ட வேலாயுதனின் திருக்கோலத்தை வாழ்த்தி, "உச்சிக் கூப்பிய கையினராய்த்" தொழுதால் பெறும் பயன்களை நக்கீரர் கீழ்க்காணுமாறு பாடுவர்.

"செவ்வேல் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமோடு
நலம்புரி கொள்கைப் புலம் பிரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே"

உலக வாழ்க்கை துன்பம் மிக்கது. இத்துன்பங்களை நீக்கி மேலான தவ வாழ்வு பெறவேண்டும் என்பது ஆன்மாக்களின் குறிக்கோள். ஆயின் குறிக்கோள் இலாது கெடும் மக்களின் வாழ்க்கை முறை மாறவேண்டும்.

"மானிடப் பிறவிதானும் வகுத்து மனவாக்காயம்
ஆனிடத் தைந்துமாடும் அரன்பனிக் காகவன்றோ"

என அருணந்திசிவம் கூறுவதைக் குறிக்கோளாய்க் கொள்ளவேண்டும். அப்பர் கூறிய அருள்வாக்குப்படி,

"துன்பம் இன்றித் துயரின்றி என்றும்நீர்
இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்
என்பொன் ஈசன் இறைவன்என் றுள்வார்க்கு
அன்பன் ஆயிடும் ஆனைக்கா அண்ணலே"

என்று வழிபாட்டு இறையன்பர் ஆகி இன்னலம் பெறவேண்டும்.

திருமுருகாற்றுப்படை 'முன்னியது முடிக்கும்' முருகப்பெருமானின் அருள்பெற வழிகாட்டும் பாமாலை! சைவசமயக் குரவர்க்கு சமயப்புரட்சி செய்யத் தூண்டுதலான 'சுடர் விளக்கு'! இயற்கை வழிபாடே இறைவழிபாடு எனப் புதுநெறி காட்டிய புதுமைப்பனுவல்! முருகு என்பது அழகு. இவ்வழகை ஆராதிக்க ஆற்றுப்படுத்தும் இலக்கியம்! திருமுறைச் சான்றோர்களுக்கு சிவபரம்பொருளே முருகன் மால்மருகனே சிவபரம்பொருள் எனத் தெளிவித்த அரும்பெரும் செல்வம்!

# பண்டைய கம்போடியாவில் தமிழ்ச் சைவசமயச் செல்வாக்கு

பேராசிரியர் முனைவர் சிங்காரவேலு சச்சிதானந்தம்
இந்திய ஆய்வியல் துறை
மலாயாப் பல்கலைக் கழகம்
www.prof-emeritussingaravelu.com

1.0. இந்தோசீன நிலப்பகுதியில் மிகப்பழங்காலத்தில் தோன்றி வளர்ந்ததும் கம்போடிய மக்களின் முன்னோடி அரசாக விளங்கியதுமாக 'பியுனாம்' (Biu-nam)அல்லது 'ஃபுனான்' (Funan) என அழைக்கப்பெற்ற ஓர் அரசைச் சேர்ந்த 'வோ-கான்' (Vo-Canh) என்னுமிடத்தில் கண்டெடுக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்றில் 'ஸ்ரீ மாற ராஜகுல' (Shrii Maara Raajakula) என்னும் சொற்றொடர் அந்நாட்டு மன்னர் ஒருவரின் பட்டப்பெயராக குறிக்கப்பட்டுள்ளது. கி.பி. 3-ம் நூற்றாண்டைச் சேர்ந்த அந்தக் கல்வெட்டு தென் இந்திய 'பல்லவ கிரந்த' எழுத்தாலான வடமொழி (சமஸ்கிருதமொழி) கல்வெட்டானாலும், அந்தக் கல்வெட்டில் இடம் பெற்றுள்ள 'ஸ்ரீ மாற' என்னும் பட்டப்பெயர் 'திருமாறன்' என்னும் தமிழ்ப் பெயரின் வடமொழி வடிவம் என்னும் செய்தியை அமரர் பேராசிரியர் ஃபீலியோசா அவர்கள் தம் அரியதோர் ஆய்வின் மூலம் உறுதிப்படுத்தியுள்ளார். (1)

1.1 'திரு மாறன்' என்னும் பட்டப்பெயர், ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்ககாலத் தமிழகத்தில் அரசாண்ட பாண்டிய மன்னர்கள் சிலரின் பட்டப்பெயராக விளங்கியது என்பதும், அந்தப் பாண்டிய மன்னர்கள் சிவபெருமான்பால் மிகுதியான பக்தி உடையவர்களாகத் திகழ்ந்தனர் என்பதும் அக்காலத்தைச் சேர்ந்த புறநானூற்றுப் பாடல்கள் சிலவற்றிலிருந்து தெரியவருகின்றது.

"கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல
வேந்து மேம்பட்ட பூந்தார் மாற..." (புறநானூறு, 55: 4-6) என்று

புலவர் மருதன் இளநாகனார், பாண்டிய மன்னன் நன்மாறனைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

1.2. பண்டைய கம்போடியாவில் 'ஃபுனான்' மன்னன், 'திரு மாறன்' என்னும் பாண்டிய மன்னனின் பட்டப்பெயரை 'மாற' என்னும் பட்டப்பெயராகத் தழுவிக்கொண்டதற்கு மூல காரணமாவது, சிவபெருமான்பால் மிகுதியான பக்திபூண்ட பாண்டிய மன்னனைப் போல, தானும் ஆற்றல் மிக்க ஓர் அரசனாக விளங்க வேண்டும் என்று விரும்பியதாகும். அந்த விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியே அந்தக் கம்போடிய மன்னன் தன் நாட்டின் அரவமிசத்தையும் குடிமக்களையும் காத்தருளும் முழுமுதற்கடவுளாகச் சிவபெருமானைப் போற்றி வணங்கலாயினான் என்று தெரியவருகின்றது.

2.0. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த சீன நாட்டு மன்னர்களின் வரலாற்றைக்கூறும் 'நன் சீ ஷூ' (Nan-Ch'I Shu, 58, 10b-11a) என்னும் நூலின் பண்டைய ஃபுனான் நாட்டு மன்னர்கள், 'மயேந்திரம்' என்னும் மாமலைமீது காட்சியளிக்கும் சிவபெருமானைத் தங்கள் அரசின் முழுமுதற்கடவுளாகப் போற்றி வழிபட்டனர்' என்று சீனாவிற்கு வருகை தந்திருந்த ஃபுனான் நாட்டுத்தூதர் கூறியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.(2) ( ஃபுனன் நாட்டு அரசின் தூதர் கூரிய வரலாற்றுச் செய்தியைச் சீன நாட்டு மன்னர்களின் அதிகாரிகள், பன்னெடுங்காலமாக அவர்கள் தவறாது பின்பற்றிவந்துள்ள மரபையொட்டி, அப்போதே குறித்துவைத்துக்கொண்ட செயலானது. தமிழ்ப் பண்பாட்டின் செல்வாக்கினைப்பற்றி இக்காலக்கட்டத்திலும் அறிந்துகொள்வதற்கு உறுதுணையாக விளங்குவதாகக் காணலாம்.)

2.1 'மயேந்திரம்' என்பது, சிவபெருமான் வதியும் 'மஹேந்திர' (Mahendra) என்னும் மாபெரும் மலையைக் குறிக்கும் வடமொழிச்சொல்லின் தமிழ் வடிவமாகும். (3) அந்த தமிழ்ச்சொல் வடிவமே சீன நாட்டு மன்னர்களின் வரலாற்றைக் கூறும் நூலில் இடம்பெற்றுள்ள காரணத்தால், பண்டைய கம்போடிய அரசர்கள் தம் அரசகுல வழிபாடாகப் போற்றிய சிவபெருமான், அல்லது 'மஹேஸ்வர' வழிபாடு தமிழர்கள் வாயிலாகவே கம்போடிய நாட்டில் வேர் ஊன்றித் தழைத்து ஓங்கலாயிற்று என்பதை உறுதியாக நம்பலாம்(மயேந்திரம்' என்னும் தமிழ்ச்சொல்வடிவம் சீன நாட்டு அரசர்களின் வரலாற்று நூலில் இடம்பெற்றுள்ள அரிய செய்தியை ஆராய்ந்து கண்ட பெருமை பேராசிரியர் ஃபீலியோசா (Filiozat), பேராசிரயர் பால் வீட்லி (Paul Wheatley) ஆகிய இருவர்களையும் சார்ந்ததாகையால், அந்தப் பேராசிரியர் பெருமக்கள் இருவருக்கும் உலகத் தமிழர்கள் அனைவரும் நன்றிக்கடன்பட்டவர்களாகின்றனர் என்று கூறுவது மிகையாகாது.)

3.0. தமிழர் வணங்கும் முழுமுதற்கடவுளை 'மலைவாசி' என்று கூறும் மரபு தமிழ்ப் பண்பாட்டு மரபாகும். எடுத்துக்காட்டாக, சங்ககாலத்து நூலாகிய திருமுருகாற்றுப்படை என்னும் நூலில் (317- ம் அடியில்) திருமுருகப்பெருமான் மலைகிழவோன் என்றும், சிலப்பதிகாரம் என்னும் தமிழ்க் காப்பியநூலில் (காட்சிக் காதை, 128- ஆம் அடியில்) சிவபெருமான் 'பெருமலை அரசன்' என்றும் அழைக்கப்படுவதைக் குறிப்பிடலாம். இத்தகைய முற்காலத் தமிழ்மரபைப் பின்பற்றியே, பிற்காலத்தில் மாணிக்கவாசகர் பெருமானும் தம் திருவாசகம் என்னும் நூல் தொகுதியில் அடங்கிய கீர்த்திக் திருவகலம் என்னும் பகுதியின் 146- ம் அடியில் சிவபெருமானைக் 'கைலை உயர்கிழவோன்' என அழைப்பதோடன்றி,

> "மனுமாலை மயேந்திரம் அதனிற்
> சொன்ன ஆகமம் தோற்றுவித்து அருளிய"

சிவபெருமான் என்பதைக் கீர்த்தி திருவகலின் 9-ஆம், 10-ஆம் அடிகளிலும் குறிப்பிடுகின்றார்.

3.1. மேலும், மாணிக்கவாசகர் பெருமான், தம் திருவாசகத்தில் அடங்கிய 'திருவார்த்தை' என்னும் பகுதியில்,

> "வேடுவுருவாகி மயேந்திரத்து மிகுகுறை வானவர் தன்னைத்
> தேடவிருந்த சிவபெருமான்..." (திருவார்த்தை, 4:1-2)

என்று குறிப்பிடும் மரபும் மாணிக்கவாகர் காலத்திற்கு முற்பட்ட காலத்திலேயே கம்போடியாவில் ஃபுனான் அரசர்கள் காலத்தில் நன்கு அறிமுகமாயிருந்த ஒரு மரபாகும் என்று தெரியவருகின்றது. அஃதாவது, 'சிவபெருமன் மயேந்திர மலைமீது வேடராக' காட்சியளித்த மரபினைக் குறிக்கவேண்டிய ஃபுனான் அரசின் தலைநகர் வியாதபுரம் ( 'வேடர் நகர்' ) என்னும் திருப்பெயரால் அழைக்கப்பெற்றது (4) என்பதைக் கம்போடியாவில் கண்டெடுக்கப்பெற்றுள்ள கல்வெட்டுகள் வாயிலாக அறிகின்றோம்!

(பாண்டவ வீரன் அருச்சுனன் சிவபெருமானைச் சிந்தித்தவாறு கடுந்தவம் புரிந்தபோது முகாசுரன் என்னும் ஓர் அசுரன் வராகம் எனப்படும் பன்றி வடிவெடுத்து அருச்சுனனின் தவத்தைக் கலைக்க முயன்றபோது, சிவபெருமான் வேடராக உருவெடுத்து தன் வில்லால் முகாசுரனை அழித்து அருச்சுனனைக் காப்பாற்றியருளியதாகவும், பின்னர் அருச்சுனனுக்குப் 'பாசுபதாஸ்திரம்' என்னும் ஆற்றல் மிக்க ஓர் ஆயுதத்தைப் பரிசாகத் தந்தருளியதாகவும் மகாபாரத நூலில் குறிப்பிடப்பட்டுள்ளதையும் நாம் இங்கு நினைவுகூரலாம்.தீய சக்திகளை எதிர்த்துப் போராடி வெல்வதற்காகவே இறைவன் ' வேடுவர் ' வடிவெடுக்கின்றான். மேலும், இராமபிரான், இலக்குவன், அனுமன் ஆகியோர், வில், அம்பு, கதை ஆகிய ஆயுதங்களைத் தாங்கியவண்ணம்

காட்சியளிப்பதன் உட்பொருளாவது, மானிடர் அனைவரும் எப்பொழுதும் தீமையை எதிர்த்துப் போராடுவதற்கு ஆயத்தமாய் இருத்தல் வேண்டும் என்பதாகும்.

4.0. கம்போடியாவில் காரைக்கால் அம்மையார் மரபு : சிவபெருமான்பால் அளவற்ற பக்திபூண்டு தமிழகம் போற்றி வணங்கும் சிவனடியாராக விளங்கிய காரைக்கால் அம்மையாரின் புனித வரலாற்று மரபும், கம்போடிய அரசர்களால் கி.பி. பத்தாம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட ' பண்டைஸ்ரீ ' (Bantay Srei), கி.பி. பதினோறாம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட ' வாட் பாசெட் ' (Vat Baset) எனப்படும் கோயில்களில் சிற்பங்கள் வடிவில் காட்சியளிக்கின்றது. (5) ஆடலரசனாகிய சிவபெருமானின் திருவடிகளின்கீழ் அமர்ந்து ஆடவல்லானின் நாதாந்தத் திருநடனத்தைக் கண்டு மகிழ்ந்து பக்திப்பாடல்களைப் பாடி மகிழும் சிவனடியாராகக் காரைக்கால் அம்மையார் அந்தச் சிற்பங்களில் தோன்றுகின்றார். இந்தக் காட்சியானது, சேக்கிழார் பெருமான் அருளிய காரைக்காலம்மையார் புராணத்தில் இடம்பெற்றுள்ள திருப்பாடல்கள் கூறும் செய்தியை நமக்கு உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது :

(சிவபெருமானிடம், காரைக்காலம்மையார் )
இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகிறார்,

> "பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்பு உண்டேல், உன்னை என்றும்
> மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டு, நான் மகிழ்ந்து பாடி,
> அறவா! நீ டும்போது உன் அடியின்கீழிருக்க,"

என்றார்.
கூடுமாறு அருள்கொடுத்துக்

> "குலவு தென் திசையில் என்றும்
> நீடுவாழ் பழன்மூதூர் நிலவிய லங்காட்டில்
> ஆடும் மாநடனமும் நீ கண்டு, ஆனந்தம் சேர்ந்து எப்போதும்
> பாடுவாய் நம்மை"

என்றான் பரவுவார் பற்றாய் நின்றான்.
(சேக்கிழார் பெருமான் அருளிய காரைக்காலம்மையார் புராணம், 60-61)

கம்போடியாவில் வழங்கிய காரைக்காலம்மையார் வரலாற்று மரபானது, சிவனடியாரைப் போற்றி வணங்குதல், சிவபெருமானைப் போற்றி வணங்குவதற்கு ஒப்பாகும் என்னும் தமிழ் மரபினைப் பண்டைக்காலத்துக் கம்போடிய நாட்டு அரசர்களும் குடிமக்களும் போற்றினர் என்பதற்குச் சான்றாக விளங்குகிறது.

5.0. கம்போடியாவின் அண்டை நாடான 'சம்பா' (Champaa) என்னும் நாட்டிலும் சிவபெருமான் - உமாதேவி வழிபாடு இன்றியமையாத அரசகுல வழிபாடாக விளங்கியது.(6) மேலும், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் 'சம்பா' அரசின் தலைநகர் சிவபெருமானின் மற்றொரு திருப்பெயரான 'பாண்டரங்கன்' என்னும் திருப்பெயரால் அழைக்கப்பெற்றது.(7) இப்போது அந்தப் பெயர் 'பாண் ரங்' (Phan Rang) என்னும் வடிவில் வழங்குகிறது.(8)

## துணைநூல் ஆதாரங்களும் குறிப்புகளும் :


(1) Jean Filliozat, "L"inscription dite <<Vo-canh>>," Bulletin de l'Ecole francaise d'Extreme-Orient, Vol. 55 (969), pp. 107-116, plates 7-11; Paul Wheatley, "The Mount of the Immortals: A Note on the Tamil cultural influences in the fifth century Indochina," Oriens Extremus, Vol21(1974), p.97; The Kings of the Mountain: An Indian Contribution to Statecraft in Southeast Asia (Kula Lumpur: University of Malaya Press, 1980),p3 and n.16 on p29. AS regards the title maara, Profesor Paul Wheathley has aptly remarked in his article in Oriens Extremua, Vol21 (1974), p.108: "The point of concern a Tamil name for one reason or another was important enough to be recorded on stone."

(2) Paul Wheathley, "The Mount of the Immortals," Oriens Exremes Vol21 (1974), pp. 97-98 and 105-107; The Kings of the Mountain (Kuala Lumpur, 1980), pp.1-2

(3) Tamil Lexicon,Vol5 (Chennai: University of Madras, 1932, reprint 1982), p3080; Kathirvel Pillai's Tamil Dictionary (கதிர்வேல் பிள்ளை, தமிழ்ச் சொல்லகராதி) Part 3 (Chennai: International Institute of Tamil Research, reprint, 1998),p.1627.

(4) G. Coedes, The Indianized States of Southeast Asia (Kula Lumpur: University of Malaya Press, 1968 '), p36.

(5) Mireile Benisti, "Notes d'iconographie Khmere: IV. Au Sujet d'un linteau de Vat Baset ." Bulletin de 'Ecole Francaise d'Extreme-Orient, Vol53 (1967), pp513-516 and plates 15-17; "Notes d'iconographie Khmere. VII. Kaaraikaal- Ammaiyaar," Bulletin de l'Ecole Francaise d'Extreme-Orient, Vol55 (1969), pp.159-161 and plates 16-19.

(6) G.Coedes, The Indiaized States of Southeast Asia (Kuala Lumpur, 1968), pp.48-49.

(7) In the Tamil cultural tradition, the name paandarangan (பாண்டரங்கன்) signifies Lord Shiva, while the term paandarangam (பாண்டரங்கம்) refers to a cosmic dance of Lord Shiva. Cilappathikaaram (சிலப்பதிகாரம்) 6: 44-45; Kaliththokai (கலித்தொகை), Katavu vaalththu (கடவுள் வாழ்த்து),8-9: "மண்டமலர் பலகடந்து மதுகையால் நீறணிந்து;பண்டரங்கம் டுங்கால்.." ('பாண்டரங்கம்,பண்டரங்கம் என விகாரமாயிற்று'-நச்சினார்க்கினியர் உரைக்குறிப்பு); கதிர்வேல் பிள்ளை தமிழ்ச் சொல்லகராதி, 3- ம் பாகம், பக்கம், 1478.

(8) G.Coedes, The Indianized States of Southeast Asia (Kula Lumpur, 1968), pp.103-104 and 172-176.

## சடாக்கர பந்தனம்

வெண்பா வேந்தன், கவிதா மணி, சித்திரப் பாவலர், கவிஞர்
வி.இக்குவனம்




ஆறுபடை வீடுடைய ஆறுமுகா சூரருடல்
கூறுபட வேலெறிந்து குன்றமர்ந்தோய் - ஏறுமயில்
மீதமரும் இன்பமது விண்ணமுது நாதத்தின்
போதமருள் ஞானியென்னும் பூண்.

படமும் பாடலும்
வி. இக்குவனம், சிங்கப்பூர்
10-05-2008



# கந்தர் கலிவெண்பாவில் சித்தாந்த சைவ சமய நெறி

முனைவர் இராம.சௌந்திரவல்லி, மதுரை

தமிழில் மந்திரம் என்பது உயர்ந்த நூல்களைக் குறிக்கப் பயன்படும் சொல், திருமூலரின் படைப்பு திருமந்திரம் எனப்படுகிறது.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த
மறைமொழி தானே மந்திரம்என்ப"

என்கிறார் தொல்காப்பியர். அதுபோல, கந்தர் கலிவெண்பாவையும் மந்திரம் என்கிறார் கி.வா.ஜ. நிறைமொழி மாந்தருள் ஒருவராகிய குமரகுருபர் தந்த இக்கந்தர் கலிவெண்பாவில் சிந்தாந்த சாத்திரக் கருத்துக்கள் செறித்து காணப்படுகின்றன. அவற்றுள் சிவஞான போதத்தின் கருத்துகள் எந்த அளவிற்கு இடம்பெற்றுள்ளன என்பதை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

கந்தர் கலிவெண்பாவை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். முதல் பகுதி, சித்தாந்த சாத்திரங்களும், உபநிடதங்களும் பேசும் பதி இயல்பு; இரண்டாம் பகுதி, முருகப்பெருமானின் வடிவழகும், கந்தபுராண நிகழ்வுகளும்; மூன்றாவது பகுதி, அவன் தனக்கு என்னென்ன நலன்கள் தரவேண்டும் என்ற வேண்டுதல்கள். இவற்றுள் முதல் பகுதியாகிய பரம்பொருள் விளக்கமாக அமையும் 36 கண்ணிகளே இங்கு ஆய்வுப் பொருளாகின்றன.

முதல் பகுதியாக அமைந்துள்ள 36 கண்ணிகளில் பரம் பொருள் இயல்பு பேசப்படுகின்றது. இந்திய நாட்டின் தலைசிறந்த சமயக் கொள்கைகளில் ஒன்றுமாய் விளங்குவது சைவ சித்தாந்தம். இது தென்னிந்திய மக்களின் அறிவுப் பெட்டகமாய் விளங்குவது. தர்க்க ரீதியாக நிலைநாட்டப் பெறும் உண்மைகளை, கடவுள், உயிர், உலகம், அறிவு, அறியாமை, இன்பம், துன்பம், இம்மை, மறுமை என்னும் பொருண்மைகளைக் கண்டறியும் முயற்சியில் தனி இடம் பெற்றது சைவம். இச்சைவ நெறியிலமைந்த சாத்திர நூல்களில் தலைமைத் தன்மையும் முதல் என்ற பெருமையும் கொண்டது மெய்கண்டார் தந்த சிவஞான போதம்.

சைவம் முழுமுதல் பரம்பொருளாகப் போற்றுவது சிவனை; சிவனாகிய முதல்வனுக்கு என்னென்ன இயல்புகள் உள்ளன என்று சிவஞானபோதம் கூறுகிறதோ, அவை அனைத்து இயல்புகளையும் முருகன்மீது ஏற்றிப் பாடுகிறார் குமரகுருபர். கௌமாரம் என்னும் தனிச் சமயநெறி பற்றி எண்ணாது, சித்தாந்த சைவசமய நெறியில் நின்று நடப்பவராகச் சிவத்தையும், முருகனையும் ஒப்பவைத்து ஒன்று என்றே காணுதல் குறிப்பிடத்தக்கது. ஏற்கெனவே 12ம் நூற்றாண்டைச் சார்ந்தவராகிய கச்சியப்ப சிவாச்சாரியார் கந்தபுராணத்தில் சிவனின் அம்சமே முருகன் எனச் சரவணப் படலத்தில் குறிப்பிடுவதும் இவண் நோக்கத்தக்கது. முன்னோர் மொழி போற்றி, அந்த நெறியிலேயே முழுமுதல் பரம்பொருளியல்புகளை முதல் 36 கண்ணிகளில் பேசுகிறார் எனலாம்.
சிவஞான போதத்தின் ஆறாவது நூற்பா செம்பொருளின் சீர்மையினை விளக்குவதாக அமைகிறது.

"உணர்உரு அசத்து எனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத்தாம் என

இரண்டு வகையின் இசைக்கும் மன்னுலகே (நூற்பா 6)

இங்கு சிவமாகிய சத்து ஒரு வகையில் உணரப்படாததாய், பிறிதொரு வகையில் உணரப்படுவதாய் நிற்கும் நிலை பேசப்படுகிறது. பதிப் பொருளாகிய இறை ஒன்றே சத்து எனப்படுவது. அது அறிய இயலாததாகவும் நிற்கும் தன்மையைத்தான் குமரகுருபர் கந்தர் கலிவெண்பாவில்,

"பூமேவு செங்கமலப் புத்தேளும் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும்-தேமேவு
நாதமும் நாதாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமும் காணாத போதமாய்-ஆதிநடு
அந்தம் கடந்த நித்தியானந்த போதமாய்ப்
பந்தம் தணந்த பரஞ்சுடராய்- வந்த
குறியும் குணமுமொரு கோலமுற்று எங்கும்
செறியும் பரம சிவமாய்" (கண்ணிகள் 1-4)

என்று கூறித் தொடங்குகிறார்.

பிரம்மனாலும், வேதங்களாலும், 36 தத்துவங்களின் தொடக்கமாகிய நாதத்தாலும், இறுதியாகிய பிருதிவி எனப்படும் மண்ணாலும் அறிய இயலாதவன்; தி, நடு, அந்தம் இல்லாதவன்; விருப்பு வெறுப்பு அற்றவன்; குறியும் குணமும் இல்லாதவன்; எங்கும் நிறைந்தவன் என்று கூறும் விளக்கங்கள் சிவஞான போதம் பதியின் இயல்புகளாகக் கூறுவனற்றின் விளக்கங்களாகவே உள்ளன. 5-வது கண்ணி முதல் 8-வது கண்ணி வரையிலும் அமைந்துள்ள செய்திகள் சிவஞான போதத்தின் முதல் இரண்டு சூத்திரங்களின் கருத்துக்களாகவே அமைந்துள்ளன. 5, 6 ஆம் கண்ணிகள்

"அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே
மனாதிகளுக்கு எட்டா வடிவாய்த் - தனா தருளின்
பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்கும்
தஞ்சமென நிற்கும் தனிப் பொருளாய்"

என்பன. "அந்தம் ஆதி என்மனார் புலவர்" (நூற்பா 1)என முடியும் சிவஞான போத முதல் நூற்பா பரம்பொருளின் தொழிலையும், எங்கு அனைத்தும் அடங்குகின்றதோ, அவ்வந்தத்திலிருந்து அனைத்தும் தோற்றுவிக்கப்படுகின்றன என்பதையும் உணர்த்தும். அக்கருத்தே இங்கு "அனாதியாய்" எனவும், "எவ்வுயிர்க்கும் தஞ்சம்" எனவும் குறிக்கப்படுகின்றன.

அடுத்த இரு கண்ணிகளில் உலக மாயா காரியங்களை உண்டாக்கி, அவற்றில் தான் அழுந்தாது வேறாய் நிற்கும் இறை இயல்பினை அழகான உவமத்தின் மூலம் குறிக்கிறார்.

"பூரணமாய் நித்தமாய் போக்குவரவும் புணர்வும்
காரணமும் இல்லாக் கதியாகித் - தாரணியில்
இந்திர சாலம் புரிவோன் யாரையும் தான்மயக்கும்
தந்திரத்தில் சாராது சார்வது போல்" (கண்ணிகள் 7, 8)

எனுமிடத்தில் மாயாசால வித்தை காட்டுபவன் தன் வித்தையில் மற்றவர்களைப் பிணித்து, தான் அவ்வித்தைகளால் மயங்காது நிற்றல் போல, மாயா காரியங்களைப் படைத்த இறைவன் உலக வயப்படாது நிற்றலைக் குமரகுருபர் குறிக்கிறார். இதனையே,

"அவையே தானேயாய், இருவினையின்
போக்கு வரவு புரிய ணையின்
நீக்கமின்றி நிற்கும் அன்றே"

என்கிறது சிவஞான போதம் இரண்டாவது நூற்பா.

இங்கு, இறைவனது ஒன்றாதல், வேறாதல், உடனாதல் என்னும் பண்புகளை அவையேயாதல், தானேயாதல், அவையும் தானுமாதல் என விளக்கலாம். சாராது சார்வது போன்ற இந்திரசாலம் எனக் குமரகுருபர் கூறுவதும் இப்பண்பையே.

சிவஞான போதத்தின் 7-வது நூற்பாவில் மெய்கண்டார் இறைவனால் உணர்த்தப்பட்டு உணரும் ஆன்மாவியல்பு பற்றிப் பேசுகிறார். அசத்தாகிய உலகப் பொருட்களில் அழுந்திக் கிடக்கும் ஆன்மாவை 'அசத்து இலது அறியாது' (நூற்பா. 7) என்கிறது சிவஞான போதம். ஆன்மாவை அதன் வினைகட்கு ஏற்பட அசத்தில் அழுந்தச் செய்பவனும் முழுமுதலே.

"கன்மத்துக் கீடாய்க் கறங்கும் கசடமும் போல்
சென்மித்து உழலத் திரோதித்து - வெந்நிரய
சொர்க்காதி போக மெலாம் துய்ப்பித்து" (கண்ணிகள் 16, 17)

என்கிறார் குமரகுருபரர்.

சிவஞான போதம் 8-வது நூற்பா, முழுமுதல் ஞானகுருவாக வந்து ஆன்மாவிற்கு அருள்பாலிக்கும் தன்மையைப் பேசுகிறது. சரியை, கிரியை, யோகம் என்னும் மார்க்கங்களில் நின்று ஒழுகுவார்க்கு சாலோக, சாமீப, சாரூப மென்னும் பதமுத்திகளை அளிப்பவன் இறைவன். இருவினை ஒப்பும், மலபரிபாகமும் ஏற்பட சக்திநிபாதம் உண்டாகிறது. சக்தி நிபாதம் என்பது இறைவனின் அருட் சக்தியின் நோக்கு ஆன்மாவின் மீது பதிதல், புண்ணியத்தால் உயிரிடத்து மலம் விலகுகிறது. அதுவே மலபரிபாகம். இத்தூய நிலையில் தானே ஒண் குருவாக வந்து அருள் செய்பவன் இறைவன் என்கிறது சிவஞான போதம். அக்கருத்துக்களை அப்படியே ஏற்றுக் கொண்ட குமரகுருபரர் 19-24 கண்ணி வரை இக்கருத்துகளைக் கூறுகிறார்.

1. சிவஞான போதம் கூறும் முழுமுதலின் இயல்புகள் அனைத்தையும் முருகப் பெருமானிடத்து ஏற்றுவித்துப் பாடியுள்ளார்.
2. கௌமாரம் என்னும் தனிச் சமயநெறி செல்லாது சைவத்தின் அடிப்படையில் நின்றே முருகனைப் பாடுகின்றார்.
3. சிவஞான போதத்தின் 1, 2, 6, 7, 8-வது நூற்பாக்களில் கூறப்படும் பதி இயல்புகளில் குமரகுருபரர் பாடலில் காணப்படுபவை.
   அ) பரம்பொருள் அப்பாலுக் கப்பாலானவன்.
   ஆ) காட்டலாகாப் பொருளானானவன்.
   இ) அவனருளாலே அவனை அறியலாம்.
   ஈ) மாயா காரியங்களை உண்டாக்கி, பசுவினது அனுபவங்களுக்குக் காரணமானவன்.
   உ) சார்ந்ததன் வண்ணமாகாது அயலாகவும் நிற்பவன்.
   ஊ) ஞானாசிரியனாகத் தோன்றுபவனும் அவனே.
4. செறிந்த சித்தாந்த சாத்திரக் கருத்துகளின் கருவூலமான கந்தர் கலிவெண்பா ஆசிரியரின் 5-ம் வயதில் பாடப் பெற்றது என்பது ஆய்வாளர்களுக்கு வியப்பையும், ஆன்மீகவாதிகளுக்குச் சிலிர்ப்பையும் உண்டாக்குகிறது.

# சித்தர் பாரம்பரியம் ஓர் ஆய்வுப் பார்வை

பேராசிரியர் முனைவர் மு.இராசேந்திரன்
க. சில்லாழி




## முன்னுரை

தமிழர் மரபில் சித்தர் நெறி என்பது மிகத் தொன்மையான நெறியாகும். மனிதப் பிறப்பு, அதன் இரகசியம், வாழ்வின் நோக்கம், உலகம், இயற்கைத் தத்துவம், மரணமில்லாப் பெருவாழ்வு என எண்ணிலடங்காத விஷயங்களைத் தன்னகத்தே கொண்டது இந்நெறி (சாமி சிதம்பரனார்,2001,பக்13&14). ''சித்தர்'' என்பது வடச்சொல்லாகும். சித்தர்களைத் தமிழில் அறிவர் என்றும், நிறைமொழி மாந்தர் என்றும் கூறுவர்.

## சித்தர் சொல் பொருள் விளக்கம்

சித்தர் என்ற சொல்லின் வேர்ச்சொல் பல பரிணாமங்களில் பார்க்கப் படுகின்றது. சித்தர் எனும் சொல் ''சித்தி'' என்ற சொல்லை வேர்ச்சொல்லாகக் கொண்டது என்றால் எண்சித்தியை தவத்தால் அடையப் பெற்றவரே சித்தர் எனப் பொருள்படும். மாறாக ''சித்தா'' (Chita) எனும் சொல் வேர்ச்சொல்லாக இருக்குமானால் மனதையும் சிந்தனையும் முழுக்கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் நிறைநிலை மாந்தரே சித்தர் எனப் பொருள்படும். மேலும், ''சித்'' என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டால் அது அறிவு, ஞானம், அதன் முதிர்ச்சி நிலை ஆகியவற்றை எய்தப் பெற்றவர் சித்தர் எனும் பொருளைத் தருவதாகக் கருதப் படுகிறது (சோ.ந.கந்தசாமி,2004,பக்.1).

சித்தர்கள் என்பவர் சித்தத்தைத் தம் வசப்படுத்தியவர், யோக சாதனையால் பெறுதற்கரிய ஆற்றல்களையும் வலிமையினையும் பெற்று முக்காலமும் அறியும் ஞானத்தை அடைந்தவர்கள். இவர்களைத் தமிழ் மரபில் அறிவர் எனும் சொல்லால் குறிக்கப்படுவது தெரிய வருகின்றது (சோ.ந.கந்தசாமி,2003,பக்.285; ஸ்ரீ தேவநாத ஸ்வாமிகள்,2003,பக்.5).

சித்தர் மகத்தான தூய்மையையும் தெய்வநிலையையும் அடைந்தவர் எனப் பொருள் கொள்ளுதலும் உண்டு (டி.என்.கணபதி,2005,பக்.25). மேலும் சீவனையே சிவனாகக் கொண்டு சித்தத்தை அதன் பால் வைத்துப் பேரானந்தம் அடைந்தவர்கள் எனவும் பொருள் காணப்படுகின்றது (கோவி.சிவபாலன்,2006,பக்.40).

இவை சித்தர்கள் என்ற பதத்திற்கு அறிஞர்கள் காட்டிய கருத்துகளாக உள்ளன. இனி இப்பதத்திற்குச் சித்தர்களே கூறியுள்ள பொருள் விளக்கத்தைக் காண்போம்.

*வால்மீகர் ஞான சூத்திரத்தில்* வால்மீகர்,

''சிந்தை தெளிந் திருப்பவனா ரவனே சித்தன்
செகமெலஞ் சிவமென்றே யறிந்தோன் சித்தன்;'' (பாடல் 2)

என்று பாடுகின்றார். திருமூலரோ,

''யோகச் சமாதி உகந்தவர் சித்தரே'' (திருமந்திரம் 1490)

என்று சித்தர் தன்மையைப் பாடுகின்றார். கல்லுளிச் சித்தரோ,

"தன்னையே தானறிந்தோன் சித்தர்..." (பா.கமலக்கண்ணன்,2000,பக்.203)

என்று பாடுகின்றார். அடுத்து வரும் அகப்பேய்ச் சித்தரோ *ஞானக்கோவையில்,*

"தன்னை அறிய வேணும் - அகப்பேய்
சாராமற் சாரவேணும்..." (பாடல் 78)

எனப் பாடிச் சித்தர்கள் எந்த நிலையில் அறிவர் எனக் கூறப்படுகின்றனர் என்பதற்கு விளக்கமளிக்கின்றார். இறுதியாக ஆதிசித்தராக விளங்கும் சுப்ரமணியர் சித்தர்களுள் உயர்நிலையை அடைந்தவர் யார் என்பதனைச் சுட்டிக் காட்டும் பாடலில் சித்தர் எனும் பதத்திற்குறிய விளக்கங்களைப் பெற முடிகின்றது.

"பொன்வெள்ளி செய்கிறவன் பெரியோனல்ல
புகழான அட்டசித்தி பெரியோனல்ல
முன்னின்ற வயித்தியனும் பெரியோனல்ல
மூச்சடக்கி எழும்பியவன் பெரியோனல்ல
சின்னமுள்ள குழியிலிருப்போன் பெரியோனல்ல
திரமுடனே கெவனமிட்டோன் பெரியோனல்ல
தன்னிலையை அறிந்தவனே பெரியோனையா
தனையறியான் வகைகெட்ட சண்டிமாடே"
(சுப்ரமணியர் சுத்த ஞானம் 100, பாடல் 98)

இவ்வாறாக அறிஞர்களின் கருத்துகளையும் சித்தர்களின் பாடல்களையும் ஆராய்ந்து பார்க்கும் போது சித்தர் என்பவர் யோக சாதனையிலும், அரிய தவத்தாலும்; பேரறிவு, ஞானம், முதிர்ச்சிநிலை, மகத்தான தூய்மை, தெய்வீகத்தன்மை ஆகியவற்றோடு பெருதற்கரிய ஆற்றலையும், வலிமையையும் , எண்சித்தியையும், முக்காலமும் அறியும் ஆற்றலையும் அடைந்து, சிந்தை தெளிந்த நிலையில் தன்னைத்தானறிந்து சீவனையே சிவனாகக் கொண்டு பேரானந்த நிலையில் வீற்றிருக்கும் நிறைநிலை மாந்தர் என அறியப்படுகின்றது. ஆயினும் சித்தர் என்ற பதத்திற்குச் சரியான பொருளைக் காண நமக்கு நிறைவான ஆதாரங்கள் கிடைக்கவில்லை என்றே கூற வேண்டும்.

## இலக்கியங்களில் சித்தர்கள்

சித்தர்களைத் தமிழில் அறிவன் என்று கூறும் வழக்கு பழங்காலம் தொட்டே இருந்து வருகின்றது. தமிழில் இலக்கண நூல்களில் மிகத் தொன்மையான நூலாக விளங்கி வரும் *தொல்காப்பியத்தில்,*

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்" (வாகைத்திணை, பாடல் 74)

என்று கூறப்படுகின்றது. இதனால் "அறிவன்' எனும் சொல் சித்தர்களைக் குறிப்பதாக அறியப்படுகின்றது. மேலும் திருக்குறளில், கடவுள் வாழ்த்தில்,

"கற்றதனால் லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஆர் எனின்" (குறள் : 2)

எனும் குறளில் சித்தர்களைக் குறிக்கும் அறிவன் எனும் சொல் இடம் பெற்றுள்ளது. அஃதன்றி சித்தர் எனும் அறிவர் கூட்டுறவு இனிமையானது என்பதை ஔவையார் *(ஔவையே தமிழ்),*

இனியது கேட்கின் தனி நெடு வேலோய்
...
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்த்தல்''
(சி.எஸ்.எஸ்.சோமசுந்தரம்,1996,பக்.120)

என்று தமது பாடலில் கூறுகின்றார். ஔவையும் தமது பாடலில் அறிவன் எனும் சொல்லைக் கையாண்டிருப்பதைக் காணலாம்.

அறிவன் எனும் சொல்லைத் தவிர்த்து சித்தர்களைத் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களில் நிறைமொழி மாந்தர் எனவும் போற்றுகின்றன. இதனை,

''நிறைமொழி மாந்தர் னையிற் கிளந்த
மறைமொழி தானே மாந்திரம் என்ப''

எனத் தொல்காப்பியத்தில் குறிப்பிடுவதாகத் தமது *சித்தர்கள்* கண்ட இறைமை எனும் நூலில் சி.எஸ்.முருகேசன் கூறிகின்றார். தமிழ் இலக்கணத்தில் முதல் நூலாக விளங்குவது *அகத்தியம்* ஆகும். அதன் வழிநூலாகவே *தொல்காப்பியம்* தோன்றியது. அவ்வகையில் *அகத்தியத்தை* முதல்நூலாகக் கொண்டு *தொல்காப்பியம்* இயற்றிய தொல்காப்பியர் அகத்தியரின் சொற்களை மந்திரமாகக் கொண்டு அவரை நிறைமொழி மாந்தர் எனக் கூறுவதாகக் கருதலாம் (சிவராஜயோகி, 1999,பக்.9).

''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்'' (குறள் : 28)

எனும் திருக்குறளில் இடம் பெற்றிருக்கும் இச்சொற்பயன்பாடு சித்தர்களைக் குறிப்பதாக ஏற்பதும் பிழையாகாது.

*தொல்காப்பியம்* மட்டுமின்றி சங்க இலக்கியங்களாகிய *புறநானூறு* (பாடல் 43:12-4), *குறுந்தொகை* (வெள்ளிவீதியரின் பாடல் 130) போன்றவற்றிலும் சித்தர்கள் குறித்த பாடல்கள் உள்ளன. சங்க காலம் மட்டுமின்றி சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய காலத்தில் *சிலப்பதிகாரம்* (10:176-177), *மணிமேகலை* (24:46-47), போன்ற நூல்களிலும் பக்தி இலக்கிய காலத்தில் தோன்றிய *தேவாரத் திருவாசகப்* பாடல்களிலும் (சம்பந்தர் iii 51-2, அப்பர் v 41-2, சுந்தரர் vii 88-7, மாணிக்கவாசகர் viii 46.2), திருமந்திரத்திலும் (பாடல் 25) வைணவ இலக்கியமாகிய *நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்திலும்* (திருமழிசையாழ்வார், பாடல் 94), பின்னாளில் தோன்றிய *கலம்பகம்* (பாடல் 64), *திருப்புகழ்*, பரஞ்சோதி முனிவரின் *திருவிளையாடற் புராணம்*, *பிரபுலிங்கலீலை*, தாயுமான சுவாமிகள் பாடல்கள் போன்றவற்றிலும் தற்காலப் புதுகவிதைக்கு வித்திட்ட சுப்பிரமணியின் புதுக்கவிதை வரை சித்தர்கள் பற்றிய குறிப்புகள் நிறைவாகக் காணப்படுகின்றன (சோ.ந.கந்தசாமி,2003,பக்.293,297,298,299,303,305,309,312,313,320). இதன் மூலம் சங்க காலம் தொட்டு இக்காலம் வரை சித்தர்களைப் பற்றிய குறிப்புகள் தமிழ் இலக்கண இலக்கியங்களில் போற்றப் பட்டிருப்பது தெரிய வருகின்றது. எனவே சித்தர் நெறி என்பது காலங்காலமாகத் தமிழர் மரபில் வேரூன்றி இருந்துள்ளது என்பதற்கு இதுவே தக்க சான்றாகும்.

**சித்தர்களின் உருவத் தோற்றம்**

சித்தர் உருவத் தோற்றம் எனச் சிந்திக்கும் போது அதை நாம் இரண்டு நிலைகளில் காணலாம். ஒன்று அவர்களின் தூலதேகத் தோற்றம், மற்றது அவர்களின்

ஒளியுடல் எனப்படும் பிரணவதேகம். இதைப் பற்றி கூறும் போது சி.எஸ்.முருகன் தமது, *சித்தர்களின்* பேருலகம் எனும் நூலில்,

> "சித்தன் பெறற்கரிய பேற்றால் மரணத்தையும் வென்று மரணமிலாப் பெருவாழ்வை இந்த உடலிலேயும் உடலுக்கு அப்பாலும் வாழ்கிறான்."
> (2005(C),பக்.7)

என்று சித்தர்களின் ஒளியுடல் பற்றிக் கூறுகின்றார். சுவாமி ராம தனது அனுபவத்தில் பரகாயப் பிரவேசத்தால் மற்றொரு உடல்தாங்கி வந்த ஓர் சித்தரைப் பற்றிக் குறிப்பிடுகின்றார் (2007,பக்.423 - 427). மேலும், சித்தர்கள் சமாதியில் அமர்ந்து தங்களின் உடலில் இருக்கும் ஆத்மாவை வெளியேற்றுவது மரணமாகாது. ஏனெனில் அவர்களுக்குத் ஆதங்களின் ஆத்மா எப்பொழுது தமது தூல உடலை விட்டு வெளியேறும் எனும் இரகசியம் தெரியும். அதுமட்டுமில்லாமல் அந்த ஆத்மாவானது சிரசின் உச்சியில் இருக்கும் பிரம்மாந்திரத்தின் வழி வெளிச்செல்கிறது. இந்நிலை சாதாரண மனிதனுக்கு வாய்க்காது. தொண்மை வாய்ந்த யோக சாத்திரத்தில் உடலில் இருந்து ஆத்மா வெளிச்செல்லும் 11 வழிகள் மிகத் தெளிவாகவும் துள்ளிதமாகவும் விளக்கப்பட்டுள்ளது. இதில் யோகியானவர் பிரம்மாந்திர வழியைப் பயன்படுத்தி ஆத்ம ரூபமாக வெளியேறுவார். இப்படி வெளிச்செல்லும் இவர்களுக்கு முக்காலமும் உணரும் ஞானம் இருக்கும். (மேலது பக்.410-413). பா.கமலக்கண்ணன், கோரக்க சித்தரும், போகரும் வெவ்வேறு இடங்களில் சமாதி கொண்டு அச்சமாதியில் தூல உடம்பினை உகுத்துவிட்டுப் பின் யாருக்கும் புலப்படாமல் வெளிவந்து வேறு வேறு உடல் தாங்கி வேவ்வேறு இடங்களில் வாழ்ந்ததாகக் கூறுகின்றார் (2006,பக்.135). அகத்தியர் பெருநூல் காவியமும் ஒளி உடலைக் காயசித்தியின் மூலம் பெறமுடியும் என்பதையும், அது கற்பூர தீபத்திற்கு ஒப்பானது என்றும் கூறுவதாகச் சிவராஜ யோகி கூறுகின்றார் (1999,பக்.11) இது சித்தர்களின் ஒளி உடல் தோற்றதிற்கு தக்க சான்றாக அமைகின்றது.

இக்காலத்தில் சித்தர்களைப் பற்றிச் சித்தரிக்கப்படும் வண்ண ஓவியப் படங்கள் சந்தைகளில் அதிகமாகவே விற்பனைக்கு வந்துள்ளன. இவையனைத்தும் சித்தர்களைப் பற்றிய தத்துவார்த்த அடிப்படையிலும், சித்தர் பாடல்கள், புராணங்கள், செவிவழிச் செய்திகள், ஒரு சிலர் கண்ட கனவுக்காட்சிகள், அற்புதக் காட்சிகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு தீட்டப்பட்ட ஓவியங்களேயாகும். சித்தர்களின் தோற்றமும் எவ்வாறிருக்கும் என நாம் நினைக்கும் வேளையில் நம் மனக்கண்ணில் உடனே தோன்றுபவர் வள்ளல் பெருமான் இராமலிங்கரே ஆவார். இவர் தோற்றத்தை மக்கள் நேரடியாக பார்த்ததுண்டு. இவர் வெண்மைத் துகில் போர்த்திய தோற்றமுடையவர். எப்பொழுதும் முகத்தில் சாந்தம் தவழும். ஆனால் எல்லாச் சித்தர்களும் வல்லளாரைப் போலவே தோற்றமளித்தனர் போலும் என எண்ணுவது பிழையாகிப் போகும்.

இவ்வேளையில் சித்தர்கள் எப்படி இருப்பர் என்று சித்தர் வரிசையில் ஒருவரான சிவவாக்கியரே விளங்குகின்றார் *(ஞானகோவை).*

> "சித்தர் என்றும் சிறியர் என்றும் அறியனாத சீவர்காள்
> சித்தர் இங்கு இருந்த போது பித்தர் என்று எண்ணுவீர்
> சித்தர் இங்கு இருந்தும் என்ன பித்தன் நாட்டிருப்பரே
> அத்தன் நாடும் இந்த நாடும் அவர்களுக்கெலாமொன்றே"
> (பாடல் 506)

இப்பாடலின் மூலம் சித்தர்கள் பித்தர்களைப் போல இருப்பர் என்று அறிந்துக் கொள்ள முடிகிறது. அக்காலம் மட்டும் இன்றி இக்காலத்திலும் சித்தர்கள் பித்தர்களைப் போலவே காட்சி தருகின்றனர் என்பதாகத் தெரிகின்றது. மகாகவி பாரதியார் தம்

காலத்தில் வாழ்ந்த குள்ளச்சாமி எனும் சித்தரைப் பற்றி குறிப்பிட்டிருக்கின்றார்,(சோ. ந.கந்தசாமி,2003,பக்.321). 20, 21 ஆம் நூற்றாண்டு காலத்தில் வாழ்ந்த சில சித்தர்களைப் பற்றிய நூல்கள் கூட இவ்வாறான தோற்ற அமைப்பையே விவரிக்கின்றன (பூண்டி மகான் வரலாறு).

சித்தர்கள் ஏன் பித்தர்களைப் போல காட்சி தரவேண்டும்? உலக மக்கள் சித்தர்களின் ஆற்றல்களை அறிந்து கொண்டால் தங்களின் உலகியல் பிரச்சனைகளைத் தீர்த்து வைக்கச் சித்தர்களைச் சரணடைவார்கள். இது தொடரும் போது சித்தர்களின் ஏகாந்த சூழலுக்குக் கொஞ்சமும் இடமில்லாது போய் அதனால் அவர்களின் தவம் பாழ்படுகின்றது. மேலும் சில சூழல்களில், தம்மைச் சரணடையும் ஒரு சிலரின் துன்பங்களைக் காணும் போது அது அவர்களின் வினைப்பயன் என்பதுவும் அதனை அவர்கள் அனுபவித்த பின்னர் அதனால் அவர்களுக்கு நன்மை பிறக்கும் என்பதனாலும்; இதைச் சொன்னால் பாமர மக்களால் புரிந்து கொள்ள முடியாது என்பதாலும்; இத்தகைய நிலையைத் தவிர்க்கும் பொருட்டும் சித்தர்கள் தங்களை யாரும் அணுகாதிருக்கப் பித்தர்களைப் போல நடந்து கொள்கின்றனர் என முதலாம் உலக சித்தர் நெறி மாநாட்டில் பங்கு பெற்ற பெயர் சொல்ல விரும்பாத அறிஞர் ஒருவர் கூறியுள்ளார். இதன் அடிப்படையில் இரமண மகரிஷி, இராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றோரும் நோயினால் பீடிக்கப்பட்டிருந்த போது தங்களுக்கு ஏற்பட்ட நோயினை நீக்கிக் கொள்ளும் ஆற்றல் இருந்த போதிலும் அவ்வாறு செய்யாமல் அது தீர்க்கப்படவேண்டிய கர்மவினை என்பதால் அதனை அனுபவித்தனர்.

சித்தர்கள் ஏன் பித்தர்களைப் போல நடந்துக்கொள்கின்றனர் எனக் குறிப்பிடும் போது சுவாமி ராமா,

"There are many mystics who are realy great in their actual life, but pretend to be imbalanced so that they are not disturbed" (2007,பக்.177)

என்று கூறுகின்றார். இதனால் மிகப் பெரிய ஞானம் பெற்ற சித்தர்கள் பலர் இருந்தும் கூட அவர்கள், மக்கள் தங்களைத் தொல்லைப் படுத்தாமல் இருக்கப் பைத்தியம் போல நடித்துச் செல்வர் என அறிய முடிகின்றது. இன்னும் சில சித்தர்களோ வாய்திறந்து பேசாமல் மௌனமாகவே இருந்து விடுகின்றனர். இதனால் சலிப்படைந்த மக்களும் இவர்களை நாடுவதைக் குறைத்து விடுகின்றனர். ஆனால் உண்மையான ஞானத்தேடல் உள்ளவர் அந்த மௌனமொழியை அறிந்து அதன் மூலமாகவே உபதேசம் பெறுவர். இதனைக் குறிப்பிடும் போது சுவாமி ராமா தமது அதே நூலில்,

"Silence will give you what the world can never give you."

(மேலது பக்.360)

என்று கூறி, உலகம் நமக்குக் கொடுக்க முடியாததையும் கொடுக்கும் ஆற்றல் உடையது மௌனம் என்கிறார்.

*வள்ளலார் வாழ்கிறார்* எனும் நூலில் இறந்தவரைப் பிழைக்க வைக்கும் வித்தையை வள்ளலார் அறிந்தவர் என மக்கள் தெரிந்து கொண்ட பின்னர் வள்ளலாரிடம் இறந்த தங்களின் உறவினர்களைப் பிழைக்க வைக்க வேண்டுகின்றனர். இதனால் வள்ளலார் தனது ஏகாந்தத்தை இழக்கும் சூழல் ஏற்படுகின்றது. அதே வேளையில் வள்ளலார் மரணமில்லாப் பெருவாழ்வு வாழ தயவுடன் மக்களை அழைத்த போது அவரிடம் யாரும் வரவில்லை(பா.கமலக்கண்ணன்.2000,பக்.14&15). இப்படி ஞான நாட்டம் இல்லா மக்களிடம் தமது ஏகாந்தத்தை இழக்க மனமில்லாமல்தான் சித்தர்கள் தமது நிலையைப் பித்தர்களைப் போலக் காட்டுகின்றனர் எனலாம். ஆனால் இதுவும் முடிந்த முடிவல்ல.

சித்தர் பரம்பரையில் திருமூல வர்க்கத்தார் இளைஞர்களைப் போல ஒற்றைச் சடை, கால்களில் மரத்தாலான பாதுகைகள், வலது கையில் மாத்திரைக் கோல் என்ற தண்டு, மறுகையில் நூல் என அமையப்பெற்றத் தோற்றத்தோடு எப்போதும் யோகத்தில் இருப்பதுவும் தெரிய வருகின்றது எனச் *சதுரகிரியில் கோரக்க சித்தர்* எனும் நூலில் பா.கமலக்கண்ணன் குறிப்பிடுகின்றார்.

இதனால் சித்தர்களின் தோற்றமும் நடவடிக்கையும் இன்னதென்று உறுதியாக வரையறுத்துக்காண முடியாது என்பதுவும் தெரிகிறது (கோவி.சிவபாலன்,2006,பக்.146). 'சித்தம் போக்கு சிவன் போக்கு' என்பதற்கிணங்கத் தன்னிலை உணர்ந்த சித்தர்களே தாம் கொள்ள வேண்டிய தோற்றத்தையும் முடிவு செய்கின்றனர். புரிதல் மிக்க ஞான வேட்கை உடையவன் தமது ஞான குரு எந்தத் தோற்றத்தில் இருந்தாலும் அவரால் எளிதில் ஈர்க்கப்பட்டு அவரைச் சென்றடைகின்றான்.

**சித்தர்கள் காலமும் வாழ்விடமும்**

சித்தர்கள் தோன்றிய காலம் மிகவும் தொன்மையானது. ஸ்ரீ தேவநாத ஸ்வாமிகள் தமது, நூலிலும் (2006,பக்.6) கோவி.சிவபாலன் தமது கட்டுரையிலும் (2006,பக்.147) சித்தர்களை எந்தக் கால வரையரைக்குள்ளும் அடக்க முடியாது என்று கூறுகின்றனர். போகர் 7,000 எனும் நூலில் போகர்,

"பகருவேன் அகஸ்தியர்க்கு வயதேதென்றால்
பட்சமுடன் துகைக்கணக்கு கூறொன்னது
....
அப்பனே நாலுயுகம் கடந்தசித்து"

(பாடல் 5757)

என்று அகத்தியரின் வயதைக் குறிக்கின்றார். இதன் மூலம் அகத்தியர் நான்கு யுகங்கள் கடந்த சித்தர் என அறியப்படுகின்றது. இவற்றை ஆராய்ந்து பார்க்கும் போது சித்தர்கள் தோன்றிய காலத்தை அறிவது முடியாத நிலை என்றே தெரிகிறது.

இவ்வாறு காலத்தை வென்று வாழும் சித்தர்கள் இந்தியாவில் பல பகுதிகளில் வாழ்ந்துள்ளனர் (சோ.ந.கந்தசாமி,2004,பக்.94). இதனால் சித்தர் நெறி இந்தியா முழுவதும் பரந்து விரிந்த நெறியென்றும் சித்தர்கள் பல இடங்களில் வாழ்ந்தனர் என்றும் அறிய முடிகின்றது. மேலும், *போகர் ஏழாயிரத்தில்,*

"பன்மையால் யாக்கோபு மரபதென்றால்...
தேன்மாறிப் பொழிகின்ற மக்காதேசம்
சென்றல்லோ பெயர்மாறி உருவுகொண்டார்"

(பாடல் 5713)

என்று பாடுகின்றார். இதன் வழி மக்கா தேசத்தில் (அரபு உலகில்) இராமதேவர் வாழ்ந்தார் என்பது புலனாகின்றது. அஃதன்றி போகர் பல இடங்களில் தாம் சீன தேசத்தில் வாழ்ந்ததைப் பாடுகின்றார்(*போகர் 7000*,பாடல் 5223,5224,5225). இதனால் சித்தர்கள் இந்தியா மட்டுமின்றி உலகெங்கும் வாழ்ந்துள்ளனர் என அறியப்படுகின்றது.

இப்படி உலகெங்கும் வாழ்ந்து வந்த சித்தர்கள், மக்களோடு கலந்து வாழ்ந்திருந்த போதிலும் காடுகள், மலைகள், குகைகள், போன்றவற்றையே தங்களின் உறைவிடமாகக் கொண்டிருந்தனர் என்பதற்கு ஆதாரங்கள் பல உள்ளன. சித்தமருத்துவத்தின் ஆதி கர்த்தாக்களாகிய சித்தர்கள் அரிய மூலிகைகள் கிடைக்கும் வனத்தையே தங்களின் வாசத்தளமாகக் கொண்டதில் வியப்பில்லை. இன்றளவும்

பொதிகைமலை, கொள்ளிமலை, சதுரகிரி, இமயமலை போன்ற இடங்கள் சித்தர்கள் வாசத்தளத்தில் புகழ் பெற்று விளங்குகின்றன. (பா.கமலக்கண்ணன்,2006பக்.26). சித்தர்கள் இயற்கையை நேசிப்பவர்கள். இவர்கள் இத்தகைய சூழலை விரும்பியது இவர்களின் இயற்கையோடு இசைந்து வாழும் போக்கிற்கு ஆதாரமாகத் திகழ்கின்றது (சோ.ந.கந்தசாமி,2004,பக்.1). உலகில் அழகிய மலைகள் பல இருந்த போதிலும் அம்மலைகளைக் காட்டிலும் இமையமலையில் ஆன்மீக அலைகளும் சித்தர்களும் இருப்பது அதன் தனிச் சிறப்பாகும் என்கிறார் சுவாமி இராமா (2007,பக்.360).

சித்தர்களின் இருப்பிடங்கள் மேற்குறிப்பிட்ட இடங்களாக இருந்த போதிலும் இவர்கள் ஓர் இடத்தில் நிலையாக வாழ்ந்தது கிடையாது. உதாரணமாகத் தாம் வாழும் இடம் இன்னதென்று முக்கியத்துவம் அளிக்காத பட்டினத்தார் (*ஞானக்கோவை*),

> "பேய்போல் திரிந்து பிணம்போல் வாழ்ந்து இட்ட பிச்சையெல்லாம்
> நாய்போல் அருந்தி........"
>
> (பாடல் 35)

என்று பாடுகின்றார். சித்தர்கள் ஓர் இடத்தில் இருந்து, அங்கே பந்தபாசம் எனும் வலைக்குள் கட்டுண்டு போகாமல் இருப்பதைத் தவிர்க்கவே இவ்வாறு எந்த இடத்திலும் நிலைத்து வாழாத போக்கைக் கடைபிடிக்கின்றனர் (Swami Rama,2007,பக்.360). இதன் அடிப்படையில்தான், 'வந்த வேலையை விட்டுவிட்டுப் பந்தக் காலைப் பிடித்துக் கொண்டு நிற்காதே' எனும் பழமொழயின் வழி பழந்தமிழர் உணர்த்திணரோ என எண்ண இடமுண்டு. மேற்கூறிய காரணம் மட்டுமின்றி ஓடுகின்ற நதி செல்லும் இடமெல்லாம் செழுமை சேர்ப்பது போல சித்தர்களும் உலகில் உள்ள மக்களுக்கெல்லாம் நன்மை செய்யும் பொருட்டு இவ்வாறு எங்கும் நிலைத்து வாழாமல் எல்லா இடங்களிலும் தொடர்ந்து பயணம் செய்கின்றனர்(ஸ்ரீ தேவநாத ஸ்வாமிகள்,2003,பக்39). இதன் வழி சித்தர்களின் சுதந்திரப் போக்கும், பற்றற்ற நிலையும், கருணை மனமும் வெள்ளிடைமலையாகின்றன.

**எல்லா இனத்திலும் சித்தர்கள்**

எல்லாக் காலத்திலும் சித்தர்கள் வாழ்ந்ததைப் போலவே எல்லா இனத்திலும் சித்தர்கள் தோன்றியுள்ளனர். புத்த மதத்திலும் சமண மதத்திலும் சித்தர்கள் வாழ்ந்துள்ளனர். (சோ.ந.கந்தசாமி,2004,பக்4)

*போகர் ஏழாயிரத்தில்* மராட்டியர் (பாடல்5717), சிங்களவர் (பாடல் 5700), ஜைனர் (பாடல் 5734), நேப்பாள சந்திரகுலம் (பாடல் 5711) போன்ற பிற மொழியிலும் இனத்திலும் சித்தர்கள் இருந்துள்ளனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. குணங்குடி மஸ்தானும் ஒரு சித்தரே ஆவார். இதன் மூலம் சித்தர்கள் எல்லா குலத்திலும் தோன்றியுள்ளனர் என்பது தெளிவடைகின்றது.

குலம் இனம் மட்டுமின்றி ஆண், பெண் எனும் பால் பேதமற்றும் சித்தர்கள் தோன்றியுள்ளனர். தமிழ் மூதாட்டி ஔவையார் பெண்பால் சித்தரே. பதினென் சித்தர்கள் வரிசையில் இடம் பெற்றுள்ள குதம்பைச் சித்தர் (பாடல் 5728), ஊர்வசியாள் (பாடல் 5724) ஆகியோர் பெண்சித்தர் என்று *போகர் 7000* பறைசாற்றுகின்றது. இதனால் சித்தர்கள் எந்தக் கட்டுக்குள்ளும் சிக்காது சுதந்திர நோக்கில் ஆன்மநேயத்தில் ஒருமையுற்று விளங்கியுள்ளனர் என்பது தெரிகின்றது.

**சித்தர் பாடல்கள்**

சித்தர்கள் உலக மாயையில் கட்டுண்டு தவிக்கும் மக்கள் மீது கருணை கொண்டு வழங்கியதுதான் சித்தர் பாடல்கள். சித்தர் பாடல்கள் இலக்கிய உலகில் புகழ் பெறவில்லை என்றாலும் இலக்கண நடையிலும் அதில் பொதிந்துள்ள பொருளிலும் மேம்பட்டே

விளங்குகின்றன. சித்தர் பாடல்கள் யோகம், தாந்திரீகம் , காயசித்தி, ரசவாதம், ஜோதிடம், அறிவியல், சித்த மருத்துவம் எனப் பன்முகத் தோற்றம் கொண்டவை. அஃதன்றி படித்தோர் முதல் பாமரர் வரை அனைவரையும் கவர்ந்திழுக்கும் சந்தமும், அணியிலக்கணமும் இதில் உண்டு. (சோ.ந.கந்தசாமி,2003,பக்333). சித்தர்களின் பாடல்களில் கும்மி, சிந்து, கன்னி, ஆனந்தக்களிப்பு, புலம்பல் போன்ற நடையும் இருந்திருக்கின்றன(மேலது2004,பக்.3).

இவர்களின் பாடல்களில் பயன்படுத்தப்பட்ட மொழியியல் எளிமையானதாக இருக்கும் அதே வேளையில் ஞான இரகசியங்களைக் கட்டிக் காக்கப் பரிபாஷையும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு அனைத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்கிய சித்தர் பாடல்கள் ஏன் இலக்கியவாதிகளின் கவனத்தை ஈர்க்கவில்லை? இதுபற்றிக் குறிப்பிடும்போது மா.கோவிந்தன் தமது *பாபாஜியும் பதினென் சித்தர் கிரியா யோக மரபும்* எனும் நூலில்,

“சித்தர் பாடல்கள் புறக்கணிக்கப்பட்டிருப்பதற்குக் காரணம் அவை சிக்கலான, மறைபொருள்தன்மையுடையபழந்தமிழில்எழுதப்பட்டிருப்பதுதான். சித்தர்பாடல்கள் எளிதில் புரியாத வண்ணம் பூடகமாக இருக்க வேண்டும் என்பதற்காகவே அவை இவ்வாறு எழுதப்பட்டன.... ஒரு சித்த யோகி மட்டுமே இந்த அறியாமை பூட்டை உடைத்து அந்தப் பாடல்களில் உள்ளடங்கியிருக்கின்ற உண்மைப் பொருளை அறியவும் அறிவிக்கவும் முடியும்'' என்று விளக்கமளிக்கின்றார் (2003,பக்கம் 1&2). இதற்கும் மேலாக மக்களிடையே ஞான வேட்கை குறைந்திருப்பதுவும் இதற்குக் காரணமாக இருக்கலாம் என்று *சித்தர் தத்துவம்* எனும் நூலில் பா.கமலக்கண்ணன் கூறியிருக்கின்றார்(2000,பக்.78). எளிமையான பக்தி மார்க்கத்தின் மக்கள் மனம் செலுத்தியதால் சித்தர் பாடல்களாகிய ஞான நூல்களுக்கு வரவேற்பு இல்லாமல் போய் இருக்கலாம் என்றும் எண்ணிப் பார்க்க இடமுண்டு.

**அட்டமாசித்தியும் மரணமில்லாப் பெருவாழ்வும்**

சித்தர்களின் பேராற்றலைக் குறிக்கும்போது அதில் முக்கிய இடத்தைப் பிடிக்கின்றது சித்தி. சித்தி என்பது ஆன்ம ஈடேற்றத்தால் கிடைக்கும் அற்புத ஆற்றல் என்று கோவி.சிவபாலன் (2006.பக்.149), சி.எஸ்.முருகேசன் (2005(B),பக்.3) ஆகியோர் தமது ஆய்வில் தெரிவிக்கின்றனர். இதனால் சித்தி என்பது தவத்தின் மூலம் இறை அருளால் கிடைக்கப் பெறும் ஆற்றல் என அறியப்படுகின்றது.

சித்தர் தத்துவத்தில் அட்டமாசித்திகளாகிய அணிமா, மகிமா, லகிமா, பிராத்தி, பிரகாசியம், ஈசத்துவம், வசித்துவம், கரிமா ஆகியன மிகவும் பிரசித்தி பெற்றவை. இந்த எட்டு வகை சித்திகளும் பலகோடி சித்திகளாக விரிவடையும் தன்மை கொண்டவை என சி.எஸ்.முருகேசன் தமது, சித்தர்களின் அட்டமாசித்திகள் எனும் நூலில் விளக்குகிறார் (2005(B),பக்,27).

பாம்பாட்டிச் சித்தர், சித்தர்களின் சித்து செய்யும் பேராற்றலைத் தம் பாடல்களில் பாடியுள்ளார். பாம்பாட்டிச் சித்தர், “சித்தர் வல்லபம்'' எனும் பகுதியில்,

“தூணைச் சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்குவோம்
துரும்பைப் பெருந்தூணாகத் தோன்றச் செய்குவோம்
ஆணைப் பெண்ணென்றும் பெண்ணை ஆணும் ஆகச் செய்குவோம்...''
(பாடல் 27)

என்று பாடிக்கொண்டே போகின்றார்.

இப்படி மனிதனால் நினைத்துப் பார்க்க முடியாதவற்றையெல்லாம் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்ற சித்தர்கள் இச்சித்திகளின் பால் மனம் செலுத்தாது தங்களின் மரணமில்லாப் பெருவாழ்வு எனும் இலக்கிலேயே குறியாய் இருப்பர் (சோ.ந.கந்தசாமி,2003,பக்,305).

ஆக சித்தர்கள் சித்திகளைப் பெற்ற போதும் அதில் நாட்டம் செலுத்தாது தமது இலக்கை நோக்கிப் பயணிக்கின்றனர். சித்தர்களின் இலக்கு முக்தி எனும் மரணமில்லாப் பெருவாழ்வு. இறைவனால் அளிக்கப்பட்ட இந்த உடலைக் கொண்டு யோகம் மேற்கொண்டு அதனால் ஒளியுடல் பெற்றுச் சிவலோகத்தில் சித்தராய் இருப்பதை சித்தர்கள் முத்தி என்று கூறுகின்றனர் (சி.எஸ்.முருகேசன்,2005(A) ,பக்.86) மேலும் சித்தனானவன் மந்திர உட்சாடனத்தால் இறைவனைத் தரிசித்து, அதனால் மரணத்தை வென்று தூல உடலிலேயும் அவ்வுடலுக்கு அப்பாலும் வாழ்கிறான். இதுவே மரணமில்லாப் பெருவாழ்வைப் பற்றி மக்களுக்கு மிகச்சிறப்பாக எடுத்துக் கூறி அந்நிலையை அடைந்தவர் வள்ளலார்.

மரணமில்லாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்
புணைந்துரையோன்; பொய்புகலேன்;
சத்தியம் சொல்கிறேன்"

(134 மரணமில்லாப் பெருவாழ்வு 1 2310)

என்று மரணமில்லாப் பெருவாழ்வு வாழ்ந்திட அனைவரையும் தயவுடன் அழைக்கின்றார் வள்ளலார். சித்தர்கள் எந்நிலையில் இருந்த போதிலும் இதுவே அவர்களின் இலக்காக இருந்துள்ளது. சித்திகள் பெற்றும் தமது இலக்கு தவறாதவர்கள் சித்தர்கள்.

சித்தர் நெறியில்

இத்தகைய உயரிய சித்தர் நெறியைக் கடைபிடிக்க முதற்கண் அக, புற ஒழுக்கம் இன்றியமையாததாகின்றது. சித்தர் நெறியில் குறிப்பிடப்படும் அஷ்டாங்க யோகத்தில் முதல் இரண்டு படிநிலைகளில் இயமம்,நியமம் முன்னிற்கின்றன. இயமமானது புற ஒழுக்கமாகவும் நியமமானது அக ஒழுக்கமாகவும் விளங்குகின்றன. அக ஒழுக்கத்தில் மனதூய்மைக்குச் சித்தர்கள் முதலிடம் அளிக்கின்றனர். அகத்தியர்,

"மனமது செம்மை யானால் மந்திரஞ் செபிக்க வேண்டா;
மனமது செம்மை யானால் வாயுவை வுயர்த்த வேண்டா;
மனமது செம்மை யானால் வாசியை நிறுத்த வேண்டா;
மனமது செம்மை யானால் மந்திரந் செம்மை யாமே"

(ஞானம் 2)

என்றும், திருவள்ளுவர்,

"மனதுக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்
ஆகுல நிர பிற"

(குறள் : 34)

என்றும் கூறுகின்றனர். இப்படித் தூய்மை பெற்ற மனதில் தோன்றும் அன்பே மனிதனைச் சித்தர் நெறியில் உயரிய இடத்திற்கு இட்டுச் செல்லும். மனதில் அன்பு இல்லாதவர்க்கு இறையருளும் முக்தியும் இல்லை என்பதைப் பாம்பாட்டிச் சித்தர்,

"எள்ளளவும் அன்பகத்தில் இல்லா தார்மூர்த்தி
எய்வது தொல்லுலகில் இல்லை யெனவெ..."

(பாடல் 89)

என்று தமது பாடலின் வழி கூறுகின்றார்.

அக ஒழுக்கத்தோடு மனிதனின் செயல்பாடுகளிலும், அதாவது புறத்திலும் ஒழுக்கம் வேண்டும் என்று கூறும்போது அகத்தியப் பெருமான்,

"சத்தியமே வேணுமடா மனிதனானால்;
சண்டாளஞ் செய்யாதே தவறிடாதே:...."

(ஞானம் 9)

என்று அனைத்தையும் தன்னகத்தே அடக்கிய சத்தியத்தின் வழி மனிதனை வாழச் சொல்கிறார். இதனைத் தவிர்த்து சித்தர் நெறியில் யோகம் ஞானம் ஆகியன குறித்தும் பல அரிய செய்திகள் இருந்த போதிலும் இந்த அக புற ஒழுக்கங்களே இவற்றிற்கெல்லாம் முதற்படியாகின்றது. இதனைக் கடைபிடிப்பவன் உத்தமனாகின்றான். உத்தமனானவன் சித்தர் வழியில் செல்லத் தகுதி பெறுகின்றான்.

நிறைவு

இத்தகைய தொண்மை வாய்ந்த சித்தர் நெறி இக்காலத்தில் உள்ள மக்களிடையே புகழ் பெறத் தொடங்கியுள்ளதாகத் தெரிகின்றது. சித்தர்களின் பெயர்களில் தோன்றியிருக்கும் இயக்கங்களும், அவர்களின் பெயர்களில் நடைபெறும் நற்பணிகளும், அண்மையில் மலேசியாவில் நடந்த முதலாவது சித்தர் நெறி மாநாடும், மேலை நாடுகளில் பிரபலமாகி வரும் யோகாசனங்களும் ஓலைச் சுவடிகளில் தங்களின் துன்பங்களுக்கு நிவாரணம் தேடும் போக்கு போன்றவைகளே இவற்றிற்கு ஆதாரமாக விளங்குகின்றன. இக்கால மக்களின் இயந்திரத் தனமான வாழ்க்கை முறையும் அதிலிருந்து விடுபடுவதற்காக அவர்கள் மேற்கொள்ளும் வழிமுறைகளுமே இதற்குக் காரணம் எனலாம். ஆயினும் இது ஆரம்ப நிலையே. இன்னமும் சித்தர்களின் உயரிய நெறியை நிறைவாக மக்கள் அறிந்திருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் மலேசியாவில் விபரம் தெரிந்த பலரும் வெளிப்படாமல் இருக்கின்றனர் என்பதுவும் ஏற்கக் கூடிய செய்திதான். இதற்கு சுப்பிரமணியர் ஞானம் 500 இல் கூறியதைப் போல பூர்வ ஜென்ம வாசம் வேண்டும் என எண்ணத் தோன்றுகிறது. ஆனால் இந்தத் தொடக்கம் வளர்ந்து விரிந்து எதிர்காலத்தில் மக்களிடையே பரவி வளரும் என்பது திண்ணம்.



# ஞானசித்தர் அருணகிரிநாதர் விழா

சாந்தா காளியப்பன் PJK

தந்தைக்கு மந்திரத்தைச் சாற்றிப் பொருளுரைத்த மூன்று தமிழ் சக்தி மகன் முருகனால் ஆட்கொள்ளப்பபட்டவர் அருணகிரிநாத முனிவர். தன்னை ஆட்கொண்ட முருகப் பெருமானைப் பற்றிய புகழ் மாலைகள் பாடிய அருணகிரிநாத முனிவரைப் பற்றிய வரலாற்றுச் சுவடிகள் நம்மிடையே அதிகம் இல்லை. இவர் பதிதிருவண்ணாமலையில் தோன்றியதாக நம்பப்படுகிறது. இளமையில் தமக்கு நேர்ந்த பிணியின் வன்மையால் உயிர் நீங்கத் துணிந்தவரைத் தடுத்தாற் கொண்டவன் வள்ளி மணவாளன்.

'சும்மா இரு சொல் அற' என்ற உபதேசம் பெற்ற அருணகிரிநாத முனிவர் திருப்புகழ், திருவகுப்பு, கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, வேல் விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம், ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

பக்தி மார்கத்தை மாணிடர்க்குப் புகட்டிய நாயன்மார்களும் ஆழ்வார்களும் மறைந்த பின்னர், சைவ, வைணவ சமயத்தைச் சார்ந்த அடியார்களுக்குள் ஏற்ற ஞானபேதமும் பூசல்களும் மக்களை மருளச் செய்தபோது, மெய்ப்பொருளின் தத்துவத்தை மக்களின் மனதில் ஊட்டியவர் உமையாள் மைந்தனின் அருள் பெற்ற அருணகிரிநாத முனிவர்.

கந்தன் புகழ் பாடிய அருணகிரிநாதருக்கு விழா எடுத்த பெருமை சித்தியவான் மக்களுக்கும் உண்டு என்பதில் ஐயமில்லை. 2002 ம் ண்டு சித்தியவானில் நடைபெற்ற கந்த சஷ்டி விழாவின்போது, சிவ ஸ்ரீ பிரகாஷ் குருக்கள் அருணகிரிநாத முனிவர் விழா எடுக்க வேண்டும் என்ற தனது எண்ணத்தைத் தெரிவித்தார். அவரின் எண்ணம் மிகச் சிறந்தது என்று தனக்கும் தோன்றியதால், அருள்நெறிச் செல்வர் திரு.மா.திருநாவுக்கரசு அவர்களும் சிவ ஸ்ரீ பிரகாஷ் குருக்களும், இணைந்து ஒரு குழுவினை அமைத்தனர்.

ஆனித்திங்கள் மூல நட்சத்திர நாளில் 2003ஆம் ஆண்டு சித்தியவான் அருள்மிகு சுப்பிர மணியர் ஆலயத்தில் முதன் முறையாக அருணகிரிநாதர் விழா நடத்தப்பட்டது. ஆனித் திங்கள் 27ஆம் நாள்,(11.7.20003) சித்தியவானில் அமர்ந்து அருள்தரும் அன்னை மஹா மாரியம்மன் ஆலயத்தில் இருந்து சிவஞானபானு அருணகிரிநாதர் திருவுருவம்பட ஊர்வலம் மங்கல இசையோடு அருள்தரு சுப்பிரமணியர் ஆலயம் வந்தடைந்தது. ஆலயத் தலைவர் திரு.R. கிருஷ்ணன் அவர்கள் மங்கல தீபமேற்றி, விழாவை இனிதே தொடக்கி வைத்தார். செல்வி ஹேமநந்தினி இரகுராமன் அவர்களின் பரதநாட்டியம் வந்தவர்களின் மனதைக் கொள்ளை கொண்டது. திருமதி சரஸ்வதி மசியா பிள்ளை அவர்களின் திருப்புகழ் பாடலோடு முதல் நாள் நிகழ்வு முடிவடைந்தது.

இரண்டாம் நாள் நிகழ்வில் அருணகிரிநாதர் வாழ்வும் வாக்கும் எனும் தலைப்பில் மலேசிய அர்ச்சகர் சங்கத்தின் தலைவர் ஆகம மணி, ஆகம பிரவீணா, சிவ ஸ்ரீ க.நா.இராமச்சந்திர சிவாச்சாரியார் அவர்கள் சொற்பொழிவாற்றினார். அதனை அடுத்து, சித்தியவான் கவிஞர்கள் மா.தமிழன்பன், கோ.முனியாண்டி, பை.மனஷரன் ஆகியோர் அருணகிரிநாத முனிவர் புகழ்பாடும் கவியரங்கத்தில் பங்கேற்றனர்.

இக்கவியரங்கத்தின் தலைவராக அருள்நெறிச் செல்வர் திரு.மா.திருநாவுக்கரசு பொறுப்பேற்றிருந்தார்கள். இரவு மணி ஒன்பது அளவில் 'திருப்புகழ் சிறப்பு' எனும் தலைப்பில் அருள்நெறிச் செல்வர் திரு மா.திருநாவுக்கரசு(எ) மா.தி.அரசு அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு, கேட்டோரின் செவிகளில் தேனாறு பாய்ந்ததுபோல் இருந்தது.

மூன்றாம் நாள் நிகழ்வு திருப்புகழ் ஓதும் விழாவாக அமைந்தது. அதனையடுத்து நாதஸ்வர கச்சேரியும் நடைபெற்றது. 'கூறும்படி யார்கள் வினை தீர்க்கும் குன்றுருவே வேல் முருகனின்' ஆலயத்தில் முருகன் புகழ்பாடிய வள்ளல் அருணகிரிநாதர் விழா சித்தியவான் மக்களின் மனதில் பக்திப் பரவசத்தை ஏற்படுத்தியது என்பதில் ஐயமில்லை. விழாவின் வெற்றிக்குப் பாடுபட்டவர்களுக்கும் பங்கேற்றவர்களுக்கும் ஆலயத் தலைவரும், செயலாளர் திரு அரங்கசாமி அவர்களும் நினைவு பரிசுகளையும் நன்றியையும் தெரிவித்துக் கொண்டனர்.

காளை வயதில் கனிகையரை நாடித் துன்பக் கடலில் தத்தளித்து, தன்னுயிரை மாய்த்துக் கொள்ளத் துணிந்தவர் அருணகிரிநாதர். அதன் பொருட்டு, திருவருளைத் திருக்கோயிலின் உச்சிக்கு ஏறினார். அங்கிருந்து குதித்தார். சேவற் கொடியோனின் திருக்கரங்கள் அவரைத் தாங்கிப் பிடித்தன. கருணைக் கடவுள் செந்திலாண்டவன், தம் புகழைப் பாடும்படி அருணகிரி நாதருக்கு ஆணை இட்டார். திருமுருகன் திருப்புகழைப் பாடிய அருணகிரி நாதருக்கு 2004ஆம் ஆண்டும் சித்தியவான் நகரில் இரண்டாவது முறையாக மூன்று நாள்கள் விழா எடுக்கப்பட்டது. ஆனித் திங்கள் 18ம் நாள்(2.7.2004) தொடங்கிய விழாவில், ஞான சித்தர் அருணகிரியாரின் திருவிக்ரக ஊர்வலம், சித்தியவான் சித்தி விநாயகர் ஆலயத்தில் இருந்து தொடங்கியது. பலநூறு முருக பக்தர்கள் புடைசூழ, அருள்மிகு சுப்பிரமணியர் ஆலயம் வந்தடைந்தது.

ஆலயத் தலைவர் திரு.R.கிருஷ்ணன் அவர்கள் மங்கல தீபமேற்றி விழாவைத் தொடக்கி வைத்தார். அதன் பின்னர், அருள் வள்ளல் அருணகிரிநாதர் சுவாமிகளின் திருவுருவப் படம் திறந்து வைக்கப்பட்டது. தொண்டர்மணி, திருமதி ருக்குமணி கிருஷ்ணசாமி அவர்கள் திருப்புகழ் பாடினார்கள். திருப்புகழைப் பாடப்பாட வாய் மணக்கும் என்பார்கள். தொண்டர்மணி அவர்கள் பாடியதைக் கேட்டவர்களின் மனமும் சில கணங்கள் மணக்கத்தான் செய்தது.

இரண்டாம் நாள் விழா திருப்புகழ் ஓதும் விழாவாக அமைந்தது. இருள் நீக்கும் வேல் வகுப்பு எனும் தலைப்பில் அலோர்ஸ்டார் டாக்டர் சொ.இராமசாமி அவர்களின் சொற்பொழிவு கதிர் வேலனின் கருணையை மக்களுக்குப் புரிய வைத்தது. 'திருப்புகழ்' எனும் தலைப்பில் மகாகவி டாக்டர் இரா.பாண்டியன் அவர்கள் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது. இக்கவியரங்கத்தில், திருப்புகழ் அருளமுதம் எனும் பாடுபொருளில் செந்துறைக் கவிஞர் எஸ்.கே. வடிவேலு அவர்களும், திருப்புகழ் இசையமுதம் எனும் பாடுபொருளில் சந்தக் கவிஞர் கா.உ.இளங்கோவன் அவர்களும், திருப்புகழ் தமிழமுதம் எனும் பாடுபொருளில் தென்மொழிக் கவிஞர் மாதவ.தமிழன்பன் அவர்களும் கவி பாடினர். இதே நாளில் மகப்பேறு மருத்துவ நிபுணர் டாக்டர் வ.ஜெயபாலன் அவர்கள் 'மந்திர மணிமாலை' எனும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார்.

மூன்றாம் நாள் விழாவில் திருமதி சரஸ்வதி மசியா பிள்ளை அவர்கள் திருப்புகழ் பாடல்களைப் பாடினார். 'சந்தப் புலவர்' அருணகிரி நாதர்' எனும் தலைப்பில் அருள்நெறிச் செல்வர் திரு.மா.திருநாவுக்கரசு (எ) அரசு அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினார். மலேசிய அர்ச்சகர் சங்கத்தின் தலைவர் ஆகமமணி, ஆகம பிரவீணா, சிவ ஸ்ரீ க.நா.இராமச்சந்திர சிவாச்சாரியார்(மலாக்கா) அவர்களின் சொற்பொழிவோடு ஈராயிரத்து நான்காம் ஆண்டின் அருணகிரிநாத முனிவர் விழா நிறைவடைந்தது.

சித்தியவான் அருணகிரிநாதர் திருச்சபையினரின் அயராத உழைப்பினால் முருகனின் திருவருளாலும் ஆண்டுதோறும் அருணகிரிநாத முனிவர் விழா நடத்தப்பட்டு வந்தது. 2006ஆம் ஆண்டு அருணகிரிநாதர் ஆராதனை விழா ஆனித்திங்கள் 25ம் நாள்(9.7.2006) கொண்டாடப்பட்டது. இவ்விழாவின்போது ஆன்மீகப் பால்குடம் ஊர்வலம் சித்தி விநாயகர் ஆலயத்தில் இருந்து புறப்பட்டு, அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயத்தை வந்தடைந்தது. இதில் 2000க்கும் மேற்பட்ட பக்தர்கள் கலந்து கந்தன் திருவருள் பெற்று இன்புற்றனர்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!

என்ற கந்தரனுபூதியை அருளிய அருணகிரி நாதர் விழா, நான்காம் ஆண்டாக மார்கழித் திங்கள் 15,16 ஆகிய நாள்களில் நடைபெற்றது.

தமிழ்க் கடவுள் முருகவேளின் புகழைத் தீந்தமிழில் பாடுவான் வேண்டி, ஆறுமுகன் தடுத்தாற் கொண்ட தனிமனிதன் அருணகிரிநாதர் விழா 2006ஆம் ஆண்டு சற்று மாறுபட்டு நடத்தப்பட்டது. மக்கள் தொண்டு மகேசன் தொண்டு என்பதற்கொப்பவும் தானத்தில் சிறந்தது இரத்த தானம் என்பதை உணர்ந்தும், 24.12.2006ஆம் நாளன்று சித்தியவான் காந்தி மண்டபத்தில் இலவச மருத்துவ முகாமையும் இரத்தான நிகழ்வையும் நடத்தினார்கள் சித்தியவான் அருணகிரிநாதர் திருச்சபையினர்.

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளாம், 15இல், மாலை மணி 6.30 அளவில் அருட்பெருஞ் சான்றோர் அருணகிரிநாதர் திருவிக்கிரமும் தமிழ் வேதம் திருப்புகழும் ஆலயத்தில் இருந்து மங்கல வாத்தியத்துடன் உள்பிரகாரமாக மண்டபத்தைச் சென்றடைந்தது.

பத்துமலை சிவானந்த ஆசிரமத்தைச் சேர்ந்த தவத்திரு ஸ்ரீ சுவாமி குகா பக்தானந்தா சரஸ்வதி அவர்கள் மங்கல தீபமேற்றி விழாவைத் தொடக்கி வைத்தார். பின்னர் அல்பா பெர்னாம் அருள்மிகு ஓம் ஸ்கந்த ஆசிரம அமைப்பாளர் சிவத்திரு ஸ்ரீ ஈசான் சிவம் சுவாமிகள் அவர்கள் அருணகிரிநாதர் படத்திறப்பு நிகழ்வினை நடத்தினார்.

சித்தியவான் அருணகிரிநாதர் திருச்சபையின் ஒருங்கிணைப்பாளர் அருள்நெறிச் செல்வர் திரு.மா.திருநாவுக்கரசு (எ) மா.தி.அரசு அவர்களின் வரவேற்புரையுடன் நிகழ்வு தொடர்ந்தது. பத்துமலை தெய்வீக வாழ்க்கைச் சங்க, சிவானந்த ஆசிரமத் தலைவர் தவத்திரு ஸ்ரீ சுவாமி குகா பக்தானந்தா சரஸ்வதி அவர்களின் ‘சும்மா இரு சொல்லற’ என்ற தலைப்பிலான ஆன்மீக சொற்பொழிவு மிகச் சிறப்பாக அமைந்தது.

அருணகிரிநாதர் விழாவில் தவறாமல் இடம்பெற்றுவரும் கவியரங்கத்தில் 2006ஆம் ஆண்டு கவியரங்கம் பொதுத் தலைப்பு அருணகிரிநாதர், என்பதாகும். கவியரங்கத்தின் தலைவராக கவிஞர் பை.மனஹரன் அவர்கள் சந்தப் புலவர் அருணகிரிநாதர் எனும் பாடுபொருளிலும், கவிஞர் சோ.முனியாண்டி அவர்கள் ஞானசித்தர் அருணகிரிநாதர் எனும் பாடுபொருளிலும் கவிதை பாடி வந்திருந்த பக்த மெய்யன்பர்களை மகிழ்வித்தனர். ஈப்போ மகப்பேறு மருத்துவ நிபுணர் டாக்டர் வ.ஜெயபாலன் அவர்கள் திருப்புகழ் அமிர்தம் எனும் தலைப்பில் ஆற்றிய சொற்பொழிவு பக்தர்களை மெய் மறக்கச் செய்து, அருணகிரிநாதரின் ஆழ்ந்த பக்தியில் திளைத்தனர்.

இரண்டாம் நாள் நிகழ்வில் திருப்புகழ் ஓதும் போட்டி நடைபெற்றது. அதோடு,

வர்ணம் தீட்டும் போட்டியும் நடத்தப்பட்டது. மதியம் 12.00 மணியளவில் 'தித்திக்கும் திருவகுப்புத் தேன்' எனும் தலைப்பில் சித்தியவான் அருணகிரிநாதர் திருச்சபையின் ஒருங்கிணைப்பாளார் அருள்நெறிச் செல்வர் திரு.மா.திருநாவுக்கரசு(எ) மா.தி. அரசு அவர்கள் சொற்பொழிவினை நிகழ்த்தினார்கள்.

'கௌமாரம்' இணையத்தள ஆசிரியர்கள் திரு. சேந்தன், செல்வி வள்ளி ஆகியோரின் திருப்புகழ் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது. 'அருணகிரிநாதரும் திருப்புகழும்' எனும் தலைப்பில் மலேசிய இந்து சங்க சமயப் பகுதித் தலைவர் டாக்டர் பாலகிருஷ்ணன் கந்தசுவாமி அவர்கள் சொற்பொழிவு ஆற்றினார்.

அருணகிரிநாதர் விழா அருள் ஆர்வலர்கட்கு நினைவுப் பரிசு வழங்கப்பட்டது. அருள்மிகு சுப்பிரமணிய ஆலய தலைமைக் குருக்களும், சித்தியவான் அருணகிரிநாதர் திருச்சபையின் ஆலோசகருமான சிவ ஸ்ரீ பிரகாஷ் குருக்களின் நன்றியுரையோடு 2006ஆம் ஆண்டு அருணகிரிநாதர் முனிவர் விழா நிறைவடைந்தது. இவ்விழாவின்போது திரு.K.சுப்பிரமணியம் வெங்கூட்டம்மாள் குடும்பத்தினர் (வோம் கறி ஹவுஸ்) காலை சிற்றுண்டியையும் திரு.G. இரகுநாதன் ஹேமநந்தினி குடும்பத்தினர்(ஈப்போ) மதிய உணவையும், திரு M.வெங்கட்ராமன் கிருஷ்ணவேணி குடும்பத்தினர்(சித்தியவான்) இரவு சிற்றுண்டியையும் வழங்கி பக்தர்களின் வயிற்றுப் பசியைப் போக்கினர்.

சித்தியவான் நகரில் பக்தியோடு கூடிய கலை, பண்பாட்டு நிகழ்ச்சியாக நடந்து வருகிறது இந்த அருணகிரிநாதர் விழா. தரிகெட்டு திரியும் இளையோரை இழுத்துப் பிடிக்கும் பற்றுக் கயிறாக அமைந்திருக்கின்ற இவ்விழாவினை ஆண்டுதோறும் நடத்த அருணகிரிநாதர் திருச்சபையினர் ஆர்வம் கொண்டுள்ளது போற்றுதற்குரியது.

முருகனைப் பற்றிய துதிப்பாடல்கள் அனைத்தையும் தொகுத்து வைத்துப் பார்த்தாலும் அருணகிரிநாதருடைய திருப்புகழ் முதலியவற்றிற்கு ஈடாகச் சொல்ல முடியாது என்கிறார் கி.வாஜகந்தன்(திருப்புகழ் திரட்டு).

முருகன், கந்தன், மயில் வாகனன், ஆறுமுகன், தண்டாயுதன் என எண்ணற்ற பெயர்களில் தன் தாழ் பணிபவர்களை பன்னிரு கரங்களால் பற்றி வாழ வைக்கும் எம் தமிழ்க் கடவுள் சுப்பிரமணியனின் புகழ்பாடிய அருணகிரிநாதர் புகழ் புவி உள்ளவரை வாழும். அருணகிரிநாத முனிவர் விழா எடுக்க வேண்டும் என்ற நல்ல இறைச் சிந்தனையில் அயராது உழைத்து வரும் சித்தியவான் அருணகிரிநாதர் திருச்சபை ஒருங்கிணைப்பாளர் அருள் நெறிச் செல்வர் திரு மா.திருநாவுக்கரசு(எ) மா.தி.அரசு அவர்கள், ஆலோசகர் திரு பிரகாஷ் குருக்கள், திருச்சபை நிர்வாகத்தினர் ஆகியோருக்குத் தந்தருள வேண்டும்.

இருவினை யஞ்ச வருவினை கெஞ்ச
இருள் பிணி துஞ்ச மலமாய
எனதிடர் மங்க வுனதருள் பொங்க
இசை கொடு துங்க புகழ்கூறித்
திருமுக சந்தர முருகக் டம்ப
சிவசுத கந்த குகவேல
சிவ சிவ என்று தெளிவுறு நெஞ்சு
திகழந டஞ்செய் கழல் தாராய்;

-ஓம் முருகா-



அருள்நெறிச் செல்வர் திரு திருநாவுக்கரசு (எ) மா.தி. அரசு அவர்கள்
அருணகிரிநாதர் திருச்சபையினரால் கௌரவிக்கப் படுகிறார்.




9-7-2006ஆம் ஆண்டு அருணகிரி நாதர் ஆன்மீகப் பால் குட
ஊர்வலத்தில் பிரகாஷ் குருக்கள் தலைமையில்
கலந்து கொண்ட பக்த பெருமக்கள்



2003 ஆம் ஆண்டு சித்தியவான் மஹா மாரியம்மன் ஆலயத்தில் இருந்து அருணகிரிநாதர் சுவமிகளின் திருவுருவப் படம் ஊர்வலமாக அருள்மிகு சுப்பிரமணியர் ஆலயத்திற்கு எடுத்துச் செல்லப் படுகிறது



அருணகிரிநாதர் விழாவில் பரதம் ஆடிய ஹேமாநந்தினி இரகுராமன் அவர்கள்



திருப்புகழ் ஓதும் போட்டி தொடர்பாக அருணகிரிநாதர் திருச்சபையின் ஒருங்கிணைப்பாளர் அருட்பணிச் சித்தர் திரு.மா.திருநாவுக்கரசு (எ) மா.தி. அரசு, கு. பிரகாஷ் குருக்கள், ஆசிரியர் திரு மு.தஞ்சப்பன் ஆகியோருடன் விவாதிக்கும் திருப்புகழ் ஓதும் போட்டியின் நீதிபதிகள்



24.12.2006 அன்று நடத்தப்பட்ட இரத்ததான நிகழ்வில் கலந்து கொண்டவர்கள்.



2003 ஆம் ஆண்டு அருணகிரிநாதர் விழாவில் கலந்து கொண்ட பக்த பெருமக்கள்



நாதஸ்வர இன்னிசைப் போட்டியின் போது அருணகிரி நாதர் திருவுருவப் படத்திற்கு தீப ஆராதனை காட்டப் படுகிறது



தவத்திரு ஸ்ரீ சுவாமி குகா பக்தானந்தா சரஸ்வதி அவர்கள், தமக்கு அணிவிக்கப்பட்ட மலர் மாலையை அருள் நெறிச் செல்வர் திரு. மா. திருநாவுக்கரசு (எ) மா.தி.அரசு அவர்களுக்கு அணிவித்து மகிழ்கிறார்.



வர்ணம் தீட்டும் போட்டியில் கலந்து கொண்ட சிறுவர்களும் பொறுப்பாளர் ஆசிரியை திருமதி. அ. பரமேஸ்வரி



# அவனி போற்றும் அருட்கவி

பேராசிரியை விசாலாட்சி சுப்பிரமணியம்
துணைமுதல்வர், பாத்திமாக் கல்லூரி, மதுரை

இருண்டிருந்த உலகில் இன்று எங்கு நோக்கினும் மின்விளக்குகள். மனிதன் வாழ்வில்தான் எத்தனை எத்தனை மாற்றங்கள்! அம்புலி! அம்புலி! வா வா! என அன்னையர் பாடி அடைய முடியாத நிலவை மனிதன் அடைந்துவிட்டான். ஒருவன் இதயத்தை எடுத்து மற்றொருவனுக்குப் பொருத்தும் ஒப்பற்ற சாதனைகள் புரிந்துவிட்டான். கணநேரத்தில் கணித்துச் சொல்லும் கணிப்பானைக் கண்டறிந்துவிட்டான். இருந்த இடத்தில் இருந்து கொண்டே உலகில் எங்கெங்கோ நடக்கும் நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ளும் கணிப்பொறியையும் கண்டுபிடித்துவிட்டான். ஆயின் இவ்வளவும் தெரிந்த மனிதனுக்கு மனிதனாக வாழமட்டும் தெரியவில்லை. மனிதன் மனிதனாக வாழ, அதையும் தாண்டிப் புனிதனாக வாழ்ந்து சிறக்க, ஆன்மீக நெறியைத் தம் அனுபவத்தோடு கவிதைகளில் வடித்த கவியரசு கண்ணதாசன், மலையரசி அருளாலே, கவிதைத் தருவைக் கருவிலேயே பெற்ற அருட்கவி.

சிறுகூடல்பட்டியிலே பிறந்த சிங்கார முத்தையாதான் கவியரசர் கண்ணதாசன்.அவர் இளமையிலேயே இறையுணர்வு பெற்றிருந்ததை,

“பத்துவய தானதொரு
பாலகன்உன் சந்நிதியில்
பாடியதும் நினைவில் இலையோ
முத்து என இட்டபெயர்
முத்தாக வேண்டுமென
முறையீடு செய்ததிலையோ”

என அவர் பாடிய அடிகள் வெளிப்படுத்துகின்றன. இடையில் நாத்திக உணர்வு அவரிடத்தில் குடிகொண்டது பின்னர் அதற்காக,

“நல்லறிவை உந்தனருள்
தந்ததென எண்ணாமல்
நாத்திகம் பேசி நின்றேன்
நடைபயிலும் சிறுவன் ஒரு
கடைவைத்த பாவனையில்
நாற்புறமும் முழிக்கிவந்தேன்”

என வருந்திப் பாடியவர். கண்ணதாசன்பால் இயல்பாக இடம்பெற்றிருந்த இறையுணர்வு, நாத்திக உணர்வுடன் கூடிய அரசியல் சார்பால் அடங்கியிருந்ததே ஒழிய அடியோடு அற்றுப் போய்விடவில்லை. மீண்டும் இறையுணர்வு தழைத்தோங்க ஞானச் சித்தராய் உணர்ந்து அனுபவித்து வெளிப்படுத்திய கவிதைகள் ஏராளம் !

கண்ணதாசன் கவிதைகளில் காணப்படும் இறை உணர்வு இயல்பானது. எக்காலத்தில் உள்ளுள் உணர்வாய் இயங்கிக் கொண்டிருப்பது என்பதை அவர் பூண்டுள்ள ‘கண்ணதாசன்’ என்னும் புனைப்பெயர் உறுதி செய்கிறது.

‘இறைவன் ஒருவன் உளன்’ என்னும் உண்மையை நிறுவிக் காட்டும் முயற்சி மட்டுமன்றி அவ்விறைவனிடத்தில் ஈடுபாடு கொள்வதற்கும், அருளைப்

பெறுவதற்கு மக்கள் மனதைத் தூண்டவல்ல கூறுகள் பலவும் அவர் கவிதைகளில் இடம்பெற்றுள்ளன.

ஆத்திகம், நாத்திகம் ஆகிய இரண்டையும் விளக்க உரைத்தல், இறைவன் எழுந்தருளியுள்ள திருப்பதிகளைக் கூறித் தன் நிலையையும் செப்பல், இறைவனின் படைப்புத் திறம், ஆற்றல், அழகு ஆகியவற்றை வியத்தல், அறியாமையால் இழைத்த தவறுகளுக்கு இரங்கல், உலகியலிலேயே உழன்ற துன்பநிலையைச் சுட்டல், இல்லறத்தில் இறையுணர்வின் புனிதம் கண்ட அனுபவத்தைக் கூறல் எனப் பல்வேறு வகையான கூறுகள் கவிதைகளில் காணப்படுகின்றன. ஐயப்பாட்டு உணர்வாகவும், எதிர்மறை உணர்வாகவும், இறைநம்பிக்கைகள் வடிவம் தாங்கியுள்ளன.

"எல்லையில்லாத் துயர்தீர
இறைவன் வர வில்லையெனில்
'இல்லை அவன்' என்பாரை
இறைவன் என நாம்துதிப்போம்"

என்ற கவிதை இதனை உறுதிப்படுத்துகின்றது.

"செல்வம்வரு மாயின் ஒரு
திருக்கோயில் கட்டியுனைச்
சேவிப்பேன் வண்ண மயிலே "

மங்காத செல்வம் எனக்கள்ளித்
தினமும் தருவ வாயேல்
நல்வழியில் வாழ்ந்திருப்பேன் நான்!"

என, கடவுட்பணி செய்வதற்கும், நல்வழியில் வாழ்வதற்கும் மட்டும் பொருள் வேண்டும் எனப் பக்திமனம் வரம் வேண்டுகிறது.

சின்னஞ்சிறு சக்கரத்தில்
சீவன்களைச் சுற்றவைத்து
தன்னை மறந்தே இருக்கும் ஒருவன் அவனைத்
தழுவிக் கொண்டால் அவன்தான் இறைவன்"

என்று மறைந்திருக்கும் பரம்பொருளாய் உள்ள இறைவனின் இயல்பைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

"உருவுக்குள்ளும் உருவை வைத்தவன்
கருவுக்குள்ளும் கருவை வளர்த்தவன்
இருளில் ஒளியை மறைவில் வைத்தவன்
ஒளியில் இருளை அருகில் வைத்தவன்"

என இறைவனின் இயல்பை விவரித்துப் பாடியுள்ளார்.

இறைவன் என்பவன் மறைபொருள் அல்ல. நம் உணர்வின் வெளிப்பாடே என்ற புதுத் தத்துவத்தைத் தம் கவிதையில் வெளிக் கொணர்கிறார்.

மதிப்பற்ற இவ்வுலகம் செம்மையுற வேண்டுமானால் இறைவனின் ஆளுமையை முக்கியம். அந்த ஆளுமையை மனிதன் தனக்குள் புரிந்து கொண்டால், அதுதான் இவ்வுலகை உயிர்ப்பிக்க வந்த இறைவன் என்கிறார்.

"பூஜ்ஜியத்துக்குள்ளே ஒரு
ராஜ்ஜியத்தை ஆண்டு கொண்டு
புரியாமலே இருப்பான் ஒருவன் - அவனைப்
புரிந்துகொண்டால் அவன்தான் இறைவன்"

மாயையிலிருந்து இறைவன் உலகத்தைப் படைத்தான் என்பது தத்துவக் கோட்பாடு. மாயையால் உருவான உலகத்துக்குள்ளே ஒரு ராஜ்ஜியத்தை ஆண்டு கொண்டு, சாதாரண மக்களால் புரிந்து கொள்ளப் படாதவனாக இருப்பவன் ஒருவன். அவனைப் புரிந்து கொண்டால் அவனே இறைவன் என்பதை இப்பாடலில் விளக்குகிறார்.

"உள்ளத்தின் உள்விளங்கி
உள்ளுக்குள்ளே அடங்கிட
உண்டென்று காட்டி விட்டான் ஒருவன் - ஒரு
உருவமில்லா அவன்தான் இறைவன்"

என்று இறைப்பொருள் இருக்கும் இடத்தை உணர்த்துகிறார்.

இறைவனைச் சந்தித்து ஒவ்வொரு கேள்வியாகக் கேட்க, ஒவ்வொன்றிற்கும் இறைவன் விடை சொல்லிக் கொண்டே வருவதாகக் கற்பனை செய்கிறார் கவியரசர்.

படிப்பு என்றால் யாது எனக் கேட்கப் படித்துப் பார்க்கச் சொல்கிறான் இறைவன். மனையாள் சுகத்தை அறிய மணந்து பார்க்கவும், வறுமையை அறிய வாடிப் பார்க்கவும், பிள்ளையை அறியப் பெற்றுப் பார்க்கவும், பிறப்பை அறியப் பிறந்து பார்க்கவும் இறைவன் சொல்ல,ஒவ்வொன்றையும் அனுபவித்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டுமெனில் ஆண்டவனே! நீ ஏன் ? எனக் கவிஞர் கேட்க, ஆண்டவன் சற்றே அருகில் நெருங்கி,அனுபவம் என்பதே 'தான்' எனச் சொல்வதாகக் கவிதையை அமைக்கிறார். எனவே, சொல்லும் ஒவ்வொரு சொல்லிலும்,செய்யும் ஒவ்வொரு செயலிலும் இறைவன் இருக்கிறான் என்ற உண்மையை அற்புதமாகக் கவியரசர் காட்டிச் செல்கிறார்.

கவியரசர் கண்ணதாசன், சிவனைச் சிந்தையில் இருத்தியவர்; சக்தியை நித்தமும் போற்றியவர்; விநாயகரை வந்தனை செய்தவர்; முருகனை மனம் உருகித் துதித்தவர்; திருமாலை ஒரு போதும் மறவாதவர்; கண்ணனைக் கசிந்துருகிப் பாடியவர்; ஏசுவை ஏற்றிப் போற்றியவர்; அல்லாவை அன்போடு தொழுதவர்;புத்தர் புகழ் பாடியவர்,

"பக்திப் பெருக்கில் எந்தன் ஊன்உருக- அந்தப்
பரவசத்தின் உள்ளே உயிர் உருக
சத்தியெல்லாம் திரண்டு சிவம் பெருக- எந்தன்
சந்ததியே உந்தனுக்கு அடி பணிய- இறைவா
சித்தமெலாம் எமக்கு சிவ மயமே"

என்ற பாடல் அவரது சிவபக்திக்கு ஓர் எடுத்துக் காட்டு.

மதுரையிலே மீனாட்சியாக, காஞ்சியிலே காமாட்சியாக, காசியிலே விசாலாட்சியாக, நெல்லையிலே காந்திமதியாக, தில்லையிலே சிவகாமியாக, திருக்கடவூரிலே அபிராமியாக, சமயபுரத்திலே கருமாரியாக, ஊர் மாறி, பேர் மாறி, உரு மாறி, கரு மாறி இருந்தாலும் ஓம் சக்தி என்றே உரைக்கப்படும் என்ற உண்மையை உலகிற்கு உணர்த்தியவர்.

அற்புதக் கீர்த்தி வேண்டின், ஆனந்த வாழ்க்கை வேண்டின், நற்பொருள் குவிதல் வேண்டின், நலமெலாம் செழிக்க வேண்டின் கற்பக மூர்த்தியின் பொற்பதம் பணிந்தால் போதும் என்பதை எடுத்துக் காட்டியவர்.

"வம்சத்துக்கொருவன் ரகுராமன்
மதங்களை இணைப்பதில் சிவராமன்
மூர்த்திக்கு ஒருவன் ராமன்
முடிவில்லாதவன் அனந்தராமன்
ராமஜெயம் ராமஜெயம்
நம்பின பேருக்கு ஏது பயம்
ராமஜெயம் ராம ஜெயம்
ராமன் கைகளில் நான் அபயம்
ராம்ராம் ராம்ராம் ராம்ராம்"

என இராம நாமத்தின் பெருமையைப் புலப்படுத்தியவர்.

"பாஞ்சாலி புகழ்காக்கத் தன்கை கொடுத்தான்-அன்று
பாரதப் போர்முடிக்க சங்கை எடுத்தான்
பாண்டவர்க்கு உரிமையுள்ள பங்கைக் கொடுத்தான் -நாம்
படிப்பதற்கு கீதை எனும் பாடம் கொடுத்தான்"

என மகாபாரதக் கதையை நான்கே அடிகளில் சுருக்கிக் கொடுத்தவர். பனியது; நதியது; மலையது; கடலது. சகலமும் முருகன் கருணையில் வருவது எனக் கந்தன் கருணையை உலகிற்கு உணர்த்தியவர்.

உலகில் தலைசிறந்த நூலாகக் கருதப்படும் விவிலியத்தை விரும்பிக் கற்று, ஏசுபிரானின் மேன்மைகளையும், மதியம்மையின் மாண்புகளையும், கிறித்துவ மதத்தின் கீர்த்துகளையும் புகழ்ந்து பாடியவர்.

உலகமக்கள் அனைவரையும் இறைவன் குழந்தைகளாகக் கருதி, எல்லாரும் உடன்பிறப்புக்கள் என வலியுறுத்துகிற முகமதியக் கோட்பாட்டை,

"வானுக்குத் தந்தை எவனோ
மண்ணுக்கு மூலம் அவனே
அனாதை யாருமல்ல அவனேதான் தந்தை
அல்லா பெற்ற பிள்ளை யாரும் "

என்ற வரிகளின் வாயிலாகப் புலப்படுத்தியவர்.

எல்லாவற்றிற்கும் மேலாக, இறைவன் ஒருவனே என்ற கொள்கை உடையவர், பல்வேறு பெயர்களால் நதிகள் அழைக்கப்படினும், அலைகடலுக்குள் சங்கமிக்கும் ஒருமித்த நிலைபோல, பல்வேறு பெயர்களால் இறைவன் அழைக்கப்படினும் பரிபூரண இறைநிலை என்பது ஒன்றே என்பதை

" இராமன் என்பது கங்கைநதி
அல்லா என்பது சிந்துநதி
யேசு என்பது பொன்னிநதி
நதிகள் பிறக்குமிடம் பலவாகும்
எல்லாநதியும் கலக்குமிடம் கடலாகும் "

என்ற அடிகளில் தெளிவுற எடுத்துக் கூறியவர்.

சமயச் சான்றோர் ஆற்றிய அரிய செயல்களும், எட்டாத உயரிய நிலையில் இருந்த உயர்தத்துவங்களும் உணர்த்திய இறைமையைத் தம் எளிய இனிய கவிதைகளின் வாயிலாக எல்லார் மனதிலும் புகுத்திய பெருமைக்குரியவர். இறைவன் எங்கிருக்கிறான் என்பதனைச் சுட்ட முனையும் கவிஞர்,

" என்கை கோவில் அவனுள்ளான்
என்நா முழுதும் அவனில்லம்
என் மனமெல்லாம் அவன் கோவில்
என்னில் நானாய் அமர்ந்துள்ளான் "

என்று, எளிதாக அவனிருக்கும் இடங்களை வடித்துத் தருகின்றார்.

மாசில்லா மனத்துடன் இறைவழிபாடு அமைதல் வேண்டும். இது தவிர்த்த ஏனைய வழிபாடுகள் அனைத்தும் உண்மையான வழிபாடுகள் ஆகாது என்பதை வலியுறுத்துகிறார். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் பக்தி ஏமாற்றுத்தனம் என்கிறார்.

வாழ்வில் ஏற்படும் துன்பங்கள், இன்பங்கள், வெற்றிகள், தோல்விகள், நிலையாமை, இறப்பு போன்ற நிகழ்வுகளின் நீட்சியில் கடவுள் சிந்தனை அல்லது தமக்கும் மேலான ஓர் ஆற்றல் இருப்பது பற்றிய சிந்தனை மனிதனிடம் உதிப்பதை இவருடைய கவிதைகள் உணர்த்துகின்றன.

மனிதரின் சொல்லாகவும், செயலாகவும், உள்ளமாகவும், உயிராகவும் இறைவன் இருக்கிறான். மனிதன் தன்னுடைய வாழ்வில் கண்டுணரும் அனுபவ உண்மையே இறை உண்மையாகும் எனக் குறிப்பிடும் இவர், தம் வாழ்வில் உணர்ந்தவற்றை, உணர்வுக்கு எட்டியவற்றை, அறிவின் துணைகொண்டும், தத்துவ ஞானிகளின் நூல்களைக் கற்றும் சமயப் பெரியார்களின் தொடர்பாலும் விளங்கிக் கொண்டு தம் வாழ்வின் அனுபவ உணர்வின் ஊடே பக்தி நெறியை இறைமைத் தத்துவங்களில் எளிமையாகப் புகுத்தி விளக்குகிறார்.

கவியரசர் கண்ணதாசன், தாம் இயற்றிய கவிதைகள், திரைஇசைப் பாடல்கள், கட்டுரைகள், அர்த்தமுள்ள இந்துமதம் போன்ற நூல்கள் வழி பல பொருள்களைப் பற்றிப் பேசியிருந்தாலும், அனைத்திலும் கடவுள் தத்துவங்களும், இறை உணர்வும் ஊடாடி இருப்பதனாலே, அவருடைய கருத்துப் பதிவுகள் அவரை ஓர் அருட்கவியாகவே பறைசாற்றுகின்றன. அவனி போற்றும் அருட்கவி கண்ணதாசன் தமிழ் மொழிக்குக் கிடைத்த அழியாத சொத்து.

# அழகன் முருகனின் ஆயுதங்கள்

"முருகனின் ஆயுதங்கள்" என்பது முருகப் பெருமானின் படைக் கலங்கள் என்ற பொருளில் வழங்குவதாகும். சூரன் முதலிய அசுரர்களை வென்று வாகை சூட, கந்தப் பெருமான் கொண்ட பல்வேறு போர்க் கோலங்களில் அவரது கரங்களில் கொண்ட படைக்களங்களே ஆயுதங்களாக அமைந்து உள்ளன. அப்பெருமானதுகரங்களில் திகழும் அனைத்துமேஆயுதங்கள் அல்ல. உதாரணமாக ஜபமாலை, கமண்டலம், கரும்பு வில்,மலரம்பு, தாமரை, நீலோத்பலம், பூரணக்கும்பம், சுரவம் முதலானவற்றை வெவ்வேறு வடிவங்களில் காரணகாரியம் கருதி அவரது கரங்களில் ஏந்தியுள்ளார். பன்னிருக் கரமுடைய பெருமான் ஆதலால் மற்ற எந்தக் கடவுளருக்கும் இல்லாத வகையில் அதிகமான எண்ணிக்கையில் ஆயுதங்களை உடையவர் இவரே.

முருகப் பெருமானது பல்வேறு வடிவங்களைப் பற்றி விவரிக்கும் குமாரதந்திரம், ஸ்ரீதத்வநிதி, தியான ரத்னாவளி முதலான சிற்ப நூல்களில் அவரது ஆயுதங்களைப் பற்றிய விவரங்களையும் அறிய முடிகிறது. தணிகைப் புராணத்தில் முருகனது வடிவங்களைப் பற்றி அகத்தியர் அருள்பெறுபடலத்தில் ஆயுதங்களைப் பற்றிய விவரம் அறிய முடிகிறது.

அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் முதலான நூல்களில் முருகனது படைக் கலங்களைப் பற்றிய விவரங்கள் காணக் கிடக்கின்றன. இனி கந்தப் பெருமானது படைக்கலங்களைப் பற்றி விரிவாக நோக்குவோம்.

முருகப் பெருமானிடம் அமைந்துள்ள வேலாயுதமே ஞானசக்தியாகும். வெல்லும் தன்மையுடையது வேல். எல்லாவற்றையும் வெல்வது அறிவாற்றல், அறிவானது ஆழமும், அகலமும் கூர்மை உடையது. "ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே" என்று இறைவனைப் போற்றுகின்றார் மாணிக்கவாசகர். வேலின் வடிவமும் இத்தகையதே. முருகனின் ஞானவேலுக்குச் சக்தி என்ற பெயரும் உண்டு. "சக்தி தான் வடிவேதென்னி தடையிலா ஞானமாகும் என்பது சிவஞான சித்தியார் வாக்கு".

ஞானமே அஞ்ஞானத்தை வெல்ல வல்லது. ஆதலிம் ஆணவம், கன்மம், மாயை எனும் மலங்களாகிய சூரபதுமன், சிங்கமுகன், தாருகன் என்னும் அசுரர்களை அழித்தொழித்து "ஞானமயம்" ஆகிய வேலே யாவருக்கும் நலம் புரிந்தது. வேல் வஞ்சர்க்கு வஞ்சனை செய்யும்; அடியவர்க்கு உதவும்; அது ஐந்தொழில் செய்யும் என்பதையெல்லாம் திருப்புகழில் காட்டுகிறார். அருணகிரியார். வேலாயுதத்தை 'உடம்பிடித் தெய்வம்' என்று கந்தபுராணம் போற்றும். சக்தி வேலானது ஊறு கூரிய பகுதிகளையுடையதாகவும் தகட்டு வடிவிலும் அமைந்ததாகும் என்பர். இதனை நடுவில் பிடித்து எறிவது வழக்கம்.

1. **கோழிக் கொடி**

முருகனுக்குக் கொடியாக விளங்குவது கோழி. கோழிக்கு சேவல்(குக்குடம்) என்றும் பெயர். சேவலாகிய கோழி ஒளியை விரும்புவது. எனவே அது அறியாமை இருளைப் போக்கி மெய்யறிவாகிய ஒளியைப் பரப்பும் முருகனின் கொடியாக விளங்குவது பொருத்தமாகும்.

வைகறையில் கோழி கூவுதல் ஓங்கார மந்திரத்தை ஒளிவடிவில் உலகுக்கு உணர்த்துவது ஆகும். எனவே கோழியை நாத தத்துவம் என்பர். நாதம் இல்லையேல் நானிலமே இல்லை. சேவல் நம் உயிருக்குக் காவல். சிவஞான வடிவாகவே சேவல் விளங்குகிறது.

முருகன் கோழிக் கொடியேந்தி நம்மை எல்லாம் சிவஞானப் பேரொளியில் துய்க்கச் செய்து அருளுகின்றார். திருச்செங்கோட்டில் முருகப் பெருமான். இடது கரத்தில் சேவலைப் பிடித்துள்ள அரிய அழகுக் கோலம் அருணகிரியார் மனத்தில் என்றும் நீங்காமல் அக்காட்சி வேண்டியே "சென்றே இடங்கள் கந்தா எனும் போது செஞ்சேவல் கொண்டு வரவேணும்" என்று செங்கோட்டு வேலனை வேண்டுவார். "குற்றமற்றவர் உள்ளத்தில் உறைவோனே! குக்குடக் கொடி தரித்த பெருமாளே" என்பார். மற்றொரு திருப்புகழில். கோழி அக்னி தேவனின் அம்சமாகும்.

**2. அங்குசம்**

இது யானையை அடக்கப் பயன் படுவது. இரும்பாற்செய்யப் பெற்ற வளைந்த மூக்கும், குத்தி அடக்கக் கூடிய ஒரு கூரிய நேரான பகுதியையும் உடையது. நீளமாக கழிகளில் செருகி இருப்பார்கள். திருமுருகாற்றுப்படையில் முருகப்பிரானது கரங்களில் ஒன்றில் "அங்குசம் கடாவ ஒருகை" என்று நக்கீரர் குறிப்பிடுவார்.

**3. பாசம்**

பாசம் என்பது பகைவர்களின் கையையும் கால்களையும் கட்டப் பயன்படும் ஒரு கயிறு அல்லது இரண்டு மூன்று கயிறுகள் சேர்த்து அமைந்ததாகும். எளிதில் அவிழ்க்கும் சுருக்கு முடிச்சு இடப்பட்டு இருக்கும். வள்ளிநாயகியை அடைய முருகன் எடுத்த வேடன் கோலத்தில் வில்லும் அம்பும் உண்டு.

**4. வில்**

மூங்கில், சிலை என்னும் மரம் முதலான வலைக்கூடிய நார் மரத்தால் செய்யப் பெறுவது வில். இந்த வில்லானதுஇரு தலையிலும் தோல் அல்லது நார்க் கயிற்றால் கட்டப் பட்ட நாண் இருக்கும். வில்லை வளைத்து நாணை இறுக்கக்கட்டி அதன் நடுவில் அம்பை வைத்து விடுவார்கள். எவ்வளவுக்கெவ்வளவு வில்லின் வளைவும் நாணின் உறுதியும் இழுத்துவிடுபவன் பலமும் இருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அம்பின் வேகமும், அது தைக்கும் வன்மையும் அதிகரிக்கும். நுனியில் விஷம் தோய்த்து வைப்பதும் உண்டு. அம்பு பட்டவுடன் இறந்து விடுவார்கள். அம்பின் நுனி பிறைமதி போன்ற அமைப்பிலும் இருக்கும். இதற்குப் இறையம்பு என்று பெயர்.

**5. அம்பு**

வில்லை வளைத்து எய்யப் பயன்படக் கூடியது அம்பு. நுனி கூரிய முள் போன்றது. நுனியை ஒரு கழியில் செருகியிரிப்பார்கள். நுனி இரும்பால் ஆகியது. அதன் வால் பாகத்தில் கழுகின் இறகுகளையும் மற்ற பறவை இறகுகளையும் கட்டியிருப்பார்கள். பெரும்பாலும் கழுகு இறகே இதற்குப் பயன்படும். இறகு கட்டுவதால் காற்றை ஊடுருவி விரைந்து செல்லும்.

**6. கத்தி**

பகைவரை அடிக்கவும் குத்தவும் பயன்படும் இந்த ஆயுதம் கைப்பிடியுடன் இருக்கும்.

**7. கேடயம்**

கத்தியின் வெட்டையும், குத்தையும் தடுப்பதற்காகப் பயன்படுத்துவது பலகையாலும் வலுவுள்ள காட்டெருமை, கடமா நீர்யானை, காண்டா மிருகம் இவற்றின் தோலாலும் தயாரிப்பார்கள். பல வடிவங்களில் சதுரம், நீளச் சதுரம், வட்டம், முக்கோணம் என்ற அமைப்புகளில் காணப்படுவது.

8. வாள்

இதற்கு கட்டுவாங்கம் என்றும் பெயர். இது நீலமான கத்தியாகும். போரில் பகைவர்களை வெட்டப் பயன்படுவது. இதில் ஒரு முனையுடையதும் இரு முனையுடையதும் உண்டு. குத்துக் கத்தியாகக் கூரிய நுனியை உடையதாக இருக்கும். பழங்கால மன்னர்கள் இடுப்பில் செருகியிருப்பதை வழக்கமாகக் கொண்டிருப்பார்கள்.

9. கோடரி

மரம் பிளக்கப் பயன்படும் கருவி போலப் பகைவரின் உடலைப் பிளக்க இது பயன்படும். இது இரும்பாலாகியது. வாய் கூர்மையாகவும் பின்புறம் கனமாகவும் இருக்கும். காம்பில் செருகப் பெற்று இருக்கும். 'பரசு' என்பதும் இடைப் போன்றே இருக்கும். ஆனால் வாய் சற்று வளைந்து கூரியதாக இருக்கும். இதுவும் காம்பில் செருகப் பெற்றிருக்கும். காங்கேய சுப்பிரமண்யர் என்ற வடிவில் 'பரசு' ஆயுதம் உள்ளதாகக் காட்டப்படுகிறது.

10. சூலம்

சிவபிரானுக்குரிய சிறப்பான படைக் கலம் சூலமாகும். இது மூன்று நுனிகளை உடையது. சுரை வரையிலும் எஃகு இரும்பால் செய்யப் பெற்று நீளமான மரக்கம்பில் செருகியிருப்பாரகள்.

11. கதை

திகிரி என்ற பெயரை உடைய கதை என்றவுடன் பஞ்சபாண்டவர்களில் பீமனது ஞாமகம் வரும் அல்லது ஆஞ்சநேயரின் கரத்திலுள்ள கதையும் பிரபலமான ஒன்று. இதற்கு குண்டாந்தடி என்ற பெயரும் உண்டு. பகைவர்களை அடித்து நொறுக்கப் பயன்படுத்துவது, கையை விட்டு அகலாதபடி காவலாக இருந்து உடையவரை பாதுகாக்கும் அருமையான ஆயுதம்.

12. சங்கம்

(சங்கு) திருமாலுக்கு உரியவிசேஷ ஆயுதம் வெற்றியை அறிவிக்கும். பகைவர்களை இதன் ஒலியை கேட்டதுமே அடங்கி ஒடுங்கச் செய்யும். இதில் பல வடிவங்கள் உள்ளன. திருமாலின் சங்கம் பாஞ்ச சன்னியம் என்று கூறப்படும்.

13. சக்கரம்

இதுவும் விஷ்ணுவுக்குரிய விஷேச ஆயுதம் ஆகும். இதன் அமைப்பு ஒன்று தேர் உருளை போன்றும் மற்றது வளையம் போன்றும் அமைந்திருக்கும் கும்பகோணம் அருகில் உள்ள அரிசிற்கரை புத்தூர் (அழகா புரத்தூர்) எனும் தேவாரம் பெற்ற திருத்தலத்தில் உள்ள முருகப் பெருமான் சங்கு சக்கரம் ஏந்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.

14. வஜ்ரம்

முருகப் பெருமானுக்குரிய முக்கியப் படைக்கலமான இது ஆயிரம் நுனிகளை உடையது. உறுதியான பொருள் எதுவாயினும் அதனை உடைக்கும் வல்லமை உடையது.

**15. தண்டம்**

நீளமான கைத்தடி, மரத்தாலானது. கந்து என்ற சொல்லுக்கு தண்டாயுதம் கொண்டவன் என்ற பொருளுண்டு.கந்தசுவாமி வடிவத்தில் பழநியில் தண்டம் ஏந்திக் காட்சியளிக்கிறார். சுவாமிமலை சுவாமிநாதப் பெருமானும் கந்தசாமி வடிவமே.

**16. உளி (டங்கம்)**

மரத்தைச் செதுக்கப்பயன்படும் கருவி முருகப் பெருமான் எக்காலத்திலும் மக்காத சூரன் என்னும் மரத்தைச் செதுக்கி மயிலும் சேவலுமாக மாற்றினான் அல்லவா! குமார தந்திரத்தில் குறிப்பிடப் பெறும். "சரவணபவன்" என்ற வடிவத்தில் பன்னிருக் கரங்களில் ஒன்றில் "உளி"யை வைத்துள்ளனர்.

**17. தோமரம் (உலக்கை)**

இந்த ஆயுதம் பகைவர்களைச் சாடப் பயன்படுவது. குமார தந்திரத்தில் குறிப்பிடப் பெறும் "தாரகாரி" (சூரபன்மனின் இளைய தம்பி தாரகாசுரனை வதைத்தவன் ஆதலால் முருப் பெருமானுக்கு தாரகாரி என்று பெயர்) என்று வடிவத்தில் உலக்கையை ஒரு கரத்தில் பிடித்துள்ளார்.

**18. கரும்புவில்**

இது கரும்பால் செய்யப் பெற்ற வில். இது சிறப்பாக மன்மதனுக்குரியது. பராசக்தி கையில் தரித்து உள்ள கரும்பானது குறிப்பிடத்தக்கது. யோகியாக இருக்கும் மற்றைய தெய்வங்களும் போகத்தை உண்டாக்க கரும்புவில் ஏந்தியிருப்பர். ஸ்ரீஇதத்வநிதியில் குறிப்பிடப் பெறும் சௌரபேய சுப்ரமண்யரின் கரங்களிள் ஒன்றில் கரும்புவில்லும் மற்றொன்றில் மரலம்பும் கொண்டதாகவும் காட்டுவர்.

**19. மரலம்பு (வல்லி)**

இதற்குப் புஷ்ப பாணம் என்றும் பெயர், தாமரை, அசோகு, மா, முல்லை, நீலம் என்று ஐந்து பூக்களால் ஆகிய பாணம். (இவற்றை மன்மதன் மக்களிடத்தில் காம நினைப்பூட்ட எய்வான்.)

**20. மணி**

பரநாதத்தை எழுப்பி ஆணவ இருள் அகன்று ஆன்மாக்கள் உய்ய இறைவன் திருக்கரத்தில் வைத்துள்ளார். இதுவும் ஒரு ஞானப்படை. "பாடின் படுமணி இரட்ட ஒரு கை" என்கிறார் நக்கீரர் திருமுருகாற்றுப் படையில். சரவணபவன் திருவுருவத்தில் பன்னிருக் கரங்களில் ஒன்றில் 'மணி'யை ஏந்தியுள்ளார்.

**21. ஜபமாலை**

இது ருத்ராஷை மாலை. சிருஷ்டித் தொழிலுக்குரிய பிரமனுடையது. முருகப் பெருமான் பிரணவத்திற்குப் பொருள் சொல்ல இயலாத பிரமனைச் சிறையிட்டு அவரது சிருஷ்டித் தொழிலைச் செய்யத் தொடங்கிய போது பிரமனுக்கு உரிய ஜபமாலையையும் கமண்டலத்தையும் கொண்டார். கந்தனுக்குரிய கவின்மிகு கோலங்களில் "பிரம்மசாஸ்தா" (பிரமனைத் தண்டித்தவர்) என்ற கோலத்தில் இரு கரங்களில் ஜப மாலையையும், கமண்டலத்தையும் ஏந்தி இருப்பார்.

22. கமண்டலம்

இதற்குக் கிண்டி என்ற பெயரும் உண்டு. இது தண்ணீர் வைத்துள்ள கலம். இது ஒரு மரத்தின் காயால் ஆகியது. அந்தணர்கள் தங்கள் நாட்கடன்களைக் கழிப்பதற்காக இதனை எப்போதும் வைத்து இருப்பார்கள், பிரம்மனுக்கு உரியது.இதுவும் அட்சமாலையும் ஆயுதங்கள் அல்ல. இதனைக் கொண்டு இன்னாருடைய திருவுருவம் என்றுர அறிய முடியும். தொண்டை நாட்டில் அமைந்துள்ள மிகப் பழமையான திருக்கோயில்களில் முருகப் பெருமான் "பிரம்மசாஸ்தா" திருக் கோலத்திலேயே காட்சி அளிக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

23. தாமரை

அழகும் இளமையும் கொண்ட வடிவிலே பால சுவாமியாகக் காட்சி அளிக்கும் முருகப்பிரான் வலக்கையில் தாமரை மலர் ஏந்து இருப்பார். மலர்களில் சிறந்ததும் உயர்ந்ததும் தாமரை மலராகும். இச்சா சக்தியாகிய வள்ளி எம்பெருமாட்டி கையில் தாமரை மலர் ஏந்தியிருப்பாள். திருச்செந்தூர் சுப்ரமண்யர் வலதுகையில் தாமரை மலர் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

24. சுருவம்

இது யாகத்தீயில் நெய்யிடுவதற்குப் பயன்படுவது. "ஒரு முகம் அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே" என்று திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் குறிப்பிடுவதற்கு ஏற்ப "அக்னிஞாத சுப்ரமணியர்" என்ற கோலத்தில் தெய்வீக யாகாக்னியை வளர்ப்பதற்கு ஒரு கரத்தில் சுருவமும் மற்றொரு கரம் ஒன்றில் நெய் (ஆஜ்ய) பாத்திரமும் கொண்டுள்ளார். இவ்வடிவம் இரண்டு முகங்களும் எட்டு கரங்களும் கொண்டுள்ள ஓர் அபூர்வமான அமைப்பாகும். இனி காங்கேய சுப்ரமணியர் என்ற வடிவில் ஒரு கரத்தில் பூரண கும்பம் ஏந்திய அமைப்பிலுள்ளார். வேதாரண்யம். அருகிலுள்ளார். வேதாரண்யம் அருகிலுள்ள கோடிக்கரை என்ற தலத்திலுள்ள 'அமிர்த கரை சுப்ரமணியன்' என்ற கோலத்தில் ஒரு கரத்தில் அமிர்த கலசம் ஏந்தி உள்ளது ஓர் அற்புதமான வடிவமாகும். அப்பெருமானை வழிபட்டு அமுதக் கலசத்தில் உள்ள ஞானத் தேனமுதைப் பெறலாம்.

இதுவரை கந்தப் பெருமானின் பல்வேறு வடிவங்களில் காணப்படும் பல்வேறு விதமான படைக் கலங்கள் (ஆயுதங்கள்) பற்றி அறிந்தோம். இதனைப் பல்வேறு தலங்களில் காட்சியளிக்கும் முருகப் பெருமானது அருட்கோலத்தில் தரிசித்து இன்புறலாம்.

# மலைபந்தம்

வெண்பா வேந்தன், கவிதா மணி, சித்திரப் பாவலர், கவிஞர்
வி.இக்குவனம்




## செய்யுள்

வீரத் திருவேவா வழ்வருள வேகமே
பூரணவா எம்கந்தா பூந்தமிழே – காரணனென்
நேயமிளிர் காவலா தக்க நேயனே
தாயே தமிழேவா தா

படமும் பாடலும்
வி. இக்குவனம், சிங்கப்பூர்
10-05-2008

# மலேசியாவில் ஆலயங்களும் சமய வளர்ச்சியும்

( பாலகிருஷ்ணன் கந்தசாமி )

**முன்னுரை**

அண்டமெல்லாம் குடி கொண்டிருக்கும் தெய்வம் சிறப்பாக மனித உடம்பில் வீற்றிருக்கின்றது. ஆனால், உடம்பினுள் இறைவன் எழுந்தருளியிருக்கிறார் என்னும் கோட்பாட்டை மக்கள் எளிதில் அறிந்து கொள்ள முடியாது. பாமரர்களுக்குப் பயன்படுதற் பொருட்டே ஆலயங்கள் அமைக்கப் பெற்றன. உலகிலும், உடலிலும் உள்ள தத்துவங்களை விளக்குவதற்கு ஆலயங்கள் எழுந்துள்ளன.

ஆலயங்கள் நமக்கு இறைவனை நினைவுபடுத்த ஏற்பட்டவை. தெய்வத்தை எப்போதும் நினைத்து இவ்வுடம்பிலேயே அவன் தங்கியிருக்கிறான் என்ற உணர்வை பெற்ற பக்குவம் உள்ளவர்களுக்கு ஆலயம் என்று ஒன்று வேண்டுவதில்லை தான்.

“கோவிலாவது ஏதடா? குளங்களாவது ஏதடா?
கோவிலும் குளங்களும் கும்பிடும்குளமதே
கோவிலும் மனத்துள்ளே குளங்களும் மனத்துள்ளே

என்று சிவவாக்கியர் எனும் சித்தர் பாடலாம். ஆனால், சாதாரண பாமர மக்களுக்குத் தெய்வம் இருக்குமிடம் என்று வேண்டும் என்பதை அறிந்து நம் முன்னோர்கள் ஆலயங்களை ஏற்படுத்தியுள்ளனர். ஆன்மீக வளர்ச்சிக்குப் பல விதங்களில் உதவும் பல கலைகள் ஆலயங்களிலேயே வளர்ந்தன. ஆலயம்தான் பண்பாட்டின் உயிர்நாடியாக இருந்து வந்திருக்கிறது.

ஒரு நாட்டை வழி நடத்தச் சட்டதிட்டங்கள் இருப்பது போல, ஆலயங்களைப் பரிபாலித்து நடத்தவும், பூசைகள் முதலியவற்றை எப்படிச் செய்யவேண்டும் என்று உணர்த்தவும், சட்டதிட்டங்களை நம் முன்னோர்கள் ஏற்படுத்தியுள்ளனர். அவைதாம், சுமங்கள். நம் இந்து சமயத்திற்கான வழிபாட்டு இடமாக ஆலயங்களைக் கட்டவும், அதற்கு வேண்டிய சாதனங்களை உபயோகப்படுத்தவும் முறைகள் இருக்கின்றன. இந்த முறைகளில் மெய்ஞ்ஞானமும் விஞ்ஞானமும் கலந்து அடியார்களுக்குப் பலனைத் தருகின்றன.

சமய கோடிகள் எல்லாம் தம் தெய்வம் எம் தெய்வம் என்று எதிர் வழக்கிட நின்ற பரம்பொருள் எதுவோ, அதை அடைய ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு வழியை வகுத்துக் கொண்டது. நம் சமயாச்சார்யர்களான நாயன்மார்களும் ஆழ்வார்களும் நமக்கு வழிகாட்டிகளாக வாழ்ந்துள்ளனர். திருக்கோயில்கள் இறை வழிபாட்டிற்கு இன்றியமையாத சாதனங்கள் என அறிவுறுத்தியதோடல்லாமல், தாங்களே பல தலங்களுக்குச் சென்று மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று இவற்றைத் தங்கள் பக்திப் பாடல்களில் போற்றிப் புகழ்ந்துள்ளனர்.

**ஆலயப் பாகுபாடு**

ஆலயங்கள் மூன்று வகையான சூழ்நிலைகளில் தோற்றுவிக்கப்படுகின்றன. அதாவது, மனிதர், தேவர், சுயம்பு என்று பாகுபடுத்துவர்.

1. அரசர்களோ மனிதர்களோ குடமுழுக்கும் செய்த ஆலயங்களை மனிதப் பிரதிஷ்டை சேத்திரம் என்பர்.
2. ஏதோ ஒரு காரணத்திற்காகவோ உலக நலனைக் குறித்தோ தேவர்களும் ரிஷிகளும் இறைவனுக்கு உருவம் அமைத்துப் பிரதிஷ்டை செய்தது, தேவபிரதிஷ்டை சேத்திரம் என்பர்.

3. யாராலும் உருவாக்கப்படாமலேயே தானே உருவான மூர்த்தம் உள்ளவை சுயம்பு சேத்திரம் என்பர். பின்னர் அவ்விடத்தில் ஆலயம் கட்டப்பட்டிருக்கும்.

இவற்றில் மனிதர்கள் எழுப்பிய ஆலயத்தை விட, ரிஷிகள் எழுப்பியவை உயர்ந்தவை. ரிஷிப் பிரதிஷ்டையைவிட தேவப் பிரதிஷ்டை உயர்ந்தது. தேவ பிரதிஷ்டையைவிட சுயம்பு மிக உயர்ந்தது. சுயம்பு தவிர மற்ற ஆலயங்களில் 12 ஆண்டுகளுக்கொரு முறை குடமுழுக்கு கட்டாயம் செய்ய வேண்டும்.

இதன் தத்துவத்தை ஆகமம் கூறும்போது:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | முன்கோபுரம் | - | ஸ்தூல லிங்கம் | - | பூதான்மா |
| 2. | மகாபலிபீடம் | - | பத்திரலிங்கம் | - | அந்தரான்மா |
| 3. | கொடிமரம் | - | துவஜலிங்கம் | - | தத்துவான்மா |
| 4. | மூலவர் | - | சதாசிவலிங்கம் | - | சீவான்மா |
| 5. | சாரியர் (அர்ச்சகர்) | - | ஆன்மலிங்கம் | - | மந்திரான்மா |
| 6. | விமானம் | - | அகண்ட லிங்கம் | - | பாமான்மா |

இந்த முறையில் சில உண்மைகளை நாம் அறிந்து கொள்கிறோம்.

1. ஒவ்வொரு ஆலயத்திற்கும் உயிர் நிலையாகவும் ஜீவநாடியாகவும் இருப்பது அதன் மூலஸ்தான மூர்த்தியாகிய கர்ப்பக்கிரக விக்கிரகம். அந்தக் கற்சிலைக்கு உயிரைக் கொடுத்து அதை சான்னித்தியமுடைய மூர்த்தி ஆக்குவது அதன் அடியில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் இயந்திரம். இயந்திரம் என்பது இன்று எஞ்ஜின் எனப்படும். இயந்திரமில்லாத வண்டி ஓடாதது போல, மூர்த்திக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்யப்படாத ஆலயம் ஆலயமாகாது; அது பாழுங் கோயில், வெறுங் கல்மடம், அங்கு வேதாகமம் ஆராதனையோ, வழிபாடோ நடைபெறுவதில்லை.

2. இந்த மூலஸ்தான மூர்த்தியும், ஆலயத்தின் வருவாய்க்குத் தக்கபடி ஒன்று முதல் ஏழு வரையுள்ள பிரகாரங்களின் மதில்களால் சூழப்பட்டிருக்கு. இதனால், வெளியே நின்று பார்ப்பவருக்கு மூர்த்தியானது தெரிவ .

3. ஆலயத்தின் உள்ளே சென்ற பின்பு, மூர்த்தியானது இறைவனின் திருவுருவக் காட்சியைக் காட்டுமே தவிர, மற்றவை அல்ல. ஏனெனில், கர்ப்பக்கிரகம் இருட்டறையாய் இருப்பதோடு அங்குள்ள வாடா விளக்குகளும் மந்த ஒளியுள்ளனவாகவே காணப்படும், அதனால்,

4. அர்ச்சகர் வந்து தீபச் சுடரை ஏற்றிக் காட்டும் போதே அந்த மூர்த்தி சற்று விளக்கமாகத் தெரியவரும், இறைவனின் திருவருளைப் பெறுகிறோம்.

வழிபாடு - புறவழிபாடு, அகவழிபாடு என இருவகை. புறவழிபாட்டைவிட அகவழிபாடே மேலானது. புறவழிபாட்டின் மூலமே அகவழிபாட்டை எய்த முடியும்.
புறவழிபாடு அபிஷேகம், அர்ச்சனை, நைவேத்யம், தீபாராதனை, சோடச உபசாரம் என்பனவாகும்.

அகவழிபாடு என்பது, தியானம், யோகம், மந்திரம் செபித்தல், எந்நேரமும் பரம்பொருள் சிந்தனையாக வாழ்வது, மனம், மெய், வாக்கு மூன்றாலும் இறைச் சிந்தனையாகவே இருந்து நற்காரியங்களைச் செய்வது, ஞானம் கொண்டு தெளிவு பெறுவது, இறைவனை அடைவது.

**உண்மை நிலவரம் என்ன?**

மேற்கூறிய கருத்துகள் அனைத்தும் சிவாகம முறைப்படி ஆலயம் அமைத்துக், குடமுழுக்கு செய்து, வழிபாடு செய்வது சிறப்பாகும், உத்தமமாகும். ஆனால், இது நடைமுறையில் இருக்கின்றதா?

மலேசியாவில் ஏறக்குறைய 17,000 கோயில்கள் உள்ளன என்று கூறுகிறார்கள். இதில் பெரிய கோயில்கள், சிறிய கோயில்கள், தோட்டப்புறத்தில் உள்ள கோயில்கள், சாலை ஓரத்தில் உள்ள சிறிய கோயில்கள், சொந்தக் கோயில்கள், வீட்டின் வெளியில் உருவாக்கப்படும் சிறுசிறு கோயில்கள், ஆகமத்திற்குப் புறம்பான கோயில்கள், புறம்போக்கு நிலத்தில் கட்டப்படும் கோயில்கள் என்று பல வகைப்படுகின்றன.

பல்கலைக்கழக ஆய்வின்படி, சில நூறு கோயில்களைத் தவிர மற்றக் கோயில்கள் சிவாகம முறைப்படிக் கட்டப்படாத நிலையிலே பல நூறு ஆண்டுகளாக வழிப்பாட்டுத் தலங்களாக அமைந்து இருக்கின்றன. நம் சமயம் கூறும் மெய்ஞானம் விஞ்ஞானம் கலந்த ஆன்மிகக் கூட்டங்களாக இவை திகழ்கின்றனவா? இதனால் மக்கள் முழுமையான திருவருள் பயனை அடைகிறார்களா? இவ்வழிபாட்டுத் தலங்களில் அர்ச்சகர்கள் முறையாகப் பூசைகளைச் செய்கிறார்களா? மந்திரங்களைக் கூறுகிறார்களா? வழிபடச் செல்லும் பக்தர்கள்தான் திருமுறை மந்திரங்களை ஓதுகிறார்களா? என்று கேட்டால் பதில் திருப்பதிகரமாக இல்லை. இதற்குப் பல காரணங்கள் உண்டு. (அதற்கான வழிமுறைகள்) அவற்றுள் சில:

1. ஒரு சில ஆலயங்களைத் தவிர, மற்ற ஆலயங்களில் இந்து சமய போதனை நடைபெறுவது கிடையாது.

2. பொதுவாக, ஆலய நிர்வாகத்தினர் இந்து சமய, கமக் கருத்துக்களை தெரிந்து வைத்திருப்பது முக்கியமாகும். ஆனால், பல ஆலயங்களில் உள்ள நிவாகத்தினர் அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. ஆலய அர்ச்சகர் பார்த்துக் கொள்வார் என்று எதிர்ப்பார்க்கிறார்கள். உண்மையில் இருசாராரும் தெரிந்து வைத்திருப்பதுதான் ஆலயத்திற்கும் அங்கு வரும் பக்தர்களுக்கும் சிறப்பாகும். எல்லாம் அர்ச்சகருக்குத் தெரியும் என்று விட்டு விடுவது சிறப்பாகாது. நிறைய அர்ச்சகர்களுக்கு எல்லாம் தெரிய வாய்ப்பில்லை.

ஆலயத்தின் அர்ச்சகர்கள், வழிபாட்டைத் தவிர இந்து சமயப் போதனைகளைப் பக்தர்களுக்கு எடுத்தியம்ப வேண்டும். வெறும் கிரியைகளும் சம்பிரதாயங்களும் இந்து சமயமாகாது. ஆண்டவன் அதற்கு அப்பாற்பட்டவன். கிரியைவிட சமய அறிவுக்கு முக்கியத்துவம் கொடுப்பது உத்தமமாகும்.

3. ஒரு காலத்தில் இந்து சமய ஞானமும், கம நுட்பமும் இல்லாத காலத்தில், ஆலயங்கள் கட்டப்பட்டன. அவை பெரும்பாலும் ஆகமத்திற்குப் புறம்பாகவே இருக்கின்றன. ஆனால், தற்சமயம் கோயில் எழுப்பப்படுமானால், ஆலய நிர்வாகத்தினர் சிவாகம முறைப்படி, (சிறிய ஆலயமாக இருந்தாலும்), கட்டுவதற்கான அனைத்து முயற்சிகளும் எடுப்பது சாலச் சிறந்தது. காரணம், இன்னும் பலர், ஆலயம் எழுப்புவதாக எண்ணிக் கொண்டு, மூலஸ்தனத்தில் சிறு தெய்வங்களை, காவல் தெய்வங்களையும் பிரதிஷ்டை செய்கிறார்கள். பரிவாரத் தெய்வங்களாக முருகனையும், அம்பாளையும், மூலஸ்தனத்திற்கு வெளியே நிறுவி விடுகிறார்கள். இது மகா பாவகாரியம்.
இன்னும் சிலர், ஆலயத்தில் எல்லாத் தெய்வங்களையும் வைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் எல்லாவற்றையும் பிரதிஷ்டை செய்கிறார்கள். அவற்றில் ஒன்று, மூலஸ்தானத்தில் இருக்க வேண்டிய சிவலிங்கத்தை எங்காவது வைத்தால் போதும் என்ற எண்ணத்தில் வெளியே பிரதிஷ்டை செய்கிறார்கள். இதைவிட ஒரு பெரிய கொடூரம் நம் சமயத்திற்குத் தேவையா? இத்தகைய செய்கையால், ஆலயத்திற்கு எந்தவித சிறப்போ, பெருமையோ கிடையாது என்பதை உணரவேண்டும்.

4. ஆலயம் என்று சொன்னால், ஆலயத்தைச் சுற்றி மதில் சுவர்கள் கட்டாயம் இருக்க வேண்டும். ஆலயம் சுத்தமாக இருந்தால் மட்டும் போதாது. சுவர்கள் இல்லாத நிலையில், சாலையில் செல்கின்ற மிருகங்கள் கூட, ஆலயத்திற்குச் சென்று, அசுத்தம் செய்யலாம். புற உலகத்திற்குச் செல்வதும், அகவழிபாடே சிறந்தது என்பதையும் நம் தமிழர்கள் உணரவேண்டும். ஒவ்வொரு ஆலயமும் சிவ கைலாசமாகும் என்பதை நாம் உணர்ந்து, ஆலயம் எழுப்ப வேண்டும்.

5. ஆலயத்தில் தினமும் காலை மாலை என்று இரு வேளைகளும் பூசை நடைபெறுவது என்று இரு வேளைகளும் பூசை நடைபெறுவது இந்து சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். திருமூலர் கூறுவதுபோல், முறையாக ஆலயத்தில் செய்யப்படும் வழிபாடு, அங்குள்ள மக்கள் அனைவரும் நல்ல சுகத்தையும் அருளையும் பெறுவார்கள். பூசை தடைபடுமாயின், மக்கள் அனைவரும் பல துன்பங்களுக்கும் இன்னல்களுக்கும் ஆளாவார்கள். ஆலயம் இருந்தும் பூசைகள் செய்யாவிடில், அது ஒரு கல்லால் ஆன மண்டபமேயாகும். அதனால் யாருக்கு என்ன பலன்?

6. ஆலயம் ஒரு இந்து சமய மையமாகும். நம்மவர்கள் இந்து சமயத்தைத் தெரிந்து கொள்ளவும், படித்துக் கொள்ளவும் முறையாகத் தேவாரத் திருவாசகங்களை ஓதவும் ஏற்படுத்தித் தரும் தலமாகும். கோயில் நிர்வாகத்தினர் சமய இயக்கங்களோடு சேர்ந்து இந்து சமய வகுப்புகளையும், திருமுறை வகுப்புகளையும் நடத்தி வருவது அவசியமாகும். சிறுவயது முதல் நம் குழந்தைகளுக்கு இந்து சமயத்தைப் படித்துத் தரக்கூடிய சந்தர்ப்பத்தை ஆலயம் ஏற்பாடு செய்து வரவேண்டும். வெள்ளிக்கிழமைகளில் சமயத் தொடர் சொற்பொழிவுகள், மாதந்திர குருவழிபாடுகள், பிரார்த்தனைகள், சமயக் கருத்தரங்குகள், போன்றவற்றை ஆலயத்தில் சமய இயக்கங்கள் ஆலய ஒத்துழைப்புடன் நடத்த வேண்டும் என்று ஆலயச் சிந்தனையில் நாம் எதிர்ப்பார்ப்போம்.

7. ஆலயம் ஒரு கலாச்சார மையமாக இருக்க வேண்டும். நம் முன்னோர்கள் நமது பாரம்பரிய கலை, கலாச்சாரத்தை ஆலயத்திலிருந்து தொடர்ந்து பாதுகாத்து வந்திருக்கிறார்கள். இசை வகுப்பு, வீணை வகுப்பு, சங்கீத வகுப்பு, பரத நாட்டிய வகுப்பு, வழிபாடு தொடர்பான கலைகள் போன்றவற்றை ஆலய நிர்வாகம் மக்களுக்குக் கற்றுத் தரும் ஒரு மையமாக அமைக்கவேண்டும். சமுதாயச் சீர்கேடுகளிலிருந்து, நமது இளைஞர்களும், யுவதிகளும் பாதிக்காதவண்ணம், கலாச்சார வகுப்புகள் ஏற்படுத்த வேண்டும். தற்காப்புக்கலை, கோலாட்டம் போன்ற கலைகளையும் கற்றுத்தரலாம்.

8. ஆலயம் ஒரு கல்வி மையமாகும். பள்ளி மாணவர்கள் தங்கள் கூடுதல் வகுப்புகளை ஆலய வளாகத்தில் கற்றுக் கொள்ளக் கூடிய சூழலை ஆலய நிர்வாகம் ஏற்படுத்தித் தரலாம். இந்துக் குழந்தைகளுக்கான பாலர் வகுப்புகளைத் தாராளமாக ஆலயத்தில் நடத்தலாம். சிறந்த மாணவர்களை உருவாக்குவதில் ஆலயமும் பங்காற்ற முடியும் என்று நாம் நம்பவேண்டும்.

9. ஆலயம் ஒரு சமுதாய மையமாகும். நம் முன்னோர்கள், ஆலயத்தில் பல வகையான சமுதாய நற்காரியங்களை ஆற்றியுள்ளனர். ஏழைகளுக்கு இலவசமாக அன்னதானம், பஞ்சத்தால் வாடுபவர்களுக்கு உதவுவது, இயற்கைப் பேரிடரால் பாதிக்கப்பட்டவர்களுக்குத் தங்க உதவுவது, அனாதை என்று வருபவர்களுக்குத் தாராளமாக உதவுவது நமது ஆலய நிர்வாகத்தின் ஒரு சேவையாகும்.

10. மலேசியாவில் ஒரு சில பெரிய ஆலயங்களைத் தவிர, மற்ற ஆலயங்கள் மேற்காணும் இந்து சமய வளர்ச்சிக்காகப் பாடுபடுகின்றன என்று உறுதியாக கூற முடியாது. 18 லட்சம் இந்தியர்கள் வாழும் இந்நாட்டில், 90 விழுக்காட்டினர் இந்துக்களாக வாழ்கிறார்கள். இவர்களில் சுமார் 85 விழுக்காட்டினர் தமிழ் பேசும் தமிழர்கள். இத்தமிழர்கள் பெரும்பாலான ஆலயங்களில் நிர்வாகத்தில் உள்ளனர்.

தமிழ் மொழிக்கு இவர்கள் என்ன செய்யலாம்? ஆலய நிர்வாகத்தில் இருக்கும் இவர்கள், ஆலயத்தில் தமிழ் வகுப்புகள், தமிழில் ஆலய வழிபாடு , அர்ச்சனை, தமிழ் மறையாம் திருமுறையில் தமிழ் வழிபாடுக்கு முக்கியத்துவம் தருவது, தமிழ் பேசும் பேச்சாளர்களை ஆலயத்தில் அறிமுகப்படுத்துவது, போன்றவற்றில் முக்கியத்துவம் கொடுப்பதால், இம்மலை நாட்டில் தமிழ் மொழி ஆலயத்தில் சிறப்பு பெறும் என்பது வெள்ளிடைமலை.

**ஆலயமும் சமய வளர்ச்சியும்**

இம்மலை நாட்டில் ஏறக்குறைய 80 விழுக்காட்டுக் கோயில்கள் சிறிய அளவிலேயே கட்டப்பட்டிருக்கின்றன. இவற்றில் ஏறக்குறைய 60 விழுக்காட்டினர், ஆலயங்களில் பலி கொடுக்கும் படலங்களைத் தொடர்ந்து நடத்தி வருகின்றனர். இவர்கள் ஏன் இவ்வாறு செய்கிறார்கள்? பரம்பரையாகப் பலி கொடுக்கிறோம், இதை நிறுத்த முடியாது என்கிறார்கள். இன்னும் சிலர் குறி சொல்லும் நோக்கத்தில், பலி கொடுக்கிறார்கள். இவை அனைத்தும் நம் முன்னோர்களின் சமய ஞானத்தையும், விஞ்ஞான மெஞ்ஞானம் கலந்த சிறந்த நாகரீகத்தின் சிறப்புகள் அறியாத அறியாமையே காரணம்.

உலகத்திற்கு நாகரீகத்தையும், விஞ்ஞானத்தையும் கற்றுக் கொடுத்த நமது முன்னோர்களா பலி கொடுக்கும் பண்பில் வந்தவர்கள்! ஆலயத்தில் விஞ்ஞானத்தை அறிமுகப்படுத்திய நம் தமிழர்களா ஆலயத்தில் பலி கொடுத்திருப்பார்கள்? இல்லை. உலகத்தில் மிகச் சிறந்த அறிவாளிகளாகவும், ஞானிகளாகவும், சித்த புருஷர்களாகவும், தத்துவ ஞானிகளாகவும், உலகம் முழுவதும் சைவ சமயத்தைப் பரப்பியவர்களும், உலகத்தையே வென்று ஆண்டவர்களா, ஆலயத்தில் பலி கொடுத்திருப்பார்கள்? இல்லை. ஆலயம் என்பது ஆன்மா இலயிக்கும் இடமாகும். ஆண்டவன் சிறப்பாக இருக்கும் இடம். அத்தகைய புனித இடத்தில், பலி கொடுப்பது மகா பாவமாகும். இப்பாவத்திற்கு எவ்வித விமோசனமும் இல்லை என்கிறது அக்னி புராணம். பிறகு, ஏன் இத்தவறு மீண்டும் மீண்டும் நடக்கிறது?

நம்மவர்கள் 63 நாயன்மார்களின் உண்மை வரலாற்றைத் தெரிந்து கொள்ளாத வரைக்கும், பன்னிரு திருமுறைகளைக் கொஞ்சமாவது முயற்சி எடுத்து ஓதாதவரைக்கும், முருகனின் திருப்புகழை அறியாத வரைக்கும், அம்பாளின் அபிராமி அந்தாதியைத் தொடாத வரைக்கும், அறியாமையிலிருந்து வெளியே வராத வரைக்கும் இப்பலிப்படலம் தொடர்ந்து இருக்கும்.

நம்மவர்களில் இன்னும் முழுமுதற்கடவுள் என்னும் பரம்பொருள் தத்துவத்தை உணராதவர்கள் பலர் உண்டு. சிறு தெய்வச் சிந்தனையில் பரம்பொருள் தத்துவத்தைக் குழப்பிக் கொண்டிருப்பவர்கள் பலர். முக்தியைத் தரவல்லது பரம்பொருள் ஒன்றே என்பதை உணரவேண்டும்.

**பலி கொடுக்க வேண்டும்**

ஆலயத்தில் மூலவிக்கிரகம் இறைவனைக் குறிக்கும், வாகனம் (நந்தி, மூஷிகம், மயில், சிங்கம்) உயிரைக் குறிக்கும். பலி பீடம் பாசத்தைக் குறிக்கும். பாசம் என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களைக் கூறுவர். உயிரானது இந்த மூன்று மலங்களிடமிருந்து விடுபடும் போது, இறைவன் தரிசனம், முக்தி அனைத்தும் கிடைக்கிறது. இறையருள் கிடைக்கத் தடையாகவுள்ள மும்மலங்களை நாம் பலியிட வேண்டும். அதை ஆலயத்தில் பலிபீடம் என்பது உயிரில் இருக்கின்ற மும்மலங்களைப் பலியிட வேண்டும் என்பதேயன்றி, உயிர்ப்பலி கூடாது.

மும்மலங்களை (ஆணவம், கன்மம், மாயை) நாம் பலியிடும் நோக்கத்தில் கீழே வீழ்ந்து வணங்குகிறோம். எழும்போது பக்குவப்பட்ட ஆன்மாவாக எழவேண்டும் என்பது தத்துவம். மற்றொன்று இறைவனுக்கு நாமெல்லாம் அடிமை. அடிமையைக் காட்டும் பொருட்டும் கீழே வீழ்கிறோம். இன்னும், 'பிறவி பெருங்கடலில் நாம் வீழ்ந்து தத்தளிப்பது போலவும், அதிலிருந்து நம்மைக் கரை சேர்க்கும் இறைவனை நோக்குகிறோம்' என்று கூறுவர் ஞானியர். சிலர் கூறுவதுபோல், இறைவன் உயிரை எடுத்துக் கொள்ளமாட்டார். மும்மலங்கள் நம்மை விட்டு அகலும் போது, உயிர் தானாக முக்தி பெறுகிறது.

**முடிவுரை**

மலேசியாவில் ஆயிரக்கணக்கில் ஆலயங்கள் இருப்பது போல், ஆலய நிர்வாகத்தினரும், இந்து சமய பிரச்சாரத்திலும், சமய வளர்ச்சியிலும் நிறைய ஈடுபாடும் அக்கறையும் காட்டி, ஆலயத்தின் வழி, சிறந்த ஒரு சமுதாயமாக இந்து சமயத்திலும், கலாச்சாரத்திலும், தமிழ்மொழியிலும் விளங்குவதற்கு ஆணிவேராக, ஆலமரமாக இருப்பார்கள் என்று நம்புவோம், வேண்டிக் கொள்வோம்.

**பின் குறிப்பு**

**இக்கட்டுரையாளர், மலேசிய இந்து சங்கத்தின் தேசிய பொதுச் செயலாளர் ஆவார். இந்து சங்கத்தின்தேசிய சமய பகுதித் தலைவருமாவார். இவர் கடந்த 30ஆண்டுகளாகத்தன்னைமலேசிய இந்துசங்கத்தோடு,சமயப்பிரச்சாரத்திலும், சமயச் சொற்பொழிவுகளிலும், சமயக் கருத்தரங்குகளிலும், மாணவர் எழுச்சிமுகாம்களிலும், குருவழிபாடுகளிலும், சமய நூல்வெளியீடுகளிலும், நால்வர் விழாவிலும் இணைத்துக்கொண்டார். மலைநாடு முழுவதும், ஆலயங்கள் தோறும் சென்று, சமய உரையாற்றிய அனுபவத்தின் பேரில், மேற்காம் கட்டுரை வெளியிடப்படுகின்றது. யாரையும் புண்படுத்தவோ, வேதனைப்படுத்துவதோ, கட்டுரையாளரி ன் நோக்கம் அல்ல. 'நம்மினம் மேம்பாடு அடைவதே' கட்டுரையாளரின் நோக்கமாகும்.**



உ

# சித்தியவான் முருகன் பாமாலை

டாக்டர் வ.ஜெயபாலன்
ஈப்போ

அருணகிரிக் கொரு திருமறை அருளிய
அருதிரு முருகா! அருளாளா!
அரவணைஅரி துயில் பெருமாள் மருவிய
மருமகன் தீய மயில்வீரா!
அரண்மனைநிக ரென ஞலயம் கொண்டாய்
அழகிய சித்திய வான்வேலா!
பெருகிடும்வள மையும் அளவிலா அருளையும்
அள்ளித் தருவாய் சிவபாலா!!

தேடிடும் அடியார் தேவைகள் அறிந்தே
நாடியே செல்வம் தருவோனே!
வாடிய மனதினில் வாட்டம் தவிர்த்தே
ஊட்டம் அளிக்கும் ஒளியோனே!
ஆடிய பாதன் சூடிய திங்கள்
சுடரொளி ஒத்திடும் வேலவனே!
காடிக் குறிச்சியில் காலங்கள் தோறும்
காவலாய் நிற்கும் நாவலனே!!

நானெனும் ஆணவம் வீணெனக் காட்டிய
வானவர் கோவே! வளர் நிதியே!
சூனியம் சூத்திரம் தந்திரம் மாய்த்திடும்
மந்திரப் பொருளே! சுடர் பதியே!
போனதும் வந்ததும் வருவதும் உன்செயல்
வாழ்வில் எதிலும்உன் விதியே!
தேனினும் இனியவா! சித்தியவான் உறை
தேவனே பணிந்தேன்நின் கதியே!!

தாவிடும் மனதினைத் தடுத்தாட் கொள்வாய்
சேவடி தொழுதோம் சேவுகனே!
சீவனுக் குள்ளே சிவமாய்க் கலந்தாய்
பாவங்கள் போக்கும் சோதியனே!
பூவினை நாடிடும் வண்டெனப் பக்தர்கள்
சூழவே வலம்வரும் வேதியனே!
மூவினம் வாழும் சித்திய வான்நகர்
சீலனே! தர்மத்தின் நாயகனே!!

ஆரணம் ஏத்தும் ஏரகச் செல்வா!
வேரோடு ஊழ்வினை வென்றிடுவாய்!
நாரணன் சோதரி உமையாள் புதல்வா
சீறிடும் பகைவரின் சிதறிடிப்பாய்!
காரண காரியம் யாவிலும் கந்தா
பூரண மாகவே நிறைந்திருப்பாய்!
சூரண மாற்றிய சிவசுப்பிர மணியா
சித்திய வாந்தனில் நிலைத்திருப்பாய்!!

முத்தமிழ் தந்தவன் முதல்வன் இறைவனின்
சத்தியம் காக்கும் வேல்போற்றி!
நித்தமும் நிர்மலன் நீங்காச் சக்திகள்
வள்ளி தேவானை அடிபோற்றி!
தத்துவ மயிலின் தந்திடும் நடமுடன்
வித்தகச் சேவல் கொடிபோற்றி!
சித்திய வான்நகர் நீங்கா நிறைந்த
சுப்பிர மணியனே போற்றி! போற்றி!!





## திருமந்திரத்தின் மறைபொருட் கூற்று

முனைவர் என்.சி. இராஜாமணி
ஆஸ்ட்ரோ இந்திய பிரிவின் தலைவர்

'எத்தனை கோடி இன்பம் வைத்தாய்' என்று இறைவனை இறைஞ்சி மனமுருகி பாடிடும் கவிஞர்களுள் பாரதி தலைசிறந்தவர் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை; ஆனால் இன்பம் என்பது என்ன? மண்ணிலா? பெண்ணிலா? அல்லது பல்வேறு காட்சிகளைக் காணும் நம் கண்ணிலா? இக்கேள்விகளுக்கெல்லாம் விடை கொணர நாம் ஆய்வுசெய்தால் பல்வேறு உண்மைகள் நம் மனதில் புலப்படும். இவ்வுலகில் எந்த கனியானது நாம் சொன்னவுடனே வாய் மணந்து, தித்திக்கும் என்று கேட்போம் என்றால் அன்றே நமக்கு அதற்கான பதிலுரைத்தவர் திருமூலர். உலகில் வாழும் அனைத்து உயிர்களுக்கும், ஒன்றானது பின் அதுவே நன்றானதும் எது என்று வினவியதும் அதற்குரிய விடையாக திருமூலர் இங்ஙனம் பகிர்ந்தருளியுள்ளார்.

"ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவது
நன்றுகண் டீர்இனி நமசிவா யப்பழந்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே!"
(திருமந்திரம் 2962)

இவ்வுலகில் நிலவும் சமயங்கள் அனைத்தும் ஆறுவகைச் சமயங்களில் அடங்கும் என்பர் ஆன்றோர். அவ்வகையான அனைத்து சமய நெறிகளிலும் எந்தவொரு பிணக்கும் இல்லாமல் எல்லா சமய நெறிகளையும் ஒன்றிணைத்து, பிறப்பினையறுத்து முக்தியைத் தரும் வழிமுறைகளை இவ்வுலகிற்கு எடுத்து இயம்பும் சமயம்தான் சைவ சமயம். உண்மையை விளம்பும் சிவனது வாக்காக மலர்வதுதான் சைவ சித்தாந்தம் ஆகும்.

"ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த, ஆராவின்ப வருங்கனி பிழிந்த, சாரங்கொண்ட சைவ சித்தாந்த" சாத்திரங்களில் 'அன்பே சிவம்' என்று அகங் குழைந்து வாழும் நெறியினை அனைத்து மக்களுக்கும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெள்ளியமாக எடுத்துரைத்தவர் திருமூலர்.

யோகநிலையில் இருந்து ஆண்டுக்கு ஒரு பாடல் வீதம் 3000 ஆண்டுகள் வாழ்ந்து 3000 பாடல்களை எழுதியிருப்பார் என்றவொரு நம்பிக்கை ஏராளமான சைவர்கள் எண்ணத்தில் உள்ளது. மாடுகளின் கண்ணீரைக் காண வொண்ணாமல் கூடுவிட்டு கூடுபாய்ந்து மாட்டிடையனாய் அலைந்து, பின் யோகநிலையில் அமர்ந்தார். ஊனொடு தொடரும் இப்பிறவியில் தீய நஞ்சாக திகழும் துயரத்தையும், இன்னலினையும் நீக்கி, இவ்வுலகில் உள்ள அனைவரும் உய்யும் வண்ணம், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்வகை மலர்கள் மூலம் ஞான மணத்தை யாரால் பரப்ப முடியும்? இறைவன் திருவடியைப் போற்றும் நிலையில் 'ஒன்றவன்தானே' எனும் திருமந்திரத்தைப் படைத்த திருமூலர் ஒருவரால்தான் மட்டும் முடியும்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யு மாறே"

என்று தமிழகத்தில் சைவ நெறியினையும், இறையுணர்வையும் பரப்பியவர்

திருமூலர். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று வேதப் பொருளான இறைவனுடன் இரண்டறக் கலக்கும் சாதனங்களை மந்திரத் தமிழில் இம்மண்ணுலக மாந்தர்களுக்கு விளக்கியவர்; நந்தி தேவரைக் குருவாகக் கொண்ட இவரை சிவபெருமானே, 'தவபெருமான்' என்று பாராட்டியுள்ளார். ஒன்பது ஆகமங்களின் சாரங்களை ஒன்பது தந்திரங்களாகப் பாடியுள்ளார். இந்த அநுபவ ஞானத் திருநூல் திருஞான சம்பந்த சுவாமிகளின் திருவுள்ளத்தைக் கவர்ந்த நூல். மனிதனுக்கும், இறைவனுக்கும் இணைப்பை ஏற்படுத்த இம்மந்திர நூல் முக்கிய பங்கு வகிக்கிறது. 'நினை; இடைவிடாது நினை; உன்னை எங்கும் என்றும் காப்பாற்றுவேன்' என்று மந்திரங்களின் பெருமைகளை உரைப்பார்கள் நிறை மொழி மாந்தர்கள். இவர்களின் மூலம் எல்லாம் வல்ல இறைவனின் ஆணையால் இவ்வுலகிற்கு கிட்டிய ஒன்பது ஆகமங்களை ஒன்பது தந்திரங்களாக இவ்வுலகினர்க்கு உபதேசித்தவர் திருமூலர். காரண ஆகமத்தின் சாரமாக முதற்தந்திரமும், காமிக ஆகமத்தின் சாரமாக இரண்டாம் தந்திரமும், வீர ஆகமத்தின் சாரமாக மூன்றாம் தந்திரமும், சிந்தியாகமத்தின் சாரமாக நான்காம் தந்திரமும், வாதுள ஆகமத்தின் சாரமாக ஐந்தாம் தந்திரமும், வியாமள ஆகமத்தின் சாரமாக ஆறாம் தந்திரமும், காலோத்தர ஆகமத்தின் சாரமாக ஏழாம் தந்திரமும், சுப்பிரதே ஆகமத்தின் சாரமாக எட்டாம் தந்திரமும், மகுட ஆகமத்தின் சாரமாக ஒன்பதாம் தந்திரமும், சாதி சமய வேறுபாடுகளைக் களைந்து, அன்பு கொண்டு, ஆன்ம நேயம் பூண்டு அனைவரும் நலமுடன் வாழ நல்லதொரு வாழ்க்கை நெறிகளை எடுத்துரைப்பதுதான் திருமந்திரம். பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையான 'தமிழ் மூவாயிரம்' எனும் திருமந்திரத்தைப் படைத்த திருமூலரைச் சேக்கிழார் பெருமான் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகப் போற்றிப் பாடியுள்ளார்.

திருமூலரின் திருமந்திரம் பெருங் கடலைப் போன்றாலும், அதில் அனைத்துத் தந்திரங்களிலும் ஒன்பதாவது தந்திரம் மகுடமாக விளங்குகிறது என்றால் மிகையாகாது. இத்திருமந்திரம் அகர உகர மகரமாகிய பிரணவமே அனைத்திற்கும் மூலம் என்பதை ஆணித்தரமாக எடுத்துக்காட்டுகிறது, அருவம், உருவம், அரு உருவம் மூன்றதற்கும் மூலம் பிரணவமே ஆகும்; நமசிவாய என்பது தூல பஞ்சாக்கரம்; சிவாய நம என்பது சூக்கும பஞ்சாக்கரம்; சிவாய என்பது அதிசூக்கும பஞ்சாக்கரம் ஆகுமென்று விளக்குகிறது; இதில் ஐந்தெழுத்தே கூத்தபிரானின் திருவடிவம் ஆகும். இவை அனைத்தையும் குருமுகமாக வழிபட்டுத் தெரிந்து கொள்ளக் கூடிய வழிமுறைகளை உரைக்கிறது; இந்த ஒன்பதாம் தந்திரம், செம் பொன் அம்பலவன் திருக் கூத்து இயல்புகளையும், அக்கூத்தின் பரந்த இயக்கமாய்த் திகழும் வீட்டின்ப மாட்சியையும், அவர் வீடு பேற்றினையும் தெளிவாக்குகின்றது இந்த அதிகாரம். இலக்கிய இன்பத்தை வழங்குவதற்காகப் புனையப்பட்ட காவிய நூல் இதுவல்ல வென்றாலும், இவ்வதிகாரத்தில் இடம் பெற்றுள்ள சூன்ய சம்பாஷனை அதாவது மறை பொருட் கூற்று படிப்போர்க்கு இன்பம் பயப்பனவாய் அமைந்துள்ளது. ஞானப் பொருளை மறைவாகப் பேசுவதுதான் இச்சூனிய சம்பாஷனை ஆகும். ஆனால் இம்மந்திரங்களை மறைவாகக் கூறி இருந்தாலும், அவற்றின் பொருளையுணர நாம் படிக்க, படிக்க நம் மனதில் அளவில்லா இன்பம் ஏற்படுகிறது என்பது வெள்ளிடை மலை. ஞான சாதனையையும், "தன் பயனையும் இதைவிட அழகாக வேறு யாராலும் கூற முடியுமா என்பது இயற்கையான ஐயமே. மரகத மணியில் விழுந்த மாணிக்க ரேகைபோல அஞ்ஞானம் நிறைந்த இதயத்திலே சத்குருவின் சன்மார்க்க உபதேசம் ஒளிவிட ஒவ்வொருவரும் கண்டிப்பாக படித்து அறிய வேண்டியது இச் சூனிய சம்பாஷனை ஆகும்.

"காயம் பலகை கவறைந்து கண்மூன்றாய்
ஆயம் பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்
ஏய பெருமா னிருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி யேனே."

(திருமந்திரம் 2866)

சீவன் உடம்பிலிருந்து கருவிகளை இயக்கிச் செயல்படும் முறை மறைவாக உள்ளதைத் தனக்கே உரிய திறனோடு பாடலாக அமைத்துள்ளார் திருமூல நாயனார். நம்முடைய தேகமானது சூதாடும் பலகையைப் போன்றதாகும். நம்முடைய ஐம்புலன்களும் சூதாடு கருவிகளாகும். சீவனது இச்சா ஞானக் கிரியை ஆகிய மூன்றும் மூன்று கண்களாகும். விஷய சுகமாகிய ஆதாயத்தை அடைய ஐம்பத்தோர் அக்கரங்களையுடைய தாரங்களில் பொருந்திய சீவன் இருந்து செயல்படுகின்ற மாயத் தன்மையுடைய இந்திரியங்களின் மறைப்பை அறியேன் என்கிறார். சூதாடு கருவியை இயக்க ஒருவன் வேண்டுமென்பதுபோல ஐம்புலன்களையும் இயக்க ஒரு சீவன் வேண்டும். சீவன் உடலைப் பற்றியபோது அதன் இயக்கம் உணரப்படுவது போல சிவத்தைப் பற்றியபோது அதன் சூக்கும நிலையான விந்துநாதம் உணரப்பட்டுச் சிவ நடனத்தைக் கண்டு நாதந்தம் செல்லலாம் என்ற உண்மையைப் புலனாகும் விதத்தில் இப்பாடலைப் படைத்துள்ளார்.

"வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுதுகொண் டோடினார் தோட்டக் குடிகண்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே."
(திருமந்திரம் 2869)

ஆன்மலாபமாகிய சிவக்கனி எப்படி கிட்டும்? ஞானசாதனையால் ஏற்படும் வைராக்கியத்தால் மட்டுமே என்பதை வெகு அழகாக அதேசமயம் மறைபொருளாகக் கூறியுள்ளார். அவர் கத்தரி விதையைப் போட்டார்; பாகல் செடி முளைத்தது; புழுதியைத் தோண்டினார்; பூசணி முளைத்தது; தோட்டத்திலிருந்த குடிகள் எல்லாம் இதென்ன ஆச்சரியமாக இருக்கிறதே என்று அவரைக் கும்பிட்டு ஓடிப் போயினர்; ஆனால் பழுத்தது என்ன? வாழைப்பழம் என்கிறார்.

மறைப்பொருட் கூற்று என்பதற்கு இதை விட வேறு எதுவும் சான்றாக விளங்க முடியாது. படிக்கும்போது ஒரு பொருளினையும் உணரும்போது பிறிதொரு பொருளினையும் வழங்கும் இப்பாடலைப் படிக்க படிக்க நாவில் மட்டுமல்ல மனதிலும் தேனூறும். ஞானசாதனையால் முதலில் தோன்றும் புருவ நடுவினில் சிறிய துடிப்பை மிகவும் சிறிய விதையான கத்தரி விதையோடு ஒப்பிடுகிறார். உலகக் கசப்பால் தோன்றும் வைராக்கியத்தையும், மிகவும் கசப்புடைய பாகற்காயையும் ஒன்றென உரைக்கிறார். தத்துவ ஆராய்ச்சியான புழுதியைத் தோண்டும்போது மஞ்சள் ஒளியையுடைய சகஸ்ரதளமாகிய பூசணி மலர் பூத்தது என்கிறார். சரீரமாகிய தோட்டத்தில் அக்கரங்களாகிய குடிகள் வணங்கி அகன்றனர். ஞான சாதனையில் சிரசின்மேல் விளங்கும் மஞ்சள் ஒளியை வாழ்+ஐ+கனி = வாழைக் கனி அதாவது வாழ்வில் தலைமை அளிக்கும் கனி, சிவம் என்று குறிப்பிடுகிறார்.

ஞானசாதனை செய்பவர்க்குச் சிவன் உளைக்களத்திட்ட இரும்பைப் போல பிரகாசத்தை அருளுவான்.

மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ
உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்
முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே.
(திருமந்திரம் 2882)

சிரசாகிய மலையின்மேல் ஒளிக்கதிர்களான மழை பரவுகிறது; சிரசின் மத்தியில் பிராணனாகிய மான்குட்டி மோதுகிறது; ஊர்த்துவ சகஸ்ரதளமாகிய குலைமேல் இருந்த சிவமாகிய செழுமைமிக்க பழம் உதிர்கிறது; கொல்லன் உலைக்களத்திலிட்ட இரும்புபோல் பிரகாசிக்கிறது; யார் அந்த பிரகாசத்தைத் தந்தவர்? மார்பகம் தாங்கிய

உடலின் மேல் ஒளியாகிய அமிர்தத்தை விளங்குமாறு செய்தவர் வேறு யாருமல்ல; அச்சிவனேதான். இதனைப் படிக்கும்போது, சைவமில்லையேல் தமிழில்லை; தமிழில்லையேல் சைவமில்லை'' என்று கூறுமளவிற்கு சைவத்தையும், தமிழையும் ஒன்றினுள் ஒன்று இரண்டறக் கலந்து படைப்பதில் திருமூலருக்கு நிகர் வேறு எவருமில்லையென்று எண்ணத் தோன்றும்.

எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத
மலராத பூவின் மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணமுண்ட வாறே

(திருமந்திரம் - 2885)

சிவநெறிச் செல்வர் திருமூலர் ஆனந்த நிலை என்னவென்பதை வெகு அழகாக எடுத்துரைக்கிறார். எழுதாத ஏட்டிலுள்ள விஷயத்தை, தெளியாத சிறுமி தெளிந்து சொல்ல, மலராத பூவிலுள்ள மணமுள்ள தேனை, பிறவாத வண்டு உண்டது போல்வது ஆனந்த நிலை என்றுரைத்தார். உடலோடு கூடாத ஆன்மாவாகிய வண்டு நாதமாகிய தேனில் திளைத்து இன்பம் பெற்றதுபோல் என்று விளக்குகிறார்.

மூங்கின் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு
வேம்பினிற் சார்ந்து கிடந்த பனையிலோர்
பாம்புண்டு பாம்பைத் துரத்தித்தின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே.

(திருமந்திரம் 2887)

மூங்கிலில் ஒரு வேப்பமரம்; வேம்பைச் சேர ஒரு பனைமரம்; அப்பனையில் பாம்பு இருக்கிறது;பாம்பைத் துரத்திவிட்டு வேம்பைத் தின்பவர் இல்லை; அதனால் வேம்பு வீணாய் வெடித்துப் போகிறது. ஆன்ம ஞானம் பெற வைராக்கியத்தோடு ஞானசாதனையும் இன்றியமையாதது என்கிறார். வெறும் வைராக்கியம் மட்டும் ஆன்ம ஞானத்தைத் தருமா? குண்டலினியாகிய பாம்பை ஞான சாதனையால் சிரசுக்கு மேல் செலுத்துவதற்கு வைராக்கியம் வேண்டும். ஆதலால்தான் வேம்பு கிடந்து வெடிக்கும்படி ஆயிற்று என்கிறார்.

இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்
இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா வாமே.

(திருமந்திரம் 2889)

இந்த ஊரில் இரண்டு கடா உள்ளன; அவற்றிற்கு ஓர் இடையன் மேய்ப்பன் ஆக உள்ளான்; அந்த இரண்டு கடாவையும் இருத்திப் பிடித்தால் ஒரு கடாவாக மாறிவிடும். அது எப்படி?

பிராண அபான இயக்கத்தை அறிந்து செயல்படுத்தினால் கும்பகம் அமைந்து சுழுமுனை விளங்கும். உடம்புதான் இவ்வூர்; இவ்வூரினுள் உழவுச் செய்ய உசுவாச நிசுவாசமாகிய இரண்டு கடா உண்டு. இவ்விரண்டு கடாவையும் செலுத்த சீவனாகிய தொழும்பன் ஒருவனே உள்ளான். இச்சீவனது நிலையை அறிந்து இவ்விரண்டு கடாக்களையும் செயல்படாது நிறுத்திவிட்டால், உசுவாச நிசுவாசமாகிய இரண்டு கடாவும் போக்குவரவு அற்றுச் சுழுமுனையாகிய ஒரே கடாவாக அமைந்துவிடும்.

தோணியொன் றுண்டு துறையில் விடுவது
வாணி மிதித்துநின் றைவர்கோ லூன்றலும்
வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை
ஆணி கலங்கில் அதுவிது வாமே
(திருமந்திரம் 2935)

தேகப்பற்றாகிய ஆணி கழன்றால் சிவம் பொருந்திச் சீவன் சிவமாவது எப்படி என்பதை இப்பாடலின் மூலம் விளக்குகிறார். பிரணவமாகிய தோணி ஒன்று சிதாகாயப் பெருவெளியாகிய துறையில் சீவனைக் கொண்டு சேர்க்க தயார்நிலையில் உள்ளது; பிரணவமாகிய தொனி தோன்றாதவாறு பிரமனாதி ஐவரும் நிலை கொண்டுள்ளனர்; தன்னைக் கொடுத்துச் சிவத்தைக் கொள்ளும் வாணிபம் செய்யும் சீவன் சிதாகாயப் பெருவெளிக்குச் செல்லும் நெறியில் இடைப்புரதேசத்தில் தேகப்பற்றினை விட்டு விட்டால் சீவன் சிவமாகிவிடும்.

இறைவனின் திருவடிப்பேறு பெறுதலே முக்தி என்பர்; அதை அடைய வேண்டிய வழிமுறைகளை இலைமறைகாயாக இச்சூனிய சம்பாஷனையில் விளக்கியுள்ளார். 1500 ஆண்டுகளுக்கு முன்பே முப்பொருளின் உண்மையை சிவயோக நெறியாக மறைபொருட் கூற்றாக எடுத்துரைத்தவர் திருமூலர். திருமந்திரத்துக்கே சிறப்பைத் தரும் இப்பகுதியில்தான் திருமூலர் ஞானப் பொருளை மறைவாக விளக்குகிறார். ஞான சாதனை என்றால் என்ன? ஞான சாதனையின் பயன்தான் என்ன? இவ்விரண்டினையும் திருமூலர் போல் தெளிவாக விளக்கியவர் வேறு எவருமில்லை என்றே சொல்லலாம். சிவக்கனி எப்போது ஒருவருக்கு கிட்டும்? ஞானசாதனையால் வைராக்கியம் ஏற்படும்போது தானே சிவக் கனி கிட்டும் என்கிறார் திருமூலர்.

மனிதன் நிலையென்று எண்ணியிருக்கின்ற உடல், பொருள், இளமை இவையனைத்தும் எத்தனை தூரம் நம்முடன் வரும்; எதுவரையில் எவ்வளவு பயன்படும் போன்ற பல்வேறு வினாக்களை எழுப்பி, அவற்றின் நிலையாமையை எடுத்துக் காட்டி, நிலையுடைய பொருள் யாது என்று ஆராய்ச்சியை நடத்தி கடவுள் உண்மையையும் அவரது இயல்பையும் எடுத்துரைக்கும் திருமந்திரம் நம் வாழ்க்கைக்குக் கிடைத்த கலங்கரை விளக்கம் ஆகும். அலையில்லாத ஆழ்கடல் போல, சிந்தை தெளிந்தவருக்கே சிவன் வெளிப்படுவான் என்னும் சித்தாந்தத்தை எடுத்துரைத்த திருமந்திரம் ஒரு தெய்வக் குளிகை. இனி எல்லாம் இறைவனே என்ற எண்ணத்தை ஏற்படுத்தும் திருமந்திரத்தைத் தந்த திருமூலர் துதியை நாள் தோறும் படித்து நற்பயனைப் பெறுவோம்.

ஐய மாக்கடல் ஆழ்ந்த உயிர்க்கெல்லாம்
கையில் ஆமல கம்மெனக் காட்டுவான்
மையல் தீர்திரு மந்திரஞ் செப்பிய
செய்ய பொற்றிரு மூலனைச் சிந்திப்போம்
- பதிபசுபாச விளக்கம்

# சங்காபிஷேகம்

புலவர் செந்துறைமுத்து

கார்த்திகை மாதம் சோமவாரங்களில் நூற்றெட்டு முதல் ஆயிரத்தெட்டுச் சங்குகளில் நன்னீர் நிரப்பி அதனை முறைப்படி பூஜித்து, அந்நீரை சிவலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்வது சங்காபிஷேகமாகும்.

## சங்குகள் வைக்கும் முறை

108 அல்லது 1008 சங்குகளைகளையும் இறைவன் திருச்சந்நிதியில் பன்னிரண்டு ராசி குண்டங்களாகப் பிரித்து ஒவ்வொரு ராசி குண்டங்களிலும் ஒன்பது சங்குகள் வீதம் 12 இராசிகளிலும் 108 சங்குகள் வைத்து, எட்டு திக்குகளுக்கும் எட்டுப்பிரதானச் சங்குகளையும் நடுவில் வலம்புரி, இடம்புரி என்ற இரு சங்குகளையும் 'சிவசக்தி' என அமைத்தல் வேண்டும்.

உடம்பின் அமைப்புப்படி குடத்தில் தேங்காய் தலையாகவும், தர்ப்பை தலை முடியாகவும், மாவிலைகள் அவயங்களாகவும், வெள்ளை நூல் நரம்புகளாகவும், வண்ண நூல் எலும்புகளாகவும் தசைகளாகவும், நிரம்புகின் நன்னீர் இரத்தமாகவும் பாவிக்கின்ற தத்துவப்படி இரண்டு குடங்களில் நன்னீர் நிரம்பி, அவற்றில் கஸ்தூரி, பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, கோரோசனை, புனுகு, விளாமிச்வி வேர், ஏலம், பன்னீர், மஞ்சள் முதலிய வாசனைத் திரவியங்களைச் சேர்க்க வேண்டும். ஒவ்வொரு சங்கிலும் மாவிலை, தர்ப்பை, மலர் வைத்து யாகக் குண்டலத்தின் எதிரில் வைக்க வேண்டும்.

## பூசை முறை

சங்குகள் ஒவ்வொன்றும் 'ஓம், ஓம்' என்று ஒலித்துக் கொண்டிருக்கும். இவை யாகக் குண்டலத்தைச் சுற்றி ஐந்து வினாடிகள் நேரம் ஓங்கார மந்திரம் ஜெபிக்க, அம்மந்திரம் தீர்த்தத்தில் கலக்கிறது. வேத மந்திரங்களை ஓதி ஒவ்வொரு இராசி மண்டலத்திற்கும், எட்டு திக்குகளிலுள்ள சங்குகளுக்கும், வலம்புரி, இடம்புரி சங்குகளுக்கும் முறையாகப் பூசைகள் செய்ய வேண்டும்.

வேள்வி மண்டபத்தில் (யாக குண்டலத்தில்) ஆகவணீயம் தட்சிணாக்கினீயம், காருகாபத்தியம் என்னும் முத்திரை முறையே ஆல், அரசு, அத்தி, மா, பலா, வெள்ளெருக்கு, வன்னி, நாயுருவி, தர்ப்பை முதலிய சிப்பிகளால் வளர்த்து, நவதானியங்கள், வாசனைத் திரவியங்கள், கனிகள், தேன், தேங்காய், பீதாம்பரம், இலவங்கம், தாம்பூலம், பொரி முதலியவற்றோடு நறு நெய் தாரையாக வார்த்து, ஒரே சோதி பிழம்பாக, தனிப் பெருங்கருணைக் கடவுளுக்கு அக்கினி மூலமாகக் கொடுத்துப் பலிபோட்டு, காரியாக்கினிலிருந்து முலாக்கினியாகிய இரு சங்குகளிலும் பிரதிச்சை முடித்து, தூபதீப நிவேதனம், கற்பூர ஆரார்த்தி முதலியவற்றைச் செய்து, வாத்தியங்களோடு பிரகாரங்களை வலம் வருதல் வேண்டும். உலகம் தீங்கின்றி உய்யும் பொருட்டு வேண்டிக் கொண்டு, ஆசி பெற்று ஒவ்வொரு சங்கும் தீர்த்தத்தாலும் இறைவனை முறையே அபிஷேகம் செய்தல் வேண்டும். தொடர்ந்து மங்களகரமான ஆராதனைகள் செய்தல் வேண்டும்.

## வழிபாடும் பயனும்

சங்காபிஷேகத்தைக் கண்டு இறைவனை வழிபடுகின்றவர்கள் எல்லாப் பேறும் பெற்று, பெருவாழ்வு நிறைவதற்குச் சங்கு தீர்த்தம் பெற்று, உட்கொண்டும் தலைமீது தெளித்தும் வருகின்றனர்.

காலப்பருவங்களில் பல மாற்றங்கள் ஏற்படுகின்றன. தட்ப வெட்ப நிலை மாறுபட்டு, மழை குளிர் காரணமாக வெப்ப நிலை இல்லாது, மக்களின் உடல் ஆரோக்கியம் பாதிப்புற்று பற்பல நோய்கள் வரக் காரணமாகின்றன. முன்னேற்பாடாக நோய்களைத் தவிர்க்க ஒவ்வொரு சோமவாரத்தின் போதும் சங்காபிஷேகம் செய்து வந்தனர். இதனால் குளிர் நோய்கள், ஜலதோஷம், இருமல், சுரம், பேதிகள் அணுகாதென முன்னோர்கள் நம்பினார்கள்.

எல்லா உயிர்களும் இறைவனால் படைக்கப் பட்டவை. சிவன் அனைத்திலும் குடிகொண்டிருக்கிறார். மக்கள் நலம்பெற சங்காபிஷேகம் சிறப்பாகத் தொன்று தொட்டு நடத்தி வருகின்றனர்.

சங்குகளில் நிரப்பும் நன்னீரிலே கலக்கப்பட்ட திரவிய வகைகள் கோரோசனை, கஸ்தூரி, பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, சந்தனம், புனுகு, சவ்வாது, அத்தர், விளாமிச்ச வேர், சாம்பிராணி, பன்னீர், பலவிதமான பச்சிலைகள், மலர்கள், தர்ப்பைப் போன்ற குணநலன்களாலும் பூஜிக்கப்பட்ட சங்கு தீர்த்தத்தைப் பருகியும், தெளித்தும் குடல் சம்பந்தமான எவ்வித நோயும் வராமல் காக்கவும், சித்த வைத்திய முறைகளையும் எண்ணிப் பலரும் விரும்பிச் செய்து வருகின்றனர்.

உலக மக்களின் நலத்திற்காக நடத்தப்படுகின்ற சங்காபிஷேகத் திருவிழாவை ஆண்டுதோறும் திருக்கோயில்களில் விஷேசத் திருவிழாவாக நடத்தி வருகின்றனர். அபிஷேகத் தீர்த்தத்தைப் பருகி நலம் பெற விரும்பும் பாக்கியமாக எண்ணி, உள்ளத்தைப் புனிதமடையச் செய்து அம்மையப்பரின் பேரருளைப் பெற்று, பேரானந்தம் பெறுவோமாக.

## சதுரங்க வெண்பா

வெண்பா வேந்தன், கவிதா மணி, சித்திரப் பாவலர், கவிஞர்
வி.இக்குவனம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஆ | 2 டி | 9 வ | 10 ரு | 25 வே | 26 லை | 49 ய | 50 றி |
| 3 டி | 4 ய | 8 ஆ | 11 ள் | 24 ம் | 27 ந | 48 மை | 51 ய |
| 5 வ | 6 ரு | 7 டி | 12 ள | 23 த | 28 ல | 47 ர் | 52 லை |
| 16 ரு | 15 ண | 14 கா | 13 ம் | 22 த் | 29 ன் | 46 நே | 53 வே |
| 17 வே | 18 ல் | 19 நா | 20 டி | 21 நி | 30 பெ | 45 ம் | 54 ரு |
| 36 லை | 35 டி | 34 கூ | 33 க | 32 க் | 31 ரு | 44 கு | 55 வ |
| 37 யி | 38 ல் | 39 ஆ | 40 டி | 41 யீ | 42 ர் | 43 க் | 56 டி |
| 64 றி | 63 ய | 62 லை | 61 வே | 60 ரு | 59 வ | 58 டி | 57 ஆ |

ஆடி யடிவருடி ஆவருள்ளம் காணரு வேல்
நாடி நித்தம் வேலை நலன்பெருக்க - கூடிலையில்
ஆடியீர்க்கும் நேர்மை யறியலை வேருவடி
ஆடிவரு வேலை யறி.

ஆடி அடியினைத் தடவி ஆடும் உள்ளத்து நினைந்து, விரும்பி நாளும் வேலினை நலம் பெருக்கவே கூடினால் நேர்மை வந்திடும். அறியாமை அகன்றிடும். ஆதலால் ஆடிவரும் வேலினை நீ அறிந்திடு!

**படமும் பாடலும்**
**வி. இக்குவனம், சிங்கப்பூர்**
**10-05-2008**

உ
சிவமயம்



# கும்பாபிஷேகப் பெருவிழா

சிவனடியேன் இரா.பரணி குருக்கள்
கங்காதரேஸ்வரர் தேவஸ்தானம்
புரசைவாக்கம், சென்னை.

எங்கும் வியாபகமாயிருக்கும் இறைவனை லோக ஷேமத்தின் பொருட்டும் பசுக்களாகிய மனிதன் ஆணவம், கன்மம், மாயை என்னும் பாசங்களினின்றும் நீங்கி பதியை அடையவும் ஆலயங்களில் சூர்ய சந்திரர்கள் உள்ளவரை பிரசன்னமாக இருக்கப் பண்ணுதலைக் கூறும் முக்கிய வழிபாடாக இருப்பது கும்பாபிஷேகப் பெருஞ்சாந்தி பெருவிழாவாகும்.

நம் பிறவியின் நோக்கம் மும்மலங்களிலிருந்து விடுதலை பெற்று பிறப்பு இறப்பு அற்ற பேரின்ப நிலையாம் முக்திப் பேரின்பத்தைப் பெறுவதே! இந்த மூன்று மலங்களின் பிடியிலிருந்து விடுபடுவதற்கு எல்லாம் வல்ல இறைவனின் கருணையும் அருளும் வேண்டும். அவனது அருளைப் பெறுவதற்கு வேண்டப்படும் வாழ்க்கை முறைகளையும் வழிபாட்டு நெறிகளையும் உண்மைகளையும் தத்துவங்களையும் நமக்குக் காட்டும் வகையில் அமைந்ததே நமது சைவ சமயம்! அப்பெரும் சமயத்தின் முக்கிய அங்கம் வகிப்பது கும்பாபிஷேகப் பெருவிழா. சைவ சமயம் தழைக்க வந்த பெரியோராகிய நாயன்மார்கள் பக்தி இயக்கத்தை அறிமுகப்படுத்தினார்கள். நால்வர்கள் இறைவனை ஆன்மாவிற்குக் காட்டுவதற்காகப் பல ஊர்கள் சென்று அங்கு வாழ்கின்ற மக்கள் துன்பங்களை எல்லாம் போக்குவதற்குத் திருக்கோயில்கள் நிர்மாணித்துப் பல திருமுறைகளை ஓதியும் இறையருள் பெற்றுத் தீர்த்து வைத்தார்கள். இறைவனைப் பக்தியுடனும் சிரத்தையுடனும் கூட்டுப்பிராத்தனை செய்யும் சிறந்த இடமாக விளங்குவது திருக்கோயில்கள். அத்திருக்கோயில்களில் இறைவன் சாந்தித்யமாக இருக்க வேண்டும் என்பதற்காக இறைவனிடத்திலிருந்து இறைவனாலே அருளப் பெற்ற ஆகமங்களிலிருந்துப் பூஜைகளெல்லாம் செய்யப்பட்டு வருவது கும்பாபிஷேகம். பசுவிடம் இருந்து பால் சுரக்கும். ஆனால் அதன் கொம்பையோ அல்லது வாலையோ பிடித்து இழுத்தால் பால் தருவதில்லை. காம்புகளைப் பிடித்து கரந்தால் மட்டுமே பால் வரும். அதுபோல இறைவன் எங்கும் இருக்கின்றான். ஆனால் அவனது அருள் பெறக்கூடிய இடமாக விளங்குவது திருக்கோயில்கள். இறைவன் அருள்பெற்றவர்கள் மட்டுமே இறைவனை வணங்கினால் அற்புதம் விளைவிக்கின்றன. நாம் வணங்கினால் அவ்வாறு அற்புதம் நேராது என்று பலர் எண்ணம். ஆனால் நம்பிக்கையுடனும் பயபக்தியுடனும் பொருளுணர்ந்து அவற்றை வணங்கி வந்தால் இன்றும் நாம் அந்தப் பயன்களைப் பெறலாம் என்பது உண்மையிலும் உண்மை.

ஜீவராசிகள் அனைத்திற்கும் சிவகடாஷம் பரிபூரணமாகக் கிடைக்க இறைவனை வேண்டுகிறேன்.!!!
நன்றி.

'சிவாகமப்ரவீணா'
'வேத சிவாகமவிசஷணா'



# செந்தமிழ்க் குமரனெமைக் காப்பான்

முகிலரசன், ஈப்போ

வேண்டிடும் பக்தர்தம் வெந்துயர் தீர்த்தவர்
விதியையும் மாற்றி வைப்பான்
வீழ்ந்(து) அவன் அடியினைப் பற்றியர் பிறவியை
மீட்டவன் அறுத்து வைப்பான்
ஆண்டிடும் பழநியில் அன்பரின் பிணியற
அமிர்தமாய் மருவி நிற்பான்
அயராது உழைத்திடும் தமிழரெம் வாழ்வினில்
அகலினை ஏற்றி வைப்பான்
தீண்டிடும் அயல்வேலைத் திண்ணமாய்ப் பாய்ச்சுவான்
தீங்கெமக் கிழைப்போர் நெஞ்சில்
சீர்மிகு சித்திய வான்நகர் ஓச்சிடும்
செந்தமிழ்க் குமரனெம் முருகன்

திருப்பணி கண்டிடும் சிறப்(பு) அவை அன்பர்தம்
திருப்பணி நிலைத்து வாழ்க!
திருப்புகழ் அருளிய அருணையின் அடியர்தம்
திருப்புகழ் பரவச் செய்ய
திருவிழா எடுக்கும்நல் திருநாவுக் கரசுவின்
திருத்தொண்டு நிலைத்து வாழ்க!
சிறுபெரு தொண்டுகள் சிறப்புற ஆற்றிட
தேர்ந்தநல் தலமாய் அமைந்த
திருத்தலம் இதுவென சரித்திரம் பகன்றிட
திருவருள் புரிந்த அவனே
சீர்மிகு சித்திய வான்நகர் ஓச்சிடும்
செந்தமிழ்க் குமரனெம் முருகன்

கூலியாய் வந்தவர் கூலியாய் நிலைபெற
குறுமதிக் குருடரோ தமிழர்
குருதியும் வியர்வையும் குலவிச்செம் மண்ணிலெம்
குழவியாய் வளர்ந்த செல்வம்
நாணிக் கையேந்தி சலுகைபெற நாமென
அடிமையோ பிறந்த நாட்டில்
நாமின்றி நாடேது நாளறிந்த வரலாறு
நமதுரிமை கேட்டுப் பெறுவோம்
தேனினிமை இனத்தவர் திருவாழ்வு திளைத்திட
சேவடி பணிந்தால் காப்பான்
சீர்மிகு சித்திய வான்நகர் ஓச்சிடும்
செந்தமிழ்க் குமரனெம் முருகன்

தித்திக்கும் தமிழ்க்கல்வி திக்கெங்கும் தமிழ்ப்பள்ளி
தீர்க்கமாய் சமயம் வெல்ல
திரண்டதோர் சக்தியாய் நாமிங்கு ஒன்றிணைந்தால்
சிறுநரிக் கூட்டம் ஒதுங்கும்
சித்தாந்த சாதிசங்க சிதறல்கள் ஒன்றானால்
சிறுஇனம் உயர்ந்து வாழும்
சிறியதொழில் பெரியதொழில் சிகரத்தில் தமிழனன்று
செட்டுடன் வாழ்ந்தான்: அரச
சித்தாந்தம் அறியாமல் தவறிழைத்த அவன்மீண்டு
சிகரமும் தாண்ட வேண்டும்
சீர்மிகு சித்திய வான்நகர் ஓச்சிடும்
செந்தமிழ்க் குமரனெமைக் காப்பான்!



# அருணகிரிநாதரின் திருப்புகழில் சைவ சித்தாந்தம்.

முனைவர் பழ. முத்தப்பன்,
முதல்வர்,
செட்டிநாடு கலை அறிவியல் கல்லூரி,
திருச்சி - 9.

பதினைந்தாம் நூற்றாண்டின் வரலாற்றிற்குப் பெருமை தந்தவர் அருணகிரிநாதர். வாழ்வியல் சூழலின் காரணத்தால் உலக வாழ்வை நீக்கக் கருதிய அருணகிரிநாதருக்குத் திருமுருகன் அருள் பாலித்தார் என்பது அந்நூற்றாண்டு வரலாற்றுச் செய்தி. இதற்கு அவரின் 'மனையவள் நகைக்க' என்று தொடங்கும் திருப்புகழ் சான்றாகத் திகழ்கிறது.

அத்திருப்புகழில் 'சேமம் இதுவே என்று அடியனும் நினைத்து நாளும் உடல் உயிர் விடுத்தபோது அணுகிமுன் அளித்த பாதம் அருள்வாயே' என்ற பகுதி மேற்சான்றிற்குரிய பகுதியாகும். எனவே தெய்வத் திருமுருகன் திருவருள் பெற்ற அருணகிரிநாதர் பாடல்களில் சைவ மணம் கமழ்வது இயல்பாகும். சிவன் வேறு முருகன் வேறு அல்ல என்று கச்சியப்பர் கந்த புராணத்தில் வலியுறுத்துவது போல - திருப்புகழில் அருணகிரிநாதர் திருமுருகன் வடிவில் சிவ பரம்பொருளைக் காணுகிறார். அந்த அடிப்படையில் திருப்புகழில் காணப்படுகின்ற சித்தாந்தக் கருத்துகள் சிலவற்றை நினைவூட்டுவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**முப்பொருள் நிலை:**

சைவ சித்தாந்தக் கொள்கையில் அடிப்படையாக விளங்குவது முப்பொருட் கொள்கையாகும். 'பதியினைப் போல்பசு பாசம் அநாதி' என்பது சித்தாந்தக் கொள்கை. எனவே இறை, உயிர், தளை என்ற மூன்று பொருள்களே உண்மை என்றும், அவை எக்காலத்தும் நிலையானவை என்றும் வரையறுத்துக் காட்டுவது சித்தாந்தமாகும். இம்முப்பொருள் பாகுபாட்டை,

'ஏதும் சில அறியா ஏழை நான் உன்
பதிபசு பாச உபதேசம் பெறவேணும்' (பாடல் 56)

என்று 'அரிமருகோனே' எனத் தொடங்கும் திருப்புகழில் முப்பொருளைப் பற்றிய குறிப்புகளைக் காட்டுகிறார் அருணகிரிநாதர். அதுபோல 192-ம் பாடலில்,

'கதிபெற ஈடுஅறாதன பதி பசு பாச மானவை
கசடற வேறுவேறு செய்து அருள்வாயே'

என்று குறிப்பிட்டு, தான் அருள் பெற முப்பொருள் விளக்கம் தருவாய் என்று கூறிச் சித்தாந்தக் கோட்பாட்டை நினைவு படுத்துகிறார்.

முப்பொருளில் முதன்மையான பொருளாய் விளங்குவது பதி என்னும் இறைப் பொருளாம். இறைவனைப் பற்றிய செய்திகளை வரையறுத்துக் கூற இயலாது. எனவேதான் இறைவனை எல்லாம் கடந்தவன் என்ற பொருளில் கடவுள் என்று குறிப்பிடுகிறோம். என்றாலும் சித்தாந்தம் அவனின் இயல்புகளை எடுத்துரைக்கிறது. சாத்திர நூல்களில் ஒன்றான திருவருட்பயன் பதிமுனைநிலை என்ற தலைப்பிட்டு இறைவனின் தன்மைகளை எடுத்தியம்புகிறது.

'அகர உயர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து' (பாடல் 1)

என்பது முதற்பாடல். அகர உயிரொலி எல்லா எழுத்துகளிலும் கலந்து யாவற்றிற்கும் முதலாக இருப்பதுபோல் தனக்குவமை இல்லா இறைவனும் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து நிற்கிறான் என்பது இதன் பொருள். இதனை அருணகிரிநாதர்,

'அகரமும் ஆகி அதிபனும் ஆகி அதிகமும் ஆகி அகமாகி
அயன்என ஆகி அரிஎனஆகி அரன்எனஆகி அவர்மேலாய்' (பாடல் 3)

என்று குறிப்பிடுகிறார். இப்பகுதியில் அகரம் போல் எல்லாப் பொருளிலும் இறைவன் இருக்கிறான் என்பதோடு அல்லாது படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலைச் செய்யும் பொழுது அவ்வவ்வடிவாய் இருக்கும் இறைவன் அவ்வடிவங்கட்கு மேலாய் தனிப்பெரும் முதல்வனாய் உள்ளான் என்ற சித்தாந்தக் கொள்கையை 'அவர்மேலாய்' என்ற தொடரால் புலப்படுத்தி விடுகிறார்.

இறைவன் அருள் வழங்கும் நிலையில் சத்தி வடிவாய் விளங்குவான் என்பது சித்தாந்தக் கொள்கையாகும். அச்சக்தியும் இறைவனிடத்தில் பிரிப்பின்றி நிற்கிறது என்பதும் அதன் கொள்கையாகும். இதனைச் சிவநாதபோதம், 'அவையே தானே செய்' என்றும், 'நீக்கமின்றி நிற்குமன்றே' என்றும் இரண்டாம் சூத்திரத்தில் குறிப்பிடும். இதனை அடியொற்றியே அருணகிரியாரும் முருகனைக் குறிக்கின்ற பொழுதெல்லாம் வள்ளி, தெய்வானையாம் இச்சா, கிரியா சத்திகள் பிரிவின்றி நிற்கின்றான் என்று குறிப்பிடுவார்.

'அமுதத் தெய்வானை திருமுத்திமாதின் மணவாளா' இப்பகுதியில் திருமுத்திமாது என்று அருள் வழங்கும் (பாடல் 441) தெய்வானை என்று குறிப்பிட்டிருப்பது நினைவு கூறத் தக்கதாகும்.

'தெய்வ வள்ளி மையல் கொள்ளும் செல்வப் பிள்ளை முருகோனே' (பாடல் 841) என்று குறிப்பிடுவதும் தத்துவ அடிப்படையாக விளங்குவதாகும். இவ்வாறு திருப்புகழில் இடம் பெற்றுள்ள இறை குணங்களை ஆய்வு செய்துகொள்ள முடியும்.

இறைவனாம் பதிக் கொள்கைக்கு ஏற்ப ஆன்மா பற்றிய பசுக் கொள்கையையும் திருப்புகழில் அருணகிரியார் குறிப்பாகக் காட்டுகிறார். ஆன்மா இருவினையால் இன்ப துன்பத்தை அனுபவிக்கிறது. பல பிறப்புகளைப் பெற்று - அதற்கேற்ப உடம்புகளைப் பெறுகிறது. உடம்பு அழியும். உயிர் அழிவதில்லை என்பன போன்ற தத்துவங்கள் எல்லாம் திருப்புகழில் குறிப்பாகக் காட்டிச் செல்கிறார் அருணகிரியார். விதி வழி உடம்பு கிடைக்கிறது என்பதைப் பல இடங்களில் அருணகிரியார் குறிப்பிடுகிறார்.

'விதி வழி ஒழுகு மைவரு மெய்க்குரம்பை' (பாடல் 16) என்பதில் உடம்பு வினையின் வழி வருகிறது என்பது குறிக்கப் பெறுகிறது. உடம்பு எடுக்கும் பிறப்பு பற்றிக் குறிப்பிடும் போது, 'வெள்ளம் எனக் கலந்து நூறாயிரம் பேதம் சாதம் ஒழிந்தவா தான்' (பாடல் 1253) என்று எண்பத்துநான்கு நூறாயிர பேதமாய்ப் பிறப்பு அமையும் என்கிறார். உடம்பு உயிருக்குள் எவ்வாறு உருவாகிறது என்பதைப் பரிணாம வளர்ச்சியாய்க் காட்டுகிறார் அருணகிரியார்.

' புவிபுனல் காலும் காட்டி, சிகியொடு வானும் சேர்த்தி
புதுமன மானும் பூட்டி யிடையூடே
பொறிபுலன் ஈறைந்தாக்கிக் கருவிகள் நாலும் காட்டி
புகழ்வழி நாலைந்தாசக்கி வருகாயம்' (பாடல் 1023)

'மண், நீர், காற்று இவற்றைக் காட்டியும் நெருப்பு, வான் இவற்றைச் சேர்த்தும், புதுமை வாய்ந்த மனம் என்னும் குதிரையைப் பூட்டியும் இவற்றுடன் ஐம்பொறி என்னும் பத்துப் பொருளை ஆக்கியும் மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கு கருவிகளைப் பிணைத்தும் ஒன்பது வாயில்களை உண்டு பண்ணியும் வரும் காயம் என்பது இப்பகுதியின் பொருள் ஆகும். இப்பகுதியில் சித்தாந்தக் கருத்துகளின் அடிப்படையில் உடம்பின் நிலையை அருணகிரியார் சுட்டிக் காட்டுவது மிகச் சிறப்பாகும். இந்த உடம்பிற்கு வரும் நோயினைப் பற்றிப் பிறித்தோர் இடத்தில் அருணகிரியார் பட்டியலிட்டுக் காட்டுகிறார்.

' இருமலும் ரோக முயலகன் வாதம் எரிகுண நாசி விடமேநீர்
இழிவு விடாத தலைவலி சோகை எழுகள மாலை இவையோடே
பெருவயிறு ஈளை எரிகுலை சூலை பெருவலி வேறும்உள நோய்கள்
பிறவிகள் தோறும் எனை நலியாதபடி அருள்வாயே' (பாடல் 21)

இவ்வாறு உயிர் பெறும் உடல் நிலைகளைப் பற்றி அருணகிரியார் குறிப்பிடுவது தத்துவ அடிப்படையைக் காட்டுகிறது எனலாம்.

பாசம் பற்றிய தத்துவக் கருத்துகள் திருப்புகழில் மண்டிக் கிடக்கின்றன. மும்மலங்கள் பற்றிய குறிப்புகள் பல பாடல்களில் காணப் பெறுகிறது.

'ஆணவம் மாயை கருமம் மலங்கள் போய்
உபதேச குருபர சம்ப்ரதாய மொடு ஏயு
நெறியது பெறுவேனோ. (பாடல் 310)

என்ற பகுதியில் மும்மலங்கள் நீங்க அருள் வேண்டுவதைக் காணமுடிகிறது.

'திரோத மலம் ஆறும் அடியார்கள் அருமாதவர் தியான
முறும்பாதம் தருவாயே' (பாடல் 89)

என்ற பகுதியில் திரோதமலமாம் மறைத்தல் மலம் குறிக்கப் பெறுகிறது. எனவே சித்தாந்தக் கோட்பாட்டின்படி ஐந்து மலங்களையும் அருணகிரியார் குறிப்பிடுகிறார் எனலாம்.

தத்துவங்கள் என்ற அமைப்பு வாழ்வியலின் பின்புலங்கள் என்பது சித்தாந்தத்தின் கோட்பாடாகும். ஐம்பூதங்கள், ஐம்புலன்கள், அவை உணரும் ஐவகை உணர்வுகள் ஆகியவற்றைத் தத்துவ நிலைகளாக்கி, அவை 36 எனக் குறிப்பிட்டு, முப்பத்தாறின் அடிப்படையில் உலகம் இயங்குகிறது என்பது சித்தாந்தம் தரும் விளக்கமாகும். முப்பத்தாறு தத்துவங்கள் பற்றி அருணகிரியார் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

முப்பத்தாறு தத்துவங்கள் கொண்ட உலகப் பொருள்கட்கு அப்பாற்பட்டவன் இறைவன் என்பதைக் குறிப்பிடும் பொழுது,

'ஆனாத பிருதிவிப் பாச நிகளமும்
மாமாய இருளும் மற்று ஏகி பவமென
ஆகாச பரம சிற்சோதி பரையை யடைந்துளோமே
ஆறாறின் அதிகமகராய அனுதினம்
யோகியர் எவரும் எட்டாத' (பாடல் 155)

என்று குறிப்பிட்டு 36 தத்துவங்கட்கு அப்பாற்பட்டவன் என்று குறிப்பிடுகிறார். அதுபோலப் பிறிதோர் இடத்தில் அம்முப்பத்தாறு தத்துவங்களின் வளர்ச்சியாகத் தாத்துவிகத் தொகை 96 என்ற பரிணாமத்தினையும் அருணகிரியார் குறிப்பிடுகிறார்.

'ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும்
ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும்
ஆறுமாய சஞ்சலங்கள்' (பாடல் 151)

'தத்து நாற்பத்தெட்டு நாற்பத்தெட்டும் ஏற்று
திடமேவும் தர்க்க சாத்ரத் தக்கமார்க்கச்
சத்திய வாகயப் பெருமானே' (பாடல் 31)

என்ற பகுதிகள் 96 தத்துவங்களாக உலக நிலை விளங்குகிறது, இவற்றைக் கடக்க அருள்புரிவாயே என்கிறார் அருணகிரியார்.

வினை பற்றிய நிலைகளைப் பலவாறு திருப்புகழில் அருணகிரியார் குறிப்பிடுகிறார். பிராரத்த வினை, சஞ்சித வினை, காமிய வினை ஆகிய மூன்று நிலைகளையும் அருணகிரியார் குறிப்பிட்டு, சஞ்சித வினை தாக்காமல் காத்தருளப் பல இடங்களில் வேண்டுகிறார்.

'பண்டேற்ற பழவினைபாவம் தீர்த்து அடியேனைப்
பரிவொடு நாளும் காத்து' (பாடல் 1244)

என்ற பகுதியில் சஞ்சித வினை - பழவினை என்ற சொல்லால் குறிக்கப் பெறுகிறது. மேலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற சித்தாந்தக் கருத்தை,

'சரியை யாளரசக்கும் கிரியை யாளர்க்கும்
நற் சகல யோகர்க்கும்' (பாடல் 650)

'சரியையிற் கிரியை யற்தவமும்' (பாடல் 218)

என்ற பாடல் பகுதிகளிள் குறிப்பிடுகிறார்.

சைவ சித்தாந்தக் கோட்பாடுகளில் ஐந்தெழுத்து அருள்நிலை மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்.

'பிணி இவை வேரோடு சிந்திக் குலைய
நமசிவாயோம் என கொஞ்சிக் களிகூற' (பாடல் 510)

'ஓம் நமசிவாய குரு பாதம் ஓத' (பாடல் 709)

'அவுணன் தெறித்து மங்க சிவமஞ்செழுத்தை
முந்த விடுவோனே' (பாடல் 972)

என்று வாய்ப்பு நேரும் போதெல்லாம் பாடி மகிழ்கிறார் அருணகிரியார்.

இவ்வாறு திருப்புகழில் இடம் பெற்ற சைவ சித்தாந்தக் கொள்கைகளை ஆய்வு செய்து கொண்டே சென்றால் அது விரிந்து கொண்டே செல்லும் என்பதால் குறிப்பாகச் சில செய்திகளே தரப் பெற்றுள்ளன. மேலும் திருப்புகழ் அமிழ்தத்தில் தத்துவப் பொருளைக் கண்டு மகிழ முயல்வோமாக.

**(இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ள பாடல் எண்கள் சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்ட திருப்புகழ் பதிப்பில் இடம் பெற்ற எண்களாகு ம்.)**

ஓம் சிவாயநம



# கந்தரலங்காரத்தில் சைவசித்தாந்தம்

பேராசிரியர் முனைவர் சொ. சொ. மீ. சுந்தரம்

**முன்னுரை**

"ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார்? -வையகத்தோர்
சாற்றரிது என்று அசற்நுர்- தன் அனையாய்! முக்கண் எந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டினான்".

என்பது அருணகிரிநாதர் புகழ்பாடும் தாயுமானவர் திருவாக்கு. பதி, பசு, பாசம் இவை மூன்றும் யாராலும் உண்டாக்கப்படாமல் என்றும் அநாதியாய் இருப்பவை. பதியினைப்போலவே பசுவும் பாசமும் அநாதி. பதியாகிய இறைவனை விட்டுப் பாசமாகிய மலங்களைப் பற்றிக் கொண்டு பசுவாகிய ஆன்மா உலக இன்பங்களில் உழன்று கொண்டிருக்கிறது. மலங்களைப் பற்றிக்கொண்டு இருக்கும்வரை ஆன்மா இறைவனை அடைய முடியாது. இறைவன் தன் திருக்கருணையினை ஆன்மாவுக்கு உபதேசம் செய்து ஞானம் கொடுத்துப் பக்கத்தில் வந்தால், பசுவை விட்டுப் பாச மலங்கள் அற்றுப் போகும். இதுதான் சைவ சித்தாந்தச் சுருக்கம்.
இக்கருத்தை

பதிபசு பாசம் ஏனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றனு காப்பசு பாசம்
பதியினு கில்பசு பாசம்நில் லாவே.

என்று திருமூலர் குறிப்படுகிறார். இதையே தென்முகக் கடவுளான தெட்சிணாமூர்த்தி சொல்லாமல் சொன்னார். இதை மனத்தில் கொண்டே தாயுமானர் "சொல்லரிய சித்தாந்தத்தை நான்கு திசைகளிலும் உள்ள மக்கள் அனைவரும் புரிந்து கொள்ளுமாறு, மூன்று கண்களையுடைய எந்தையாகிய சிவபெருமான் சின்முத்திரை என்று ஞானிகள் பாராட்டத் தன் கைகளினால் சுட்டிக்காட்டினான். தனக்கொப்பார் இல்லாத அருணாகிரி நாதா! என் அப்பனே! நீயும் இதே கருத்தை உணர்த்தினாயே! உன்போல மெய்யான சொற்களை உலகமக்கள் உய்யும்படி வேறு யார் கூறினார்கள்? என்று அருணகிரியாரைப் பாராட்டுகிறார்.

தான்பெற்ற பேரின்பத்தை உலகமக்கள் அனைவரும் பெறவேண்டும் என்று நினைத்த தனிப்பெருங்கருணையினால் முருகப் பெருமான், தனக்கு உரைத்த ஞானமொழிகளை நமக்குரைத்தார் அருணாகிரியார். " சும்மா இரு சொல்லற" என்ற இந்த உபதேசத்தையே "மெய்யாக ஓர் சொல் விளம்பினர்" என்கிறார் தாயுமானர். இறைவன் ஆட்டுவிப்பவன் அவன் ஆட்டுவித்தால் நாம் ஆடுகின்றோம். பாட்டுவித்தால் பாடுகிறோம். கூட்டுவித்தால் கூடுகிறோம், ஓட்டுவித்தால் ஓடுகிறோம். நம்மால் ஆவது எதுவும் இல்லை. இதை உணர்ந்து மனமடங்கிய நிலையில் சும்மா இருப்பதுவே இறைவனை அடையும் வழியாகும். இந்த உபதேசம் கிடைத்ததும் அருணாகிரியார் பெற்ற பேரின்பம் அளக்க முடியாதது. எதையெல்லாம் மெய்யான இன்பம் என்று எண்ணினோமோ அவையெல்லாம் பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போய்விட்டன. இந்த இன்பம் எப்படி இருந்தது என்பதைக் கந்தரலங்காரத்தில்

தேனென்று பாகென்று உவமிக்கொணாமொழித் தெய்வ வள்ளிக்
கோன் அன்று எனக்கு உபதேசித்தது ஒன்றுண்டு கூறவற்றே?
வானன்று, காலன்று, தீயன்று நீரன்று, மண்ணுமன்று,
தானன்று, நானன்று, அசரீரியன்று, சரீரியன்றே

என்று உருகிப்பாடுகிறார் அருணகிரியார். இது இல்லை இது இல்லை என்று சொல்லத் தெரியவில்லை. அது வெல்ல முடியா வினையை மாய்க்கும் சொல்ல முடியாச் சுகம் ஆகும்.

**கந்தரலங்காரம்**

இது மிக மிக இனிமையான நூல். பக்திச்சுவை சொட்டப் பாடப்பெற்றது. இதைப்படித்தால் நாத்திகனும் பக்திமானாவான். அருணகிரிநாதர் தன் அனுபவங்களை அப்போதைக்கப்போது பாடினார். அவருடைய மனமும் தவமும் நின்ற வழியே சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி பாடப்பெற்ற தனிப்பாடல்கள் பின்னால் தொகுக்கப்பெற்றன.

காப்புச் செய்யுள் ஒன்று, நூலில் உள்ளவை நூறு, பலன் கூறும் பாடல் ஒன்று தனிச்செய்யுள்கள் ஆறு என்று மொத்தம் 108 கட்டளைக் கலித்துறைகளைக் கொண்டு கந்தனுக்கு அலங்காரம் செய்கிறார் அருணகிரியார். முருகப்பெருமான் வேலை மறந்தாலும் மறப்பானே தவிரக் கந்தரலங்கார நூலை மறக்கமாட்டான். இது சைவ சித்தாந்தத் திறவுகோல் ஆகும். அருணகிரியார்; திருப்புகழ், திருவகுப்பு, கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி என்று ஐந்தெழுத்துப் போல ஐந்து நூல்களைப் பாடியவர். இவற்றுள் திருப்புகழ் பாடுவது திருச்செந்தூர்க் கடலில் குளிப்பது போன்றது. திருவகுப்புப் பாடுவது காசியில் கங்கையில் குளிப்பது போன்றது. சுந்தரந்தாதி பாடுவது இராமேஸ்வரத்தில் கோடி தீர்த்தத்தில் நீராடுவது போன்றது. கந்தரலங்காரம் படிப்பது கங்கையை விடப் புனிதமான திருச்சிராய்ப் பள்ளிக் காவிரியில் குளிப்பது போன்றது. கந்தர் அனுபூதி படிப்பது திருவண்ணாமலைக் குளத்தில் குளிப்பது போன்றது. நீரால் உடம்புத் தூய்மையுறும். இவற்றைப் படித்தால் அகத்தூய்மை உண்டாகும்.

**திருவாசகமும் கந்தரலங்காரமும்**

சிவனுக்குத் திருவாசகம். குகனுக்குக் கந்தரலங்காரம். சிவபெருமானுக்கும் சிவனடிமையார்களுக்கும் மிக மிகப் பிடித்த நூல் தேனை விட மிஞ்சிய திருவாசகம். முருகனுக்கும் முருகன் அடியார்களுக்கும் மிக இனிப்பது கந்தலங்காரம். திருவாசகத்துக்கு விளக்கம் கந்தரலங்காரம். இறைவனைத் தனித்துணை என்கிறார் மணிவாசகர். "தனித்துணையான நீ இருக்கும் போது உன்னைப் பற்றாமல் வினையையே துணையாகக் கொண்டு வாடும் என்னை விட்டு விடாதே. நான் காலால் நடக்காமல் தலையால் நடக்கும் ஆணவக்காரனாகி விட்டேன். எனக்கு மனத்துணை நீ வாழ்முதல் நீ. இந்தத் துயரமிக்க உடம்பாகிய கட்டிலிருந்து என்னை விடுவிக்கத்

தனித்துணை நீ நிற்க யான் தடுக்கித் தலையால் நடந்த
வினைத்துணையேனை விடுதி கண்டாய் வினையேனுடைய
மனைதுணையே! என்றன் வாழ்முதலே! எனக்கு எய்ப்பில் வைப்பே!
தினைத்துணை யேனும் பொறேன் துயராக்கையின் திண்விலையே

என்பது திருவாசகம் நீத்தல் விண்ணப்பத்தில் உள்ள 39 ஆவது பாடல் ஆகும். கந்தரலங்காரத்தில் 70 ஆவது பாடலில் தனித்துணை என்ற திருவாசகச் சொல்லுக்கு விளக்கமளிப்பது போல

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மென்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனும் நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளாம் பயந்த தனி
வழிக்குத் துணைவடி வேலும் செங்கோடன் மயூரமுமே

என்று பாடுகிறார் அருணாகிரியார். தனித்துணை என்ற சொல்லுக்கு, யாரும் துணைக்கு வரமுடியாத பயந்த தனி வழிக்குத்துணை என்று விளக்கமளிப்பது குறிப்பிடத்தக்கது.

**தம்முதல் குருவுமாய்**

வடிவில் மிகமிகச் சிறியதும் ஆழத்தில் மிகமிகப் பெரியதுமான நூல் மெய்கண்டார் அருளிய சிவஞான போதம். சந்தானக் குரவர்களில் முதலாவதாக வைத்துப் பாராட்டப் பெறும் மெய்கண்டார், வைசசித்தாந்தத் திறவுகோலாக இந்நூலை இயற்றினார். பதி பசு பாச இயல்புகளைத் தெளிவாகக் கூறும் இந்நூலில் எட்டாம் சூத்திரம் இறையருளால் தவநெறியில் ஈடுபட்டு நிற்கும் ஆன்மாவின் இயல்பைக் கூறுகிறது.

"ஐம்புல வேடரின் அயர்ந்தினை வளர்ந்தென,
தம்முதல், குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த, விட்டு,
அன்னியம் இம்மையின் அரன்கழல் செலுமே"

என்பது எட்டாம் சூத்திரம் ஆகும். ஆன்மா தவத்தில் ஈடுபட்டு நிற்கும்போது இதுவரை தோன்றாத் துணையாயிருந்த முதல்வன், குருவாகவும் தோன்றி மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐந்து வேடர்களுக்கு இடையில் வளர்ந்து தளர்ந்தாய் என்று அறிவிப்பான். ஆன்மா அந்த ஐவரை விட்டு விலகி இறைவனோடு அன்னியமாகத் தன்மையில் அவன் திருவடி நிழலில் செல்லும் என்பது இதன் பொருள். கந்தரலங்காரத்தில் இவற்றுக்கு விளக்கம் தருகிறார் அருணாகிரியார். ஐம்புல வேடரால் அயர்ந்ததை,

"குப்பாச வாழ்வில் கூத்தாடும் ஐவரில் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை ஈடேற்றுவாய்" (14)

என்கிறார். கு என்றால் உலகைப் பாசம் என்பதால் கட்டுவது. உலக சுகமான மாயவாழ்வே குப்பாச வாழ்க்கை. இதில் தவிக்கிறோம். மனம் பாச வலையில் பட்டுத் தவிக்கிறது. செம்பில் களிம்புபோல் உயிர்களுக்கு உள்ளது பாசம். இப்பாசம் இறைவனால் தான் நீங்கும். இதனாலேயே முருகனுக்குப் பாசநாசன் என்று பெயர்,

"இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
அசிடார்களோ பாச நாசனே"

என்பது திருவிடைமருதூர்த் திருபுகழ், இனி, தம் முதல் குருவுமாய் என்றபடி இறைவன் குருவாக வந்து அருனாவான் என்பது அருணகிரி வாழ்வில் நடந்தது. திருவண்ணாமலையில் கோபுரத்திலிருந்து கீழே விழுந்தார் அருணகிரியார். முருகன் நிலத்தில் நின்று கைகளால் தாங்கிப் பிடித்துக் கொண்டான். அப்பரடிகளை நீர்தாங்கியது. அருணகிரியை நிலம் தாங்கியது- இல்லை நிலத்தில் நின்ற முருகன் தாங்கினான். தாங்கியது மட்டுமல்ல. குருவாய் வருவாய் அருள்வாய் குகனே என்று அருணகிரி பாடுவது போல குருவாய் வந்து திருவடி தந்தான். அவர் உள்ளம் மகிழக் குடிகொண்டான். இதைக் கந்தரலங்காரத்தில்,

"திருவடியும் தண்டையும் சிலம்பும் சிலம்பூடுருவப்
பொருவடி வேலும் கடம்பும் தடம்புயம் இரண்டும்
மருவடி வான வதனங்கள் றும் மலர்க்கண்களும்
குருவடிவாய் வந்தென் உள்ளங் குளிரக் குடிகொண்டவே" (102)

என்று பாடுகிறார்.

**வினைத்தொகுதி - மும்மலம் - பிறவிக்கடல்**

நாம் செய்த நல்வினை தீவினைகள் கணக்கற்றவை. இந்த வினைகளின் தொகுப்பு சஞ்சிதம் எனப்படும். இவற்றிலிருந்து இப்பிறவியில் அனுபவித்துத் தீர்ப்பதற்காக நாம் எடுத்து வந்த வினைகள் பிராப்தம் எனப்படும். இப்பொழுது செய்யும் நற்செயல் தீச்செயல் இவற்றின் விளைவாக வரும் வினை ஆகாமியம் எனப்படும். இம்மூன்று வினைகளும் மலைபோன்றவை. இவை கிரௌஞ்சமலை என்று கந்தபுராணத்தில் உருவகிக்கப்படுகின்றன.

முருகனை எதிர்த்த சூரன், சிங்கன் தாருகன் மூவரும் ஆண் கன்ம மாயையாகிய மும்மலங்கள். சூரன் ஒளிந்துகொண்ட கடல் நம் பிறவிக்கடல். இவையனைத்தையும் வென்று நம்மைக் காப்பாற்றக் கூடியது பதிஞானமாகிய வேல். இந்த வேலைத்தாங்கிய வேலன் செய்த உபதேசத்தால் பஞ்ச பூதங்களும் இல்லாத இடத்தைக் கண்டேன். அது சொல்லற்று நிற்கும் சுகநிலை. அது பேசா அனுபூதி. அங்கே உணர்வு, உடல், உயிர், உபாயம் எல்லாம் அற்று, கரையில்லாப் பேரின்பம் கிடைத்தது. ஆணவ இருள் போனது. எனது யான் எனும் அகப்பற்றும் புறப்பற்றும் அற்றுப்போக அவனையே பற்றி நின்றேன் என்று இந்தப் பேரின்ப அனுபவத்தைக் கந்தரலங்காரத்தில்,

"வரையற்று அவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்தவா! பஞ்ச பூதமும் அற்று
உணர்வற்று உயிரற்று உபாயமற்றுக்
கரையற்று இருளற்று எனதற்று இருக்குமக் காட்சியதே" (61)
என்று பாடிப்பாடிப் பரவசமடைகிறார் அருணகிரியர்.

**யான் தான் எனல் அறல்**

நான் என்பது அகப்பற்று. எனது என்பது புறப்பற்று. அகப்பற்றுத் தொலைய வேண்டுமானால் முதலில் புறப்பற்றுத் தொலைய வேண்டும். ஒரு சப்பாத்திக்கள்ளிச் செடியைச் சுற்றிலும் தாழங் காடு உள்ளது. சப்பாத்திக்கள்ளியை அழிக்க வேண்டுமானால் தாழங்காட்டை அழிக்க வேண்டும். சப்பாத்திக்கள்ளி நான் என்ற அகப்பற்று; தாழங்காடு எனது என்ற புறப்பற்று. எனது என்ற புறப்பற்றுத் தொலைந்த பின்னரே நான் என்ற அகப்பற்று தொலையும்.

"எனதி யானும் வேறகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவ னாதீதம் அருள்வாயே"

என்பது திருப்புகழ்.

"யான் என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்"

என்பது திருக்குறள். 61 ஆவது அலங்காரத்தில் எனதற்ற நிலையை அடைந்ததாகக் கூறும் அருணகிரியார் 95 ஆவது அலங்காரத்தில் அருள் நெறியில் வந்து கூட வேண்டுமானால் யான், தான் இரண்டும் கெட வேண்டும். இது சத்தியம் என்கிறார்.

"யான்தான் எனும்சொல் இரண்டும்கெட் டாலன்றி யாவருக்கும்
தோன்றாது சத்தியம் தொல்லைப் பெருநிலம் சூகரமாய்க்
கீன்றான் மருமகன் முருகன்க்கு பாகரன் கேள்வியினால்
சான்றாடு மற்ற தனிவெளிக்கே வந்து சந்திப்பதே"

என்ற இப்பாடல் அனுபவத்தின் விளைவாக வந்த அற்புதப் பாடல். யான்வேறு தான்வேறு என்ற துவிதபாவம் மறைந்து அத்துவிதமாய்க் காணும் அனுபவம் இப்பாடலில் கூறப்படுகிறது. இதையே கந்தரனுபூதி,

''யானாகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலைநின் றதுதற் பரமே''

என்று குறிப்பிடுகிறது. கண்ணொளியும் கதிரொளியும் கலப்பதுபோல ஆன்மாவும், பதியும் கலந்து ஒன்று படும் நிலை இது. இந்நிலையில் யான் என்பது இல்லாமல் இறைவனோடு கலந்துவிடும். இந்த இன்ப அனுபவத்தைப் பெற்ற தாயுமானார்.

''யானெனல் காணேன் பூரண நிறைவில்
யாதினும் இருந்தபே ரொளிநீ
தானென நிற்கும் சமத்துற என்னைத்
தன்னவன் க்கவும் தகுங்காண்''

என்று பாடுகிறார். அருணகிரியார் பாடிய இந்த அலங்காரப் பாடல் தாயுமானவரை அதிகமாகக் கவர்ந்திருப்பதால்,

''யான்தான் எனல்அறலே இன்பநிட்டை என்று அருணைக்
கோன்தான் உரைத்தமொழி கொள்ளாயோ- தோன்றி
இழுக்கடித்தாய் நெஞ்சேநீ என்கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய்''

என்று இந்த அலங்காரப் பாடலைப் போற்றிப் பாராட்டிப் பாடக் காண்கிறோம்.

**நிணங்காட்டும் கொட்டில் (அலங்காரம் 42 வது பாடல்)**

இந்த உடம்புக்கு அருணகிரியார் வைத்த பெயர் நிணங்காட்டும் கொட்டில். கொழுப்புடன் கூடிய தசைகள் மிகுந்த மாட்டுத்தொழுவம் என்பது இதன்பொருள். பாசத் தளையினால் கட்டப்பட்டதால் ஆன்மாவுக்குப் பசு என்று பெயர் வைத்தனர். சைவசித்தாந்திகள் மாடு நாலுவில் மனிதன் இரண்டு கால் பசு. இந்தப் பசுக்களுக்குத் தலைவரான சிவபிரான் பசுபதி. பசுமாடு கட்டும் கொட்டில், சாணத்தாலும் நீராலும் சகதியுற்றுப் புழுக்களும் கொசுக்களும் தங்க இடம் கொடுக்கும். உயிர் தங்கும் நம் உடலும் கொழுப்பு, மாமிசம், மலம், ஜலம், சீழ் புழு ஆகியவை தங்க இடமளிக்கிறது. இதையே,

''தோல் எலும்பு சீநரம்பு பீளைதுன்று கோழைபொங்கு
சோரிபிண்ட மாயுருண்டு வடிவான தூலம்

என்கிறார்.

**அம்மலம் கழீஇ அன்பரோடு மரீஇ**

சிவஞான போதம் பனிரெண்டாம் சூத்திரம் அயரா அன்பினால் அரன்கழல் செல்லும் ஆன்மா என்ன செய்யும் என்பதைச்,

''செம்மலர் நோன்தாள் சேரல் ஏட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே''

என்று குறிப்பிடுகிறது. ஆணவமல அழுக்கை ஞான நீரால் கழுவுகிறது. அடியார்களோடு இணைகிறது. மல மயக்கம் அற்றுப் போக அடியார் திருமேனித் தோற்றத்தையும் ஆலயங்களையும் இறைவனாகவே வழிபடுகிறது. இவை அனைத்தையும் அருணகிரியார் கந்தரலங்காரத்தில் உணர்த்துகிறார்.

ஆணவ மலம் கழுவப்பட, யாரொருவர் தன்னையிழந்து தலைவனை நாடுகின்றாரோ அவரை இறைவன் தேடிவந்து அருள்புரிகிறான். இதுதான் அருணகியார்க்கு முருகன் சொன்ன ரகசிய உபதேசம். இந்த ரகசியம் வள்ளியைத் தேடி முருகன் சென்ற பொழுது வெளிப்பட்டுவிட்டது என்பதை,

"கின்னம் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச் சொன்ன
குன்னம் குறிச்சி வெளியாக்கிவிட்டது. கோடுகுழல்
சின்னம் குறிக்கச் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னம் குறிச்சியில் சென்று கல்யாணம் முயன்றவனே"

என்று பாடுகிறார். தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள் என்ற நிலையை அடைந்த ஆன்மாவைத் தேடிச் சென்று கல்யாணம் செய்தவன் முருகன். வள்ளி காட்டிய இந்த நெறியை வள்ளிச்சன் மார்க்கம் என்று போற்றுகிறார் அருணகிரியார்.

"அன்பரொடு மரீஇ என்ற சிவஞான போத விளக்கமாகச்
சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர்குழாம்
சாரில் கதியன்றி வேறிலைகாண்" (49)

என்று பாடுகிறார். "அடியார் வாழ் சபையினேற்றியும் ஞானபோதமும் அருளி" என்ற திருப்புகழும் ஈண்டு நினைக்கத்தக்கது. திருச்செந்தூர்ப் பெருமான் கால்பட்டு நான்முகன் எழுதிய கையெழுத்து அழிந்தது என்றும் (40), பழனித்திருநாமம் படிப்பவர் திருவடியில் விழ மாட்டேன் என்கிறாயோ என்னெர் ஆம உனக்குத் தர்சமேது (75) என்றும் திருச்செங்கோட்டு வேலனைக் காண நான்முகன் நாலாயிரங்கண் படைக்கவில்லையே (90) என்றும் ஆலயங்களைப் போற்றி முருகனை நினைக்கிறார்.

**நிறைவுரை**

திருத்தலங்களை நாடிச்சென்று தொழுததால் சரியையாளராகவும் இறைவனை வாயாரப் பாடித் தொழுதலால் கிரியையாளராகவும், முருகனிடம் சிவயோகமென்னும் குருத்தை அறிந்து சிவயோகத்தமர்ந்ததால் யோகியாகவும், சிவஞானம் பெற்றதால் மெய்ஞ்ஞானியாகவும் விளங்கி வாக்கிற்கு அருணகிரி என்றும் போற்றப் பெற்ற அருணகிரியார் பாடிய கந்தரலங்காரம், சண்முகப் பெருமானுக்குச் செய்த அலங்காரமாக மட்டுமின்றிச் சைவ சித்தாந்தத்திற்குச் செய்யப்பட்ட அலங்காரமாகவும் விளங்குகிறது. அலங்காரம் நூற்றுள் ஏடுசுவியையாயினும் உணர்ந்து படித்தல் நாம் பெற்ற பிறவின் பயனாகும்.

# கந்தர் அனுபூதியில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்

முனைவர் சபா. அருணாசலம்
தேவகோட்டை, தமிழ்நாடு

ஐந்து முகத்தோடு அதோ முகமும் ஒன்றாகச் சிவமயமாகவே அவதரித்தவன் முருகப் பெருமான்,

"நற்றமிழ் பாடும் நக்கீரன்
ஞானவெளி அனுபூதி
சொற்றமிழ் ஏற்றருள்வோனே
தோகை மயிற் பரியானே
இற்றை எனக்கருள் வோனே
எங்கள் சிவபெருமானே
குற்றமிலா மறைக்கோவே
குன்றக்குடி உறை தேவே"

என்று பாம்பன் சுவாமிகளும் முருகப்பெருமானைச் சிவனாகவே கண்டுபாடுகிறார். அருணகிரிநாதப் பெருமான், முருகப்பெருமான் திருவருள் உபதேசம் பெற்றுப் பாடிய கந்தர் அனுபூதியிலும் சைவசித்தாந்தக் கருத்துகள் செறிந்துள்ளன. சில அடிப்படைச் செய்திகளை இங்கே காணலாம்.

அனுபூதி - அத்துவிதம் : எம்பெருமானாகிய சிவபெருமானோடு உயிர் இரண்டற்ற தன்மையில் சென்று கலந்து இன்புறும் நிலையே சித்தாந்தம் கூறும் முடிவான பயனாகும். கந்தரனுபூதியிலும் இவ்வுண்மையே வலியுறுத்தப் பெறுகிறது.

பூதி என்ற சொல்லுக்கு ஒன்று படுதல் என்று அர்த்தம். 'அனு' என்றால் தொடர்வது என்று அர்த்தம். கந்தரோடு ஒன்றுபடுவது கந்தர் அனுபூதி. சிவத்தோடு ஒன்றுபடுவது சிவானுபூதி.

"தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளாள்
ஆசா நிகளம் துகளாவினபின்
பேசா அனுபூதி பிறந்ததுவே"

ஆசையாகிய சங்கிலி உயிரைச் சுற்றியுள்ள விலங்கு, முருகன் திருவருளால் தூளாய் ஆனதாம். விலங்காகிய தளை இறைவன் திருவருளால் அகன்ற பின் உயிர் இறைவனோடு கூடி எல்லையற்ற இன்பத்தை அனுபவிக்கிறது. அந்த இன்பத்தைச் சொற்களால் சொல்லிக்காட்ட முடியாது. 'அனு' என்றால் தொடக்கி 'பூதி' என்றால் ஒன்றுபடுதல். தளையாகிய ஆசைச் சங்கிலி முருகன் அருளால் துகள்பட "நீயும் நானுமாய் ஏகபோகமாய் இன்புற வேண்டும்" என்று உயிர் இறைவனிடம் வேண்டுவது போல இன்புற்ற நிலையை அருணகிரியார் எய்தினார்.

இறைஇயல்பு : கந்தரனுபூதியில் அருணகிரிநாதப் பெருமான் பதி, பசு, பாசம் ஆகிய இறை உயிர்தளை ஆகிய முப்பொருள்களின் இயல்புகளையும் நுட்பமாக விளக்கியுள்ளார்.

இறைஇயல்பு :

"உல்லாச நிராகுல யோக இதச்
சல்லாப விநோதன்"

என்று இறைவனை அருணகிரியார் பாடுகிறார். உல்லாசம் என்ற சொல்லுக்குப் பொருள் எந்தக் காலத்திலும் மாறுபாடு இல்லாமல் ஒரு தன்மையாக இருத்தல்.

'நிராகுல' என்றால் துன்பம் இல்லை. அறிவுள்ளவனுக்குத் துன்பம் இருக்காது. அறிவில்லாதவன் துன்பத்தை அடைவான். அறியாமை நீங்க நீங்கத் துன்பங்கள் குறையும். நிராகுலன் என்றால் துன்பம் இல்லாதவன், அதாவது ஞான மயமானவன் என்று அர்த்தம். இதற்கு நேர் அர்த்தம் அறிவு வடிவமானவன்.

'யோக' என்றால் யோகத்தால்தான் இன்பம் வரும். கணவனும் மனைவியும் ஒன்றுபட்டால்தான் சிற்றின்பம், ஆன்மாவும் இறையும் ஒன்றுபட்டால்தான் பேரின்பம்.

'உல்லாசம்' என்றால் உண்மை. அதாவது 'சத்து', நிராகுல என்றால் அறிவு அதாவது 'சித்து', யோகம் என்றால் இன்பம் அதாவது ஆனந்தம். சத்து, சித்து, ஆனந்தம் - சச்சிதானந்தம். சச்சிதானந்தன் கடவுள்.

இதம் என்றால் நினைவு, நினைத்தல், சல்லாபம் என்றால் பேசுதல். விநோதம் என்றால் செய்தல். சத்தும், சித்தும், ஆனந்தமுமாய் சச்சிதானந்த வடிவமாக இருக்கும் ஆண்டவன் நினைக்கிறான், உயிருக்கும் நினைத்தல், பேசுதல், செய்தல் ஆகிய செயல்கள் உண்டாக வேண்டும் என்று நினைக்கின்றான். ஆண்டவன் உண்மை வடிவினனாய் இருந்து உயிர் அவனையே நினைக்க, பேச அவன் அருளாகச் செயல்படச் செய்து உயிர்க்கும் சச்சிதானந்தம் ஏற்பட வேண்டும் என்று எண்ணுகிறான்.

"பிறவா இறவா யாக்கைப் பெரியோன்" என இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவபெருமான் போற்றப்படுகிறான். அருணகிரியாரும் அத்தன்மையைப் போற்றிப் பாடுகிறார்.

"உதியா மரியா உணரா மறவா
விதிமால் அறியா விமலன் புதல்வா"

எனப்பாடும் அருணகிரியார்.

உதியா - பிறப்பில்லாதவன்
மரியா - இறப்பும் இல்லாதவன்
உணரா மறவா - நினைப்பும், மறப்பும் இல்லாதவன்
(ஒரே தன்மையானவன்)

விதி, மால் அறியா, விமலன் - பிரமனும் திருமாலும் அறியவொண்ணா தேவதேவன் என்று சிவப்பெருமானது பரம்பொருட்டன்மையைத் தெளிவாகப் பாடுகிறார்.

சிவபரம்பொருள் ஆறாறுதத்துவங்கட்டும் அப்பாற்பட்டு நிற்கின்ற மேலான பரம்பொருள் அல்லவா?

"முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகும் செயல் தந்து உணர்வென்றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங்கவ எண்குண பஞ்சரனே"

என அருணகிரியார் சைவ சித்தாந்தம் விளக்கும். எண்குண வடிவினன் இறைவன் என்றும், அவன் குருவாகி வந்து உயிர்க்கு அருள் தருவான் என்றும் பாடுகிறார்.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து என
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த"

என்று சிவஞானபோதம் விளக்கும் நிலையை இப்பாடலில் அருணகிரியாரும் நினைவூட்டுகிறார்.

பஞ்சாரம் என்றால் கூடு, எண்குணங்கள் தங்கிய ஒரு கூடு இறைவன் என அருணகிரியார் பாடுகிறார்.

'கோளிற் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை"

என்னும் குறள் உரையில் பரிமேலழகர். இறைவனின் எண்குணங்களை எடுத்துக் கூறுகிறார்.

1. தன் வயத்தனாதல்
2. தூய உடம்பளான்
3. இயற்கை உண்ர்வினன்
4. முற்றும் உணர்தல்
5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்
6. பேரருளுடைமை
7. முடிவில் ஆற்றலுடைமை
8. வரம்பில் இன்பம் உடைமை

'எண்குண பஞ்சரன்' என்று இறை இயல்பை அருணகிரிநாதர் சிறப்பாக எடுத்துக் காட்டுகிறார்.

**உயிர் இயல்பு :**

உயிர் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையுடையது. அறிவிக்க அறியும் இயல்பினையுடையது தத்துவங்களாகிய உடம்பில் நின்று இறைவன் அறிவிக்க அறிந்து தத்துவங்களை விட்டு நீங்கி அதற்கும் மேலான பரம்பொருளாகிய சிவத்தோடு சேர்ந்து இரண்டற ஒன்றாய் இன்பமர்ந்து நிற்கும் இயல்பினது. இதனை அருணகிரிநாதர் மிகச் சிறப்பாக விளக்குகிறார்.

"ஆறு ஆறையும் நீத்து அதன் மேல்நிலையைப்
பேறா அடியேன் பெறுமாறு உளதோ"

என்று முருகப்பெருமானிடம் அருணகிரிநாதர் வேண்டுகிறார்.

தூலபூதங்கள் : மண், தண்ணீர், நெருப்பு, காற்று, வெளி 5
தன்மாத்திரைகள் : சுவை, நாற்றம், ஒளி, ஊறு, ஓசை 5
பொறிகள் : மெய், வாய், கண், மூக்கு, செவி 5
கன்மேந்திரியங்கள் : வாக்கு (வாய்), பணி (கை), பாதம் (கால்),
பாயு (கருவாய்), உபஸ்தம் (எழுவாய்)
அந்தக் காரணங்கள் : மனம், புத்தி, சித்தம், அகங்காரம் 4

இந்த இருபத்து நான்கையும் ஒன்றாகச் சேர்த்து 'ஆன்மதத்துவம்' என்பர்.

இதற்கெல்லாம் அடிப்படை வித்யா தத்துவங்கள் காலம், நியதி, கலை, வித்தை, மாயை, அராகம், புருடன் இந்த ஏழையும் வித்யா தத்துவங்கள் என்பர்.

ஈசுவரம், சுத்த வித்தை, சாதாக்கியம், விந்து, சிவம் என்னும் ஐந்தும் சிவதத்துவங்கள்

ஆன்மதத்துவங்கள் - 24
வித்யா தத்துவங்கள் - 7
சிவதத்துவங்கள் - 5

இந்த முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து அதற்கு மேலே சிவவொளியாய் இருப்பது ஞானமண்டலம். அங்கே நாம் ஒன்றுபடலாம்.

"வளைபட்ட கை மாதொடு மக்களெனும்
தளைபட்டழியத் தடுமோ தகுமோ.......(4)
பேராசை யெனும் பிணியிற் பிணிபட்டு
ஓரா வினையேன் உழழத் தகுமோ......(16)
மெய்யே என வெவ்வினை வாழ்வை உகந்து
ஐயோ அடியேன் அலையத் தகுமோ......."(25)

என இந்த உயிர் சார்ந்ததன் வண்ணமாய் மயங்கும் இயல்பினையுடையது என்பதையும் இறைவன் அருளே அதனின்று உயிரை விடுவித்து மீட்கும் என்பதையும் அருணகிரியார் காட்டுகிறார்.

"மகமாயை களைந்திட வல்ல பிரான்
முகம் ஆறும் மொழிந்தும் ஒழிந்திலனே
அகம் மாடை மடந்தையர் என்றயரும்
சுகம் மாயையுள் நின்று தயங்குவதே" (5)

மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை என மூவகை ஆசையில் சார்ந்ததன் வண்ணமாய் உயிர் மயங்கி நிற்பதை அருணகிரியார் அழகாக விளக்குகிறார்.

**தளை இயல்பு :**

ஆணவம் : ஆணவம் என்றால் அறியாமை, உயிரின் அறிவை அணுபடுத்துவது தடுப்பது ஆணவம்.

"புரிவாய் மனனே பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோடும் அகந்தையையே" (37)

என்றும் இறைவன் அருளால் அந்த ஆணவம் அகன்ற நிலையில்,

"ஆனா அமுதே அயில் வேல் அரசே
ஞானா கரனே நவிலத் தடுமோ
யான் ஆகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலை நின்றக தற்பரமே" (28)

எனச் சிவமாய் சிந்தை விளங்கும் நிலையை அருணகிரியார் பாடுகிறார்.

**வினை :**

விதிகாணும் உடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழல் என்று அருள்வாய்

என அருணகிரியார் நமது வினைப்பயனே உடம்பு என்பதையும் பிறப்பு மீண்டும் வராதிருக்க வினையை விட வேண்டும் இருவினை ஒப்பு வரவேண்டும் என்பதை அறிவுறுத்துகிறார்.

**மாயை :**

இல்லே எனும் மாயையில் இட்டனை நீ
பொல்லேன் அறியாமை பொறுத்திலையே

என நாம் கடைத்தேற மாயையை இறைவன் படைத்துக் கொடுத்துள்ளான் என்பதை அருணகிரியார் எடுத்துக்காட்டுகிறார். சைவசித்தாந்த சாத்திரத்தில் மூன்று தசை (நிலை) கேவல தசை, பெத்த தசை, முத்த தசை ஆன்மாக்கள் கேவலத்தில் அணுக்களாகக் கிடந்தன. அங்கே ஒரே இருள் அஞ்ஞானம், துன்பம். நாம் எல்லாம் அங்கே கட்டுண்டு கிடந்தோம். நாம் இப்போது இருப்பது பெத்த தசை. இதில் இருளும், ஒளியும், கொஞ்சம் அஞ்ஞானம், கொஞ்சம் ஞானம், கொஞ்சம் துன்பம், கொஞ்சம் இன்பம். மாயையில் நாம் கட்டுண்டு உழன்று அறியாமை நீங்கி ஞானம் பெறுவது பெத்த நிலை நீங்கி முத்த நிலை அடைதல். ஏற்கனவே இருந்தது ஆணவமலத்தைப் போக்கத்தான் மாயாமலம் ஆண்டவனுடைய அருள் உபகாரம். இதனை அருணகிரியார் நன்கு காட்டுகிறார்.

எல்லாம் அற என்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா! சுரபூபதியே (2)
சும்மா இரு சொல் அற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே (12)
பூமேல் மயல்போய்அற மெய்ப்புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீர் இலையே (17)

ஆண்டவன் அருளால் அறிவிக்க ஆன்மா தன்னை இழந்து சிவமயமாய் நிற்கும் ஒன்றுபட்ட நிலையை அருணகிரியார் அற்புதமாகப் பாடுகிறார்.

இவ்வாறு 'மெய்ப்பொருள் பேசியவா' என இறைவன் அறிவிக்க ஆன்மா அறிந்து தற்போதம் இழந்து சிவமயமாய் இன்புற்று நிற்கும் நிலையையும் இறை உயிர், தளை இயல்புகளையும் உணர்த்தும் சித்தாந்தக் கருத்துக்கள் கந்தர் அனுபூதியில் நுணுக்கமாக இடம் பெற்றுள்ளன.



# அருணைநாதர் அருளிய திருமிகு திருவகுப்பு

முனைவர் திருமதி தேவபூபதி நடராஜா

அருணகிரியில் அறுமுகச் செவ்வேளிடம் அருள் நிதி பெற்றவர் அருணகிரிநாதர். இதன் பயனாக "அறிவும் அறிதத்துவமும் அபரிமித வித்தைகளும் அறியென இமைப்பொழுதில்", அருளி முருகப்பெருமான் தன்னை வாழ்வித்த கருணையும் ஏழு பிறவிகளிலும் அவனது திருவடிகளைப் போற்றும் பக்தனாக ஏற்றுக் கொண்டு இனிய கவிதைகளைத் தந்தருளிய சிறப்பையும் பலப்படப் பாடியுள்ளார் (12:13,19). கந்தன் கருணையினால் பாடப்பெற்ற இக்கவிதைகளைப் பத்துப் பகுதிகளாகப் பிரித்து முருகப் பிரானைப் பற்றிப் பிற அடியார்கள் அருளியவற்றையும் முருகனடியார்கள் பற்றிய குறிப்புகளையும் இரு வேறு பகுதிகளாக அமைத்து *முருகவேள் பன்னிரு திருமுறை* என்ற நூல் வெளிவந்தது[1]. இதில் ஒன்பதாம் திருமுறையாக அமைந்துள்ளது *திருவகுப்பு* ஆகும்.

**பெயர்**

திரு என்ற சொல் அழகு, இலக்குமி, செல்வம், தெய்வீகம், மேன்மை, சிறப்பு, காந்தி அல்லது ஒளி, பொழிவு, பாக்கியம், நல்வினை போன்ற விரும்பத்தகும் பொருள்களைக் கொண்டதாகும். இறைவன் தொடர்பான எல்லாவற்றிற்கும் இது அடைமொழியாய் அமைந்துள்ளது. எனவே திருக்கோயில், திருவிழா, திருமுறை, திருப்புகழ் போன்று திருவகுப்பு என்ற பெயரும் அமைந்துள்ளது. வகுப்பு என்றால் இன அடிப்படையில் பிரித்தல், பகுதி, சந்தம், பொழிவு, அழகு எனப் பொருள்படும். அருணகிரிநாதர் அருளிய *திருவகுப்பு* அவரது பிற படைப்புகளைப் போலவே முருகன் பெருமை, மக்களுக்கு உபதேசம் எனப் பக்திப்பரவசத்துடன் பாடினாலும் முருகனது பெருமை (4) அவனது திருவடிச் சிறப்பு (1) வேலின் தன்மை (5) எனப் பலதையும் பகுத்து(வகுத்து)க் கூறுவதால் இப்பாடல்கள் திருவகுப்பு எனப் பெயர் பெற்றது என்பர். இதற்கு 'நின் பத யுகப்ரசித்தி என்பன வகுத்துரைக்க நின் பணி தமிழ்த்ரயத்தை அருள்வாயே' (திருப்புகழ் 1233) என அவர் கேட்டுக் கொண்டதைச் சான்று கூறுவர். இவை திருப்புகழ் பாடல்களைப் போலவே சந்தம் மிகுந்தனவாய் நீண்ட அடிகளைக் கொண்டுள்ளன. பாடல்களும் நீளமானவை. அருணகிரிநாதரின் நூல்களின் பெயரைத் தொகுத்தளிக்கும் ஒரு பழம் பாடல் இதனை "நந்தா வகுப்பு" எனச் சிறப்பிக்கின்றது.

**எண்ணிக்கை**

திருவகுப்பு எனும் தலைப்பில் 32 பாடல்கள் வரை சில சுவடிகளில் இருந்தாலும் பொதுவாகப் பதினெட்டு வகுப்புகளே அருணகிரியார் பாடியது என்பது பல ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகும். ஆறுமுக நாவலரும் இக்கருத்தையே கொண்டிருந்தார் என்பர்[2]. அவையாவன :

1 செங்கல்வராய பிள்ளை, வ.சு.முருகவேள் பன்னிரு திருமுறை. (6 தொகுதிகள், சென்னை 197)
2 மேலது, தொகுதி 6, பக்கம் 29

| பாடல்களின் பெயர் | அடிகள் | வகுத்துரைக்கும் பொருள் |
|---|---|---|
| 1. சீர்பாத வகுப்பு | 32 | முருகன் திருவடிச் சிறப்பு |
| 2. தேவேந்திர சங்க வகுப்பு | 16 | முருகனடியார் பெருமை |
| 3. வேல் வகுப்பு | 16 | முருகனது வேல் |
| 4. திருவேளைக்காரன் வகுப்பு | 32 | முருகனது இச்சா சக்தியாகிய வள்ளியம்மை |
| 5. பெருத்த வசன வகுப்பு | 16 | முருகன் அருளிய உபதேசம் |
| 6. பூத வேதாள வகுப்பு | 80 | முருகனது படை/சேனை |
| 7. பொருகளத்தலகை வகுப்பு | 32 | முருகனது போர் வீரம் |
| 8. செருக்களத் தலகை வகுப்பு | 16 | |
| 9. போர்க்களத் தலகை வகுப்பு | | |
| 10.திருஞான வேழ வகுப்பு | 16 | முருகன் அருளிய உபதேசத்தால் பெற்ற ஞானமாகிய அருளமுதத்தின் சீரும் சிறப்பும் |
| 11.திருக்கையில் வழக்க வகுப்பு | 16 | |
| 12.வேடிச்சி காவலன் வகுப்பு | 32 | பார்க்க 4 |
| 13.சேவகன் வகுப்பு | 8 | பார்க்க 7-9 |
| 14.வேல்வாங்கு வகுப்பு | 32 | பார்க்க 3 |
| 15.புய வகுப்பு | 32 | முருகனின் 12 புயங்களின் மகிமை |
| 16.சித்து வகுப்பு | 96 | முருகனின் திருப்புகழ்ப் பெருமை |
| 17.கடைக்கணியல் வகுப்பு | 16 | முருகனின் திருநோக்கச் சிறப்பு |
| 18.சிவலோக வகுப்பு | 16 | முருகனின் திருவருளாற் பெற்ற அன்பின் சிறப்பு |

**பாடுபொருள்**

"திருவகுப்பின் பாடுபொருள் என்ன?" என்னும் கேள்விக்கு "முருகன்" என ஒரே சொல்லில் பதில் கூறிவிடலாம். இப்பதிலில் அவனது திருப்பெயர்கள் அவனைக் குறிக்கும் சொற்றொடர்கள், அவனது தோற்ற வரலாறு அழகிய வடிவம் திருப்புயங்கள், அவற்றின் செயல்கள், அவற்றின் மகிமை, அணியும் ஆபரணங்கள் அவனுக்குரிய மலர்கள், படை, சேவல், கொடி, மயில், வேல், சக்தியராகிய வள்ளி - தெய்வானை, அன்பர்களைக் காப்பதற்காக அவன் ஆற்றிய வீரச் செயல்கள் எனப் பலவும் அடங்கும்.

**சிவனே முருகன்**

அருணகிரிநாதர் இப்பாடல்களில் ஆங்காங்கு குறிப்பாகக் கூறும் ஓர் உண்மை என்னவெனில் சிவனே முருகன் என்பதாகும். முருகன்,

"அநுபவன் அநகன் அனனியன் அமலன் அமோகன்
அநேகன் ஏகன் அபினவன் நித்தியன்" (15:32)

(உயிர்களை இன்பதுன்பங்களை அனுபவிக்கச் செய்பவன். பாவங்கள் அற்றவன். இன்னொருவருக்கு உரிமையாகாத / கட்டுப்படாத தலைவன். மலங்கள் அற்றவன். மோகங்கள் அற்றவன். உலகை நோக்கி நின்றும் உயிர்களுள் நின்றும் அவற்றைச்

செலுத்தும் போது பலவாகவும் தன்னையே நோக்கி நிற்கும் போது ஒன்றாயும் உள்ளவன். எந்நிலையிலும் சிதைவோ மாறுபாடோ அற்றவன் என்றும் அழியாது நிலைத்திருப்பவன்). மேலும்,

"மாசிலுயி ருக்குயிரு மாசிலுணர்வுக் குணர்வும்
வானிலணுவுக் கணுவுமாய் நிற்பவன். (4:20)

எனப் பாடியுள்ளார். இவ்வடிகளில் அவனது பதித்துவம் விளக்கப்படுகிறது. இப்பண்புகள் பரம்பொருளும் பதியுமாகிய சிவபெருமானைப் பாடுவதற்கு அடியார்கள் பயன்படுத்தியமை இங்கு நினைவு கூறத்தக்கது. ஒரு பாடலில் முருகனை "ஆறுமுகப் பொருள்" (16:4) எனப் போற்றியுள்ளதும் சிவனை "முன்னைப் பழம் பொருளே" என்றும்,

"அண்டங்கடந்த பொருள் அளவில்லதோர்
ஆனந்த வெள்ளப் பொருள்
பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள்"

எனவும் சிவனடியார்கள் பாடியுள்ளதை நினைவூட்டுவதாகும்[3]. இவற்றிற்கும் மேலாக,

முகையவிழ் கடம் படுத்த தாரினான்
முதலிபெரி யம்பலத்துள் வரையசல மண்டபத்துள்
முநிவர்தொழ அசூழ் நிர்த்தம் ஆடினான் (17:10)

எனத் தில்லைப் பேரம்பலத்தில் சிவபிரான் நடராஜ மூர்த்தியாய் ஐந்தொழில் இயற்றுவதற்காடிய ஆனந்தக் கூத்தும் அவனே ஆடியதாகப் போற்றுவதில் சிவனே முருகன் முருகனே சிவன் என்ற உண்மை மிகத் தெளிவாக உணர்த்தப்படுகிறது.

**அவன் காக்கும் பசுக்கள்**

திருமால், பிரமன், இந்திரன், குபேரன், சூரியன், பிற தேவர்கள், ஆதிசேடன், அசுரர்கள், பூத கணங்கள், நாரதர், அகத்தியர் போன்ற முனிவர்கள், அடியார்கள் பற்றிய செய்திகளுடன் பல வகைப் பறவைகள், மிருகங்கள், தாவர வர்க்கங்கள் பற்றியும் இப்பாடல்களில் காணப்படுகின்றன. இச்செய்திகள் பசுக்களாகிய உயிரினங்களையும் ஆன்ம ஈடேற்றத்தில் அவை வெவ்வேறு நிலையில் இருப்பதையும் குறிப்பாகக் கொள்ளலாம். இவை பதியாகிய முருகனை வழிபட்டு உய்தி பெறலாம். ஏனெனில் அவன் "நினைக்குமவர் வீடுபெற வைத்தருள்" பவன் (4.28).

**அவன் நீக்கும் பாசங்கள்**

இவ்வுயிரினங்கள் ஆன்ம ஈடேற்றம் பெறுவதற்குத் தடையாக உள்ளவை ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மும்மலங்கள். இவற்றை விரித்துப் பாடாவிடினும் "மலத்ரயம்" (மலம் + மூன்று) என்ற தொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. (6.35) இவற்றால் உயிர்படும் துன்பத்தையும் அருணகிரிநாதர் ஆங்காங்கு கூறியுள்ளார்.

"கரணமு(ம்) மரணமு(ம்) மலமொடு(ம்) உடமுதூச்
கடுவினை கெட" (2.9)

எனும் அடியில் சித்தாந்தக் கருத்துகள் தொக்கி நிற்கின்றன. உயிர்கள், தாம் இவ்வுலகில் அனுபவித்துத் தீர்க்க வேண்டிய பிரார்த்த வினைக்கு ஏற்ற உடலைப் பெறுகின்றன. இவ்வுடல் ஐம்பொறிகளாகிய புறக்காரணங்களையும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம்

3 திருவாசகம் : திருவெம்பாவை 9 திருப்பல்லாண்டு 2

எனும் அகக்கரணங்களையும் கொண்டது. இது இறக்கும் ஆணவம், கன்மம், மாயை எனும் மூன்று மலங்களுடனும் சேர்ந்து உள்ளது என்பது இவ்வடியின் பொருளாகும். வினையைக் "கடுவினை" (பொல்லாத வினை) இரு வினை (நல்வினை, தீவினை 18.6) "இரட்டை வினை" (5.6) "கருவினைத் தரும் இருவினைத் தொடர் (பிறவியைத் தரும் வினை. இது பிறவிகள் தோறும் தொடர்வது 10.6). இவ்வினைகளைக் களைவது இறையருளே என்பதால் முருகன் "உருகும் அடியார் இருவினைத் தொகை அறுக்குமவன்"(6.28) "வினைப்பகை செகுப்பவன்" (செகுத்தல் = கொன்று வெல்லுதல் 11.13). வினைப்பகை அறுப்பவன் (16.95) எனப் பரவப்படுகிறான். வினை களையப் பெற்றால் உயிர் பிறவா நிலை அடையும்.

"ஆணவ அழுக்கடையும் வியை விளக்கியது
பூதி அடைவித்ததோரு பார்வைக் கரானும்" (4.4)

முருகப்பெருமானே. செம்பில் களிம்பு போல் உயிரில் அனாதியே இருப்பதால் ஆணவம் மூலமலம் எனப்படும் ஆணவத்தால் வினை ஏற்படும். அதனைப் போக்கி ஆணவத்தை வலியிழக்கச் செய்து உயிர் இறைச் சிந்தனையால் அவனருளையும் அதன் மூலம் ஞான விளக்கத்தையும் பெறுவதற்காகவே உடலுடன் கூடிய பிறவி தரப்படுகிறது. இந்த அருளையும் ஞானத்தையும் அருள்பவன் அவனே என்பதோடு அவன் ஒரு திருப்பார்வையாலேயே மலமகற்றி அனுபூதி அடையவிக்க வல்லான் என்பதை, "விளக்கி, பார்வைக்காரன்" ஆகிய சொற்கள் புலப்படுத்துகின்றன.

**முருகனது திருவடிகள்**

பிறவிகள் பலப்பல என்பதால் அது "பாவக்கடல்" (6.9) ஆகும். மனைவி, மக்கள் எனப் பற்று கொள்ளச் செய்வதும் பாவச் செயல்களுக்கு (வினைகளுக்கு) இடமானதுமான பிறவிக் கடலில் இருந்து கரையேற்றம் தெப்பம் முருகனது சீர்பாதமாகும் என்பதனை,

"உறவு முறை மனைவிமக வெனு(ம்) அலையில எனது இதய
உருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும் உறுபுணை" (1.7)

எனப் பாடுகின்றார். இத்திருவடிகளின் செயல் யாவும் அருட்செயல்களே. வள்ளியை மணம் புணர வந்து தினைப்புனத்தில் உலவியதும் (1.16) அம்பிகை தழுவும் பொழுது குழந்தையாய் மார்பில் ஆடுவதும் (1.10) பிறப்பின் காரணமாகிய பிராரத்த வினையின் முடிவில் உயிர் பிரியும் காலத்தில் வரும் யம தூதர்களை விரட்டுவதும் அடியார் பகை சாடுவதும் (1.17-18), அவனது திருநாமங்களை உச்சரித்துக் கண்ணீர் மல்கும் பக்தர்களுக்கு அருளுவதும் (1.21-22) பல நறிய மலர்களின் இனிய மணக்கலவை வீசும் அழகும் சிறப்பும் மிக்க திருவடிகளே. மேலும் அருணகிரிநாதரின் இதயமும், தேவர்களின் மணிமுடிகளும் அச்சிற்பிகளின் இருப்பிடமாகும் (12.20). இவை, "மறையின் முதல் நடு முடி" வுமாகும்.

**முருகனும் அம்பிகையும்**

இப்பாடல்களில் பல, அம்பிகை பற்றிய குறிப்புகளைக் கொண்டுள்ளன. இவற்றில் கூறப்படும் திருநாமங்களில் 57 பட்டியல் இடப்பட்டுள்ளன[4]. இரண்டாவதாக அமைந்துள்ள தேவேந்திர சங்க வகுப்பில் முதல் 12 அடிகள்,

"இரணியனைக் கொன்ற நரசிம்ம வடிவத்தினள் தலையோட்டைக் கையில் ஏந்தியவள். உடுக்கை காற்சிலம்பு ஆகியவற்றின் ஒலியுடன் நடனமிடுபவள். நால்வேதங்களிலும் போற்றப்படுபவள். தாமரையில் வீற்றிருக்கும் பரம்பரை இவளே மந்திரங்களின் சக்தியாகவும் வேதங்களின் முடிவாகவும் உள்ள பராசக்தி; சிவசக்தி"



4 முருகவேள் பன்னிரு திருமுறை தொகுதி 6, பக்கம் 611-612

என அவளைப் போற்றுகின்றன. "இவ்வகுப்பில் உள்ள தேவி துதி போல அழகும் சிறப்பும் வாய்த்த தேவி துதி தமிழில் காண்பது அரிது" என்பர்[5]. எனினும் இத்தகைய "மாசம்பவி தந்தவன்.... செந்தமிழ் நூலோன் குமரன் குகன் ஆறுமுகன்" என முருகன் மேன்மையே புகழப்படுகிறது.

**முருகனும் விநாயகரும்**

இவ்வாறே யானை முகன் (வாரணமுகன் 6.36) எனப்படும் விநாயகரும் "அவரை பொரி எள் பயிறு துவரை அவல் சக்கரையோடு அமுது செய்யும் விக்நபதி யானைச் சகோதரன் (12.10) என வருணிக்கப்படுகிறார். இவை மட்டுமின்றி இனிய கனி கடலை ஓடியல் பொரி (1.13) ஆகியவையும் அவர் விரும்புவனவாகும். மேலும் மதநீர் பொழியும் விசித்திர அழகுடைய பெரிய கனத்த மேருமலை போன்றவர் (1.13). இவ்வடிவத்துடன் காட்டுவழியில் (வள்ளியை மிரட்டுவதற்காக) நடந்தவர் (2.13). இத்தகைய தமையனாருடன் இணைபிரியா அன்பு கொண்ட முருகன் அவரை எப்பொழுதும் சிந்திக்கும் அடியவர் மனத்தில் தானும் அகலாமல் வாழ்வான் என இவ்விருவர் தொடர்பும் பாடப்படுகிறது.

**முருகனும் திருமாலும்**

திருமாலின் விஸ்வரூபமும் (1.27) இராமாவதாரத்தில் இராவணவதம் செய்ததும் (13.5) கூறப்பட்டிருப்பினும் கண்ணன் அவதாரமே பெரிதும் பாடப்படுள்ளது. பாரதப் பெரும்போரில் இரு பக்கத்து அரசர்களின் மணிமுடிகளும் தெறித்து விழவும் இறுதியில் குருகுலத் தலைவனாகிய துரியோதனனும் அவனது தம்பியரும் இறக்கவும், பாண்டவர் வெற்றி பெறவும் அவர்கள் பக்கம் சேர்ந்து (அர்ச்சுனனுக்குத்) தேர் ஓட்டியவன். கண்ணன் அவதாரத்தில் குளத்தில் குளித்த ஆயர்குலப் பெண்களின் அழகிய ஆடைகளை ஒளித்தான் மேகவண்ணன். கோவர்த்தன மலையின் கீழ் பசுநிரைகள் முழுவதையும் ஒருச் சேரக் கூட்டிக் காப்பதற்காகப் புல்லாங்குழல் இசைத்தவன். தன்னை அழிக்க வந்த பல்வேறு அசுரர்களையும் மாமனாகிய கம்சன் அனுப்பிய குவலாய பீடம் எனும் யானையையும் இறுதியில் கம்சனையுமே வென்றவன் கண்ணன். அவனது திருமருகன் முருகன் (14.26-32) என்பதில் இவ்விருவர் பெருமையும் உறவும் போற்றப்படுகிறது.

**பிற செய்திகள்**

இவ்வகுப்புகளில் மிக நீளமானது 96 அடிகளைக் கொண்ட சித்து வகுப்பு. இதில்,

"அடல் புனைந்த வேலும் மயிலும் என்றும் வாழி
அரியதொன்று கூற அருகிருந்து கேண்மின்"

எனத் தொடங்கி ஒரு சித்தர் தான் முருகனிடம் பெற்ற சித்துவகைகளைக் கூறுகிறார் (16.36). இவற்றில் ஒன்று இரும்பு போன்றவற்றைப் பொன்னாக்கும் இரசவாதம் ஆகும். இவ்வகுப்பில் மருந்தாகப் பயன்படக் கூடிய தாவர வகைகளின் பெயர்கள் (ஏறத்தாழ 117), மக்கள் அணியும் பல் வேறு வகைப்பட்ட அணிகலன்களின் பெயர்கள் (16.38-47) உள்ளன. மேலும் இதர வகைகள், வாத்தியங்கள் எனப் பல விதமான செய்திகளையும் திருவகுப்புகளில் பெறலாம். இவற்றைக் காணும் பொழுது இவ்வறிவு முருகன் அருளால் பெற்றதே எனத் துணியலாம். அவன் அருளிய அபரிமித வித்தைகளுள் இவை அடங்கும்.

மேலது, பக்கம் 304



# கந்தரந்தாதியில் முக்குளித்த சித்தாந்த முத்துக்கள்

(முனைவர் க. திலகவதி , கோலாலம்பூர்)

1 . அறிமுகம்

அருணகிரிநாதர் முருகன் அருள்பெற்று அவன் புகழிலும் அருளிலும் திறனிலும் அமிழ்ந்துருகி பாடிய நூல்களுள் ஒன்றாய் விளங்குவது கந்தரந்தாதி எனும் சிற்றிலக்கிய நூல். சந்தத் தமிழ்ப்பா வேந்தராம் முத்தமிழ் வித்தகர் அருணகிரியார், அந்தாதித் தொடையால் ஆக்கியுள்ள இந்நூலில் தம் சொல்லாடும் திறனைச் சந்த வண்ணமும் வடிவமும் சிறக்க வெளிப்படுத்தியுள்ளார். முதல் பாடலின் ஈற்று எழுத்தோ, சொல்லோ, சீரோ, தொடரோ, அடியோ, அடுத்த பாடலின் அந்தமே (கடைசி) அடுத்த பாடலின் ஆதியாய் (முதல்) வருவது அந்தாதியாகும். அந்தாதி நூல்கள் பெரும்பாலும் 100 பாடல்களைக் கொண்டிருக்கும்.

இவ்வாறு அந்தாதித் தொடையில் அமைந்துள்ள இந்த நூலில் ''முருகன் திருவிளையாடல் ஒவ்வொன்றும் விளங்கக் கூறி, அப்பெருமான் திருவடித் துணையாலேயே நண்ணாப்பதம் நண்ணலாம் (நண்ணுதல் = அருகில் செல்லுதல்) என்பதைத்தெற்றென உபமான வாயிலாகவும் உபமேய வாயிலாகவும் தலைவன் தலைவி கூற்றாகவும் விளக்கிப்போவது எவர்க்கும் இன்பத்தையும் நுண்ணிய ஆராய்ச்சியையும் கொடுக்க வல்லதாம்'' என்று கூறுவார் கந்தரந்தாதியின் முதல் முப்பது பாடல்களுக்கு விருத்தியுரை எழுதியுள்ள டி.சி.பார்த்தசாரதி அய்யங்கார்(பக் 6). இவ்வாறு, தொடக்கம் முதல் இறுதி வரை கந்த மணம் கமழும் இந்நூலில், முருகனின் அருள் நாமங்கள், அவை நினைவூட்டும் இறையருட்குணங்கள், முருகனின் அருள் திருவிளையாடல்கள், முழுமுதல் தன்மை, அந்த முழுமுதல் தெய்வத்தின் திருவடி நிழலை அடைந்து பேரின்பத்தில் நிலைத்திருக்க உயிர்களுக்கான வழிமுறைகள் என உயிர்களுக்கு முத்தி நலம் பயக்கும் பல உன்னத செய்திகள், சந்தக் கவிதை நயத்தோடு உணர்த்தப்பட்டுள்ளன. அத்தகைய அருஞ்சிறப்புடைய செய்திகளுள் சைவ சித்தாந்தக் கருத்துகள் தாராளமாகவே இடம்பெற்றுள்ளன என்று கூறலாம். ஏனெனில் கந்தன் புகழ் பாடும்போது, கந்தப்புராணச் செய்திகள் நிறைந்த அளவில் நினைவு கூறப்படும். கந்த புராணமோ சைவ சித்தாந்தத்தின் பிழிவையும் அதன் மேன்மையையும் விளக்கும் நூல் என்பது வெள்ளிடை மலை. அனைத்தையும் இங்கு விளக்கினால் , அது முழுநூல் ஆராய்ச்சியாகிவிடும். எனவே, எடுத்துக்காட்டாக ஒரு சில பாடல்களில் வெளிப்படும் சைவ சித்தாந்தக் கொள்கைகளைக் காண்போம்.

## 2. கந்தரந்தாதியில் சைவ சித்தாந்தம்.

### 2.1 உலகப் படைப்பு நாத தத்துவத்திலிலிருந்து தொடங்குவது

உயிர்கள் ஆணவம், கன்மம், மாயை ஆகிய பாசத்தினின்றும் விடுபட்டுத், தம் திருவடி நீழலில் நிலையாகத் தங்கும் பேறு பெறுவதற்கு ஏதுவாகக், கருணையே வடிவான இறைவன் உலகைப் படைக்கிறார். அவ்வாறு உலகம் படைக்கப்படும்போது, அது நாதத் தத்துவத்திலிருந்து தோன்றும் என்பது சித்தாந்தக் கூற்று. முருகப் பெருமான் தம் தந்தையாருக்குப் பிரணவ மந்திரத்தின் விளக்கத்தைக் குரு - சிஷ்ய பாவத்தில் கூறினார்.

அந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடும்போது, அருள்மிகு கிருபானந்தவாரியார் தகப்பன் சாமியாம் முருகன் தந்த விளக்கத்தைச் சுருக்கமாகத் தருகிறார். அதில் பிரணவம் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்: "இறைவனுடைய இந்தத் தனிப் பெருங்கருணையைத் தான் பராசக்தி என்கிறோம். பராசக்தியாகிய அந்தக் கருணை வெள்ளத்தை எது தாங்க முடியும்? மகாநதியைப் பயிர்கள் தாங்க முடியாதலால் பற்பல கால்வாய்களின் மூலம் பிரித்து வயலுக்குள் விடுகிறோமல்லவா? அதேபோல் பராசக்தியாகிய கருணை வெள்ளமும் பிரிந்து பிரிந்து வந்து உயிர்களுக்கு உய்வு அளிக்கிறது. பராசக்தி வெள்ளத்தின் ஆயிரத்தில் ஒரு பங்காக ஆதிசக்தி பிரிந்தது. அதன் ஆயிரத்தில் ஒரு பங்காக ஞானசக்தி பிறந்தது. இதிலிருந்து ஆயிரத்துள் ஒரு பங்காகப் பிரிந்தது கிரியா சக்தி. இதுதான் உலகை இயக்குவது. கிரியா சக்தியின் ஆயிரத்துள் ஒரு பங்காகப் பிரிந்தது இச்சா சக்தி. இச்சா சக்தியான அருள் வீழ்ச்சி விந்து என்கிற சுத்த மாயையில் விழ அது சுழன்றதும் நீர்வீழ்ச்சியானது சக்கரத்தில் விழுந்தவுடன் அது சுழன்று மின்சாரம் பிறப்பது போல் குடிலா சக்தி பிறந்தது........குடிலையின் வடிவமே ஓம். குடிலை விந்துவின் சுழற்சியிலிருந்து நேராகப் பிறந்தபோது அதிலிருந்தே நாதம் உண்டாயிற்று. அதாவது, அதாவது இறைவனது அருள் வீழ்ச்சியானது சுத்த மாயையின் மேல் விழும்போது அது சுழலத் தொடங்குகிறது. அப்போது பிறந்த குடிலையிலிருந்து முத்தொழில் புரியும் மும்மூர்த்திகள் தோன்றுகிறார்கள்"(பக்.122). இதிலிருந்து நாதத் தத்துவமாகிய 'ஓம்' என்பதிலிருந்தே படைப்பு முதலியவை தொடங்குகின்றன என்பது தெளிவாகிறது. (குறிப்பு: இங்குக் கூறப்பட்ட இறைவனும் பராசக்தியும் சைவ சித்தாந்தம் கூறும் சுத்த மாயைக்கு அப்பாற்பட்ட பரமசிவமும் பராசக்தியுமாம்). இந்த சித்தாந்த உண்மை கந்தரந்தாதி 4ஆம் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது:

தேமொழி அத்தம் பெற, ஓம் தனக்(கு), அன்று சேணுலகத்
தேம், ஒழி யத், தம் சினங்காட்(டு) அவுணரைச் சேமகரத்
தேம், மொழி அத்தம் புயம், அவர் சூடிகை சிந்தவென்ற
தே, மொழி அத்தம் பதினா லுலகும், அந் தித்ததொன்றே

"தேன் போன்ற மொழியையுடைய பார்வதியின் (மறு) பாதியாக விளங்கும் சிவபிரான், பிரணவத்திற்கு உபதேசம் பெற்றுக்கொள்ள - முன்பு தேவலோகத்தின் நன்மை எல்லாம் அற்றுப்போகும்படி தங்கள் கோபத்தைக் காட்டிய அசுரரை ஆண் சுறாமீனுக்கு இடமாகிய சமுத்திரத்தில், கணுக்களையுடைய (அசுரரது) கைகளும் தோள்களும் அவர்கள் மணிமகுடங்களும் சிதறி வீழ, அழித்து வென்ற - குமரப் பெருமான் கூறி அருளிய பொருள், 14 உலகத்திலும் ஒரே தன்மையாய்ப் பொருந்தி நின்றது" என்பது இதன் பொருள்.

அருஞ்சொற்பொருள்:

முதல் அடி : அத்தம் = பாதி (யாகிய சிவபிரான்); பெற = சேணுலகம்= தேவலோகம்
2ஆம் அடி ; தேம் = நன்மையெல்லாம்; சேமகரம் = ஆண் சுறாமீன்.
3ஆம் அடி ; தேம் = இடமாகிய சமுத்திரத்தில்; மொழி = கணுக்கள் (தழும்புகள்);
அத்தம் = கை; சூடிகை = மகுடம்.
4ஆம் அடி : தே = குமரப் பெருமான்; மொழி = உரைத்த; அத்தம் = பொருள்;
அந்தித்தது = பொருந்தி நிற்கின்றது.

'ஓம்' என்பதன் உட்பொருள் 14 உலகங்களுக்கும் ஒரேதன்மையாய்ப் பொருந்தி நிற்பது என்பதன் வழி உலகனைத்தும் அதிலிருந்து தோன்றி, அதனால் இயங்குகின்றன என்பதை உணர முடிகின்றது.

## 2.2 உயிர்

### 2.2.1 பிறப்புக்குக் காரணம்

"உடலும் உயிரும் சம்பந்தப்பட்டு பிறவி உண்டாவதற்கு, முன் செய்த பாசந்தான் காரணமோ?" என்று கூத்தரசனாகிய தந்தையாருக்கு பிரணவப் பொருள் கூறியவரும், தொந்தி விநாயகருக்கு இளையவருமான ஞானவேற்பெருமானிடம் கேள்வி எழுப்புகிறார் அருணகிரிநாதர்.

"-------------------------------------------------------------------
--------------------------------விளையுயிர்க்கும் சிதை தோல்
தித்திக்கும் தொந்திப்பன ஏது செய்வினைத் தீவிலங்கே"

அருஞ்சொற்பொருள்:

விளை = (கருப்பையில்) தோன்றும்; சிதை = அழிந்துபோகும்; தோல் தித்திக்கும் = தோற்பையாகிய உடம்பிற்கும் (தித்தி- துத்தி துதி = உறை/ sheath; தொந்திப்பன ஏது = சம்பந்தப்பட்டுப் பிறப்பு உண்டாவதற்குக் காரணம்; செய் = (நான்) முன்செய்த.

நாம் அனுபவிக்கும் நன்மையும் தீமையும் நாம் முற்பிறவிகளில் செய்த நல்வினைத் தீவினைகளால் வருபவை என்னும் கர்மக் கொள்கை, சைவ சித்தாந்தத்தின் முக்கியமானதொரு அடிப்படைக் கொள்கையாகும். இதைச் சிவஞானச் சித்தியார் எனும் நூலின் 99ஆம் பாடல் தெளிவாகக் கூறுகிறது:

பேறு, அழிவு இன்ப மோடு பிணிமூப்புச் சாக்கா(டு) என்னும்
ஆறும், முன் கருவுள் பட்டது அவ்விதி அனுப வத்தால்
ஏறிடும் முன்புசெய்த கன்மம், இங்(கு) இவற்றிற்(கு) ஏது
தேறு, நீர் இனிச்செய் கன்மம் மேல், உடல் சேரும் என்றே

"இப்பிறவியில் நல்லவற்றைப் பெறுதலும், பெறாமல் இருப்பதும், இன்பதுன்பமும், நீண்ட ஆயுளும் குறுகிய ஆயுளும் ஆகிய ஆறும், பிறக்கும் முன்பு கருவில் சூக்கும வடிவமாய் அமைந்திருந்தன. பின் முயற்சியோடு கூடிய அனுபவத்தால், அவை தூலமாய் வந்து பொருந்தும். முற்பிறவியிலே செய்த நல்வினை தீவினைகள் இப்பிறவியில் அனுபவிக்கப்படும் பேறு, அழிவு முதலிய ஆறுக்கும் காரணமாகும். இப்பிறவியில் செய்யப்படும் நல்வினை தீவினைகள் மறுபிறவிகளில் எடுக்கப்படும் உடம்பைப் பொருந்தி அந்த ஆறு அனுபவங்களுக்கும் காரணமாய் இருக்கும் என்று நீ அறிவாயாக!" என்பது இதன் பொருள் (சூக்குமம் = subtle; தூலம் = gross).

### 2.2.2. பிறப்பிலிருந்து விடுபடுவதற்கு வழி

2.2.2.1. கந்தரந்தாதி 39ஆம் பாடலில் 'சிவகரண தீ வர கந்த' என்று முருகனைப் புகழ்கிறார் அருணகிரியார்; 'தீ' என்பது 'புத்தி' என்னும் பொருளில் கையாளப்பட்டுள்ளது. இந்தத் தொடரின் பொருள் 'சிவகரண அறிவிணர்க்கு அனுக்கிரகஞ் செய்யும் கந்தனே' என்பதாகும்.

நம் உயிர் பிறப்பு - இறப்பு சங்கிலித் தொடரிலிருந்து விடுபடுவதற்குக் கர்ம வினையிலிருந்து முற்றாக விடுபட வேண்டும். முந்தைய கர்மங்களின் பயனை நுகர்ந்து அவற்றிலிருந்து விடுபடுவதற்கு முயற்சி நடைபெறும் வேளையில், புதிய கர்மங்கள் வந்து சேரும். அதற்காக வாழ்க்கையில் எதுவும் செய்யாமலும் பேசாமலும் இருந்துவிட முடியாது. நம் கடமைகளைச் செய்துகொண்டே

இருந்தாலும் வினைப்பயன் நம்மைச் சேராமல் இருப்பதற்கு என்ன வழி? நாம் செய்யும் ஒவ்வொன்றையும் இறைவன் தொண்டாகச் செய்ய வேண்டும்; இறைவனே உள்நின்று இயக்குகிறான் என்னும் பக்குவ உணர்வுடன் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் நம் சொல் - செயல் அனைத்தும் இறைவனது சொல்-செயல் ஆகிவிடும். இந்த உண்மையைத் திருவுந்தியார் எனும் நூலின் 6ஆம் பாடல் பின்வருமாறு கூறுகிறது:

நஞ்செயல் அற்று, இந்த நாம், அற்ற பின், நாதன்
தன்செயல் தானேயென்(று) உந்தீபற
தன்னையே தந்தானென்(று) உந்தீபற

" இது நம் செயல்' என்பது அற்று, 'நாம்' என்னும் ஆணவ எண்ணமும் அற்றதும் நம்முடைய செயலையெல்லாம் தன் செயலாக ஏற்றுக்கொண்டான் இறைவன்; அதோடு தன்னையே நமக்குத் தந்தான்" என்று கூறுகிறது இப்பாடல். இத்தகைய மனநிலையில் செயல்படும்போது, நம் உடம்பும் அதன் உறுப்புகளும் நம் கருவிகளாக (பசுகரணங்களாக) அல்லாமல் இறைவன் கையில் கருவிகளாகின்றன (பதி/ சிவகரணங்கள்) ஆகின்றன; இத்தகைய நிலையில் இறையருளும் இறையனுபவமும் நமக்குக் கிட்டும் என்பதைத்தான் 'இறைவன் தன்னையே நமக்குத் தந்தான்' என்று கூறுகிறார் திருவுந்தியார் ஆசிரியர், திருவியலூர் உய்ய வந்த தேவர்.

2.2.2.2. இறைவனையே இடைவிடாது சிந்தித்திருப்பது இறையருள் நாட்டம் உடையோருக்கு முக்கியமானதொரு கடப்பாடாகும். இறைவனையே தொடர்ச்சியாகச் சிந்தித்திருப்பது என்பது இறைவனையே தியானித்திருப்பதாகும். இறைவனையே தியானித்திருக்கும் நிலை முத்தி நிலை, குறிப்பாகப் பரமூர்த்தி எனும் சாயுச்சிய நிலை கைவரப் பெற்றோருக்கு இயல்பான நிலையாகும். சிவலோகத்தில் வாழ்தல், சிவனருகில் இருத்தல், சிவ வடிவம் பெறுதல் ஆகிய சாலோக சாமீப்ய - சாரூப்ய நிலைகளாகிய பத முத்தியில் உள்ளவர் பூமியில் மீண்டும் பிறப்பர்; ஆனால், இடைவிடா இறைத்தியானம் கைவரப் பெற்றால் பத முத்தியில் உள்ளவர் பூமியில் பிறக்காமல், இறையடி நீழலில் சென்று தங்கக்கூடிய வாய்ப்பு கிடைக்கக் கூடும். இடைவிடா தியானத்தின் தன்மையையும் சிறப்பையும் சிவஞான சித்தியார் 291ஆம் பாடல் விளக்கமாகக் கூறுகிறது:

"பாசிபடும் குட்டத்தில் கல்லினை விட்டெறியப்
 படும்பொழுது நீங்கியது, விடும்பொழுதில் பரக்கும்
ஆசுபடு மலமாயை அருங் கன்மம் அனைத்தும்
 அரனடியைப் புணரும்போது அகலும், பின் அணுகும்
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு
 நினைவுடையோர் நின்றிடுவோர் நிலையதுவாகவே"

---

இதன் பொருள் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது: "தடாகத்திலுள்ள பாசியானது கல்லினை மேலும் மேலும் எறியும்பொழுது எறிபட்டவிடத்து நீங்கி, கல்லெறியாது விடுமிடத்து வந்து நீரை மூடிக்கொள்வது போல மலமாயை கன்மங்களாகிய பாசமும் முதல்வனது திருவடியைத் தியானிக்கும்போது நீங்கி, விடுத்தவிடத்து ஆன்மாவைப் பொருந்தும். நேயத்தழுந்தி அரன் மலரடிக்கீழ் நீங்காத நிட்டையாளர்க்கு ஒருபோதும் அது வந்தடையாது................"

இந்தக் கருத்தைக் கருத்தில் கொண்ட அருணகிரியார், "நான் முருகனையே தியானித்துக் கொண்டிருக்கிறேன்; ஆதலால் என் தலையெழுத்து இனி உன்னால் எழுதப்படாது; அதாவது மற்றவர்களைப் போல் கருவில் விழ மாட்டேன்", என்று பிரம தேவனிடம் கூறுவது போல் பாடியுள்ளார்:

தீட்டப் படா, இனி உன்னால் , என் சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் ப(டு), ஆவி யவர், அல்லன் யான்,..............................
.......................................................................அவன்,தாள்
தீட்டப் படா, இ வனையே நினைவன் திசாமுகனே.
(கந்தரந்தாதி:72)

அருஞ்சொற்பொருள்:

முதல் அடி: தீட்டப் படா = எழுதப்படாது; சென்னி = தலை(எழுத்து); கறை= இரத்தம் முதலியவற்றால் நிறைந்த;
2ஆம் அடி: தீட்டப்படு(தீட்டுப்படு) = அசூயை அடைகின்ற; ஆவியவர் = உயிர்களை உடையவரைப் போல்.
4ஆம் அடி: தீட்ட = (முருகனின் திருவடியை) அடைய; படா = ஒருகாலும் அழிவில்லாத; இவனையே = இப்படிப்பட்ட முருகனையே; திசாமுகனே = பிரமனே.

## 2.2.3. இறைவன் ஒருவனே

சைவ சமயத்தவர் பல தெய்வ வடிவங்களை வழிப்பட்டாலும், சிவன் ஒருவனே முழுமுதல் தெய்வம் என்பது சைவ சித்தாந்தக் கோட்பாடு.

பலகலை ஆகம, வேதம் யாவையினும் கருத்துப்
பதிபசு பாசந் தெரித்தல், பதிபரமே அதுதான்
நிலவுமரு உருவின்றிக் குணம்குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்தமாகி
.......................................................................................

என்று பதியிலக்கணத்தை விளக்கிச் செல்லும் சிவப்பிரசாகத்தின் 13ஆம் பாடல். பதி ஆகிய இறைவன் எல்லாவற்றுக்கும் மேலானவன்; அருவமும் உருவமும் இல்லாதவன்; குணமோ ஓர் அடையாளமோ இல்லாதவன்; குற்றமற்றவன்; தனி ஒருவன்; என்றென்றும் உள்ளவன் என இவ்வாறு விளக்கிச் சொல்கிறது இப்பாடல். இந்நிலையில் கந்தரந்தாதி கந்தனைப் பாடுகிறதே, அது எவ்வாறு சைவ நூலாகும்? 'நாமே குகன்' என்று பார்வதியிடம் சிவபிரான் விளக்குவதற்காகக் கூறுவது கந்த புராணம். அந்த புராணத்தில், பல இடங்களில், பல நிலைகளில் 'சிவனே முருகன்' என்பது விளக்கப்பட்டுள்ளது.

கந்தரந்தாதியிலும், மும்மூர்த்திகளும் போற்றி வணங்கும் பரம்பொருளாக முருகன் போற்றப்படுகிறான். அந்தப் பாடல்,

திதத்தத்.தத் தித்தத் திதி,தாதை தாத,துத் தித்,தத்தி,தா
திதத்.தத்(து).அத் தித்,த தி,தித்தித்த தே,துத்,து தித்(து)இதத்(து)ஆ
தி.தத்தத்(து).அத் தித்,தத்தை தாத,தி தே,துதை தா(து)அதத்து,(உ)
தி.தத்(து).அத்(து).அத் தித்,தித்தி தீதீ திதி,துதி தீ,தொத்ததே
(கந்தரந்தாதி:54)

அருஞ்சொற்பொருள்:

முதல் அடி: திதத்தத்தத் தித்த = நடனத்துக்குப் பாடப்படும் ஜதிகள்;
திதி = (அந்தத் தாளக்கட்டுகளைத்) தம் நடனத்தால் காக்கும் ;
தாதை = (உலகத்துக்குத்) தந்தை (ஆகிய சிவனும்);
தாத = பிரமனும்;
துத்தி = படப் பொறியை உடைய; தத்தி = பாம்பினுடைய;
தா = இடத்தையும்

2ஆம் அடி: தித= நிலைபெற்று;தத்து = ததும்புகின்ற; அத்தி = சமுத்திரத்தையும் (தம்) படுக்கையாகக்கொண்டு; ததி = தயிரானது;
தித்தித்ததே = தித்திக்கின்றது என்று;து = உண்ட (கண்ணனும்);
துதித்து = துதிசெய்து வணங்கும்; இதத்து = பேரின்ப சொரூபியான.

3ஆம் அடி: ஆதி = முதல்வனே; தத்து = தந்தையுடைய;
அத்தி = அயிராவதத்தால் வளர்க்கப்பட்ட; தத்தை = கிளி (போன்ற தெய்வானைக்கு; தாத = தொண்டனே; திதே = தீமையே;
துதை = நெருங்கிய; தாது = சப்த தாதுக்களால் நிறைந்தும்;
அதத்து = மரணத்தோடும்.

4ஆம் அடி: உதி = சனனத்தோடும்;தத்து = பல தத்துகளோடும்;
அத்தி = எலும்புகளை மூடிய; தித்தி = பையாகிய இவ்வுடல்;
தீ = அக்கினியினால்;தீ = தகிக்கப் படுகின்ற; திதி = அந்நாளிலே;
துதி = உன்னைத் துதிக்கும்;தீ = புத்தி;
தொத்தது = உனக்கே அடிமையாக வேண்டும்.

இந்தப் பாடலில் 'சிவன்' என்று கூறப்படுவது, மும்மூர்த்திகளுள் ஒருவரான ருத்திரனை என்பது தெளிவு. மும்மூர்த்திகளுள் போற்றி வணங்குபவராக, பேரின்ப வடிவினராக முருகனைக் குறிக்கிறார் அருணகிரியார். தீமையே மிகுந்த ஜனனமரணத்துக்கு இடமாய், எலும்பு முதலிய தாதுகள் (minerals) நிறைந்த பொல்லாத இவ்வுடல் தீயில் வேகும்போது உன்னைத் துதிக்கும் வகையில் என் புத்தியை உன் திருவடியிணைக்கு ஆட்படுத்த வேண்டும் என்று தெய்வானைக்கு இனியவனிடம் வேண்டுகிறார் அருணகிரிநாதர்.

மும்மூர்த்திகளுக்கும் மேம்பட்டவன் - தனக்குமேல் யாரும் இல்லாதவன் சிவபெருமான்; மும்மூர்த்திகளும் வணங்கும் பேரின்ப வடிவினனாக முருகப் பெருமானைப் போற்றியிருப்பதானது, முருகப் பெருமான் சிவபிரானின் மறுவடிவமே என்பதைத் தெளிவாகச் சுட்டுகிறது. எனவே, முழுமுதல் பரம்பொருள் ஒன்றே என்னும் கொள்கையோடு ஒத்து நிற்கிறது இந்தப் பாடல்.

இந்த 54ஆம் பாடலுக்கு இன்னொரு சிறப்பும் உண்டு. வில்லிப்புத்தூரர் என்னும் புலவர், பல இடங்களுக்குச் சென்று, புலவர்களோடு போட்டியிட்டு, அவர்கள் தோற்றவுடன் அவர்கள் காதுகளை அறுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். இவ்வாறு திருவண்ணாமலைக்கு வந்த இடத்தில் அருணகிரியாரின் சிறப்பைக் கேட்டு அவரோடு போட்டியிட்டபோது, அருணகிரிநாதர் இந்தப் பாடலைப் பாடி விளக்கம் கேட்க, வில்லிப்புத்தூரர் சொல்ல முடியாமல் தோற்றுப்போகிறார். அருணகிரிநாதர் அவரைத் தண்டிக்காமல், இனி மற்ற புலவர்களைத் தொல்லைப்படுத்தாமல் இருக்குமாறு கூறுகிறார். எனவே, கர்வமும் கொடுமையும் கொண்டிருந்த வில்லிப்புத்தூராரின் செருக்கறுத்தச் சிறப்பு இப்பாடலுக்கு உண்டு.

### 3.முடிவு

ஏற்கனவே சொன்னதுபோல், கந்தரந்தாதியில் கந்த புராணச் செய்திகள் நிறைய உள்ளன. அச்செய்திகள் சித்தாந்தக் கொள்கைகளைப் பிரதிலிப்பவை. மேற்சுட்டிய சித்தாந்தக் கொள்கைகளைத் தவிர, ஞானவழியில் நிற்கும் உயிர்கள் நிரந்தரமாக இறைவனோடு அத்துவித நிலையில் கலந்து வாழும் வேட்கை கொண்டு, தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, தலைவனோடு ஒன்றுசேர எப்படி ஏங்குவாளோ,அது போன்ற வேட்கையோடு பாடிய பாடல்கள் நிறைய உள்ளன. இவை பார்ப்பதற்கு உலகியல் காதல் போல் இருந்தாலும், உண்மையில் இறைவன் ஒருவனே தலைவன், மற்ற உயிர்கள் எல்லாம் அவன் தாளைச் சேரக் காத்திருக்கும் தலைவியர் என்னும் அடிப்படையில் இப்பாடல்கள் அமைந்தும், காதல் வயப்பட்டோர்களைப் போல் எங்கும் எந்நேரமும் இறைவனையே காணும் ஆன்ம பக்குவத்தால் தோன்றும் பேரன்பை வெளிப்படுத்துகின்றன. எனவே கந்தரந்தாதியில் சைவ சித்தாந்தக் கொள்கைகள் , வெளிப்படையாகச் சுட்டப்படுவதை விட குறிப்பாகவே அதிகம் சுட்டப்பட்டுள்ளன என்று கூற வேண்டும்.

**உதவிய நூல்கள்.**


அருணகிரிநாதர், கந்தரந்தாதி (வில்லிப்புத்ரார் உரையு ம் ..பார்த்தசாரதி அய்யங்கார்(30 பாடல்களுக்கு எழுதிய) விருத்திரையும்),பூமகள் விலாச அச்சுக்கூடம் ,சென்னை 1937.

அருணந்தி சிவாச்சாரியார், சிவஞான சித்தியார் (மு.திருவிளங்கம் அவர்களின் புத்துரை),3ஆம் பதிப்பு, யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பணம் ,2007.

மெய்கண்ட சாத்திரம்(சித்தாந்த சாத்திரம்),தருமபுர ஆதீன வெளியீடு எ ண்2,சாது அச்சுக்கூடம், சென்னை,1942.

திருமுருக கிருபானந்தவாரியார்,கந்தவேள் கருணை(கந்தபுராணம்), 6ஆம் பதிப்பு, வானதி பதிப்பகம்,சென்னை 17,19.



சுவாமிகள் (மௌன நிலையில்)
தியானத்தில் அமர்ந்திருப்பது.



# எம்பிரான் ஏறும் நம்பிரான்

## (மயில் விருத்தம்)

முனைவர் மு.பழனியப்பன்,
தமிழ்விரிவுரையாளர், மா.மன்னர் கல்லூரி, புதுக்கோட்டை

அருணகிரிநாதர் தமிழ் வல்லவர். தனிப் பெருங்கடவுளாக முருகப் பெருமானை எண்ணிப் போற்றியவர். அவரது பாடல்கள் இசைக்கும், கருத்திற்கும், இனிமை சேர்ப்பன. தேவாரப் பாடலாசிரியர்கள் சிவனார் கோயில்களுக்குத் தேடிச் சென்று பாடியதுபோல இவரும் முருகர் கோயில்களுக்குத் தேடிச் சென்று பாடியவர். இவர் பாதநடையும் , பாநடையும் தமிழ் உலகிற்குப் பெருமை சேர்த்தன.

இவரது பாடல்களின் அடிகள் தோறும் முருகனின் திருநாமங்கள் வாழ்த்தப் பெறும். வாழும் நாள் எல்லாம் அவன் கருணைக்குரிய நாட்கள் என்ற எண்ணத்துடன் எழுதப் பெற்ற அப்பாடல்களுள் மயில் விருத்தம் என்ற பகுதியை மட்டும் எடுத்துக்கொண்டு அதன் சிறப்பைத் தருவதாக இக்கட்டுரை அமைகிறது.

'வேலும் மயிலும் துணை' என்ற வாசகம் மயிலின் பெருமையை உணர்த்துவதாகும். பக்தர்கள் மனம் மகிழ முருகப் பெருமான் வந்து அடியவர்கள் முன் தோன்றும் முன்னரே வேலும் மயிலும் தோன்றி அடியவர்களைக் காவல் செய்யும். அந்த அளவிற்கு விரைவும் கருணையும் கொண்டன வேலும் மயிலும் ஆகும். இவை இரண்டும் தீமைகளை அழிப்பன. நன்மைகளைப் பெருக்குவன. நாளும் பக்தர்களுக்குத் துணை செய்வன.

அருணகிரிநாதர் பாடிய மயில் குறித்த பதினொரு பாடல்கள் மயில் விருத்தம் எனப்படுகின்றன. மயில் ஆடும் பறவை. அதன் ஆட்டத்திற்கு ஏற்றச் சந்தக் கூறுகளை உள்ளடக்கி விருத்த யாப்பில் அருணகிரிநாதர் இப்பாடல்களைப் புனைந்துள்ளார். இதனால் இப்பனுவல் மயில் விருத்தம் என அழைக்கப்படுகிறது.

மயில் அண்டங்களைத் தன் பேடையை அணைத்துக் காப்பது போல அணைத்துக் காக்கும் தன்மை உடையது. இக்காரணத்தின் அடிப்படையில் அதற்கெனத் தனித்த விருத்தத்தை அருணைகிரிநாதர் பாடமுனைந்துள்ளார். அணையும் தனது பேடை அண்டங்கள் என்னவே அணைக்கும் கலாப மயில்(பா.5) என்ற பாடலடி இதனை உணர்த்தும்.

இந்த மயில் விருத்தப் பகுதியில்,

- மயிலின் வலிமை, மயிலின் அழகு, மயிலின் ஆடிவரும் பாங்கு, அதனை வணங்கினால் ஏற்படும் நன்மைகள்.
- முருகனின் நாமங்கள், குணங்கள், கருணைவெள்ளம், அடியாருக்கு அருளும் பாங்கு.
- சிவ பெருமான், உமாதேவி, கணபதி, திருமால், பிரம்மா, வள்ளி, தெய்வானை, இந்திரன், முப்பத்து முக்கோடி தேவர்கள் முதலான பலரின் இயல்புகள், நாமங்கள்

முதலான பல செய்திகள் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன. இவை பொருள் நிலையிலும் சந்த நிலையிலும் பெருமைக்குரியனவாகும்.

**மயிலின் தன்மை**

- உலகை நொடியில் வலம் வருமளவில் உலகடைய நொடிலயில் வரும் சித்ரக் கலாப மயில்(1)
- இமைய கிரி குமரி மகன் ஏறு நீலக்ரீவ ரத்ன கலாப மயில்(1)
  சேடன் முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சுரர் திடுக்கிட நடிக்கும் மயில்(2)
- கல்லார கிரியுருக வருகிரண மரகத கலாபத்தில் இலகு மயில்(2)
- விழிபவுரி கவுரி கண்டுளமகிழ விளையாடும் விஸ்தார நிரத்த மயில்(3)

இச்சிறப்புகள் தவிர இவ்விருத்தலத்தில் சிவன், பார்வதி, கணபதி, திருமால், இந்திரன் முதலான பலர் பற்றிய அருள் செய்திகளும் இடம் பெற்றுள்ளன. குறிப்பாகத் திருமால் பற்றி வரும் குறிப்புகள் அனைத்தும் திருமாலைப் புகழ்வனவே அன்றி இம்மியளவிற்கும் குறைத்துக் கூறுவன அல்ல. இதன் வழி அருணகிரிநாதர் சைவ வைணவப் பூசல்கள் நீங்கி இரு சமய இணைப்பை உறுதியாகப் பாடியவர் என்பது தெரியவருகிறது.

**பிற தெய்வங்கள்**

கணபதியை-கோமள கும்பகர அதிப(குடம் போன்றவயிற்றை உடையவர்), சாமர கர்ண(பரந்த காதுகளை உடையவர்), மோகரத கர முக(துதிக்கை உடையவர்), விசால கபோல விதான மத(மத நீர் கன்னங்களில் பெருகும் நிலை), மகோதர(பெருவயிற்றை உடையவர்), மூஷிக வாகன, சிந்தூர பத்ம முக, சிவ சுத கணபதி, விக்ன விநாயக என்று பலவாறு(பாடல் 1) அருணகிரிநாதர் கணபதியைப் புகழ்கிறார்.

திருமாலை-நாரணன், கேசவன், சீதரன், தேவகி நந்நதனன், முகுந்தன், நககோடி கொண்டு அவுநர் நெஞ்சம் பிளந்த கேசரி, முராரி, திருமால்(பாடல் 4) என்று போற்றுவதன் மூலம் சைவ வைணவ சமய இணைப்புப் பாலத்தை அருணகிரிநாதர் உருவாக்கியுள்ளார்.

நடராஜ உருவமும் இவ்விருத்தத்துள் இடம் பெறச் செய்யப் பெற்றுள்ளது. "வேதாள தாளங்களுக்கு இசைய ஆடுவார்" (பாடல் 3) என்ற குறிப்பு நடராஜ வடிவம் பற்றிய குறிப்பாகும்.

"ஆடுமயில் நிகர் வல்லி அபிராம வல்லி பரமாநந்த வல்லி சிறுவன்" என்ற குறிப்பு பார்வதியைக் குறிப்பதாகும். பார்வதி பற்றிப் பலகுறிப்புகள் இவ்விருத்தத்தில் அமைந்துள்ளன.

நீதி மறை ஓதண்ட முப்பத்து முக்கோடி நித்தரும் பரவு கிரி என்ற குறிப்பின் வழி தேவர்கள் பற்றிய குறிப்பும் இவ்விருத்தத்துள் காணப்படுகின்றது.

இவ்வாறு இவ்விருத்தம் மயிலையும், மயிலேறும் அழகனையும் பற்றிப் பல செய்திகளைத் தருவதாக உள்ளது.

**முடிவுகள்**

- தேவாரப் பாடல் ஆசிரியர்களின் இயல்பைப்போலவே அருணகிரிநாதரும் முருகன் உறையும் கோயில்கள் தோறும் சென்று நின்று பாடியவர்.
  அவர் திருத்தணி முருகனையும், வாகனத்தையும் எண்ணிப் பாடியது மயில் விருத்தம் ஆகும்.
- இம்மயில் விருத்தம் காப்புப் பாடல், மற்றும் பதினொரு பாடல்களை உடையது.

- நிறைவுப் பாடல் ஞானசம்பந்தர் பின்பற்றிய முறையான திருக்கடைக்காப்பு நிலையில் அதாவது பாடியவர் யார், பாடப்பட்டவர் யார், பயன் என்ன முதலான செய்திகளைத் தருவதாக உள்ளது.
- மயில் வலிமையும், அழகும் உடைய முருகனின் வாகனம். இது முருகன் தோன்றும் முன்னே அடியவர் துயரம் தீர்க்க வருவது ஆகும்.
- இதனை வணங்கினால் இந்திர பதவி முதல் பிரம்ம பதவி வரை கிட்டும்.
- இவ்விருத்தத்தில் திருமால் பற்றிய பல புகழ்ச்செய்திகள் உள்ளன. இதனடிப்படையில் அருணகிரிநாதரைக் காண்கையில் சைவ வைணவ இணைப்பு நிலையில் அவர் முருகனை முன்நிறுத்தியுள்ளார் என்பது தெரியவருகிறது.
- கணபதி, சிவன், பார்வதி, தேவர்கள் முதலான பலரும் இவ்விருத்தத்துள் சுட்டப் பெற்றுள்ளனர். அருணகிரிநாதர் முருகனின் சொந்தங்களைத் தன் சொந்தங்களாக எண்ணிப் போற்றக் கூடியவர் என்பது இதன் வழி தெரியவருகிறது.

'பக்கத்தில் ஒன்று படு பச்சைப் பசுங்கவுரி
பத்மப் பதங் கமழ்தரும்
பாகீரதிச் சுடில யோகீசுரர்க்குரிய
பரம உபதேசம் அறிவிக்
கைக்குச் செழுஞ்சரவணத்திற் பிறந்த ஒரு
கந்தச் சுவாமி' (2)

என்ற இரண்டாம் பாடலில் உபதேசச் செய்தி குறிக்கப் பெறுகிறது. கவுரி, யோகீசுரர் என்று முறையே பார்வதி, பரமசிவன் அழைக்கப் பெற்றிருப்பதும், கந்தசுவாமி என அவர்களின் மகனுக்குக் கூடுதல் அழுத்தம் தரப்பெற்றிருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.

'மாதாநு பாங்கி யெனும் மாலது சகோதரி
மகீதரி கிராத குலிமா
மறைமுநி குமாரி சா ரங்க நந்தனிவந்த
வள்ளி மணி நூபுர மலர்ப்
பாதார விந்தசேகரன், (3)

என்ற மேற்பாடலில் வள்ளியின் பிறப்பு எடுத்துரைக்கப் பெறுகிறது. வள்ளி மாதாநு பாங்கி என்றழைக்கப்படும் வள்ளுவரின் சகோதரி என்ற பொருளும் இதற்கு உண்டு. அதுவல்லாமல் திருமாலின் சகோதரி என்ற பொருளும் கொள்ளத்தக்கது. இவ்வகையில் வள்ளியின் பிறப்பு பற்றிய செய்தி இவ்விருத்தத்தில் இடம் பெற்றுள்ளது.

'குஞ்சரி மஞ்சரி தோய்' என்ற முதற்பாடல் குறிப்பின் வழியாக முருகப் பெருமான் தெய்வயானையை அணைந்த வரலாறு சுட்டப் பெறுகிறது.

இவ்வகையில் முருகனின் பெருமையைக் காட்டுவதாகவும் இவ்விருத்தம் அமைந்து சிறக்கின்றது. ஷடாநநன்-10, எம்பிரான்-11 என்று பாடல்கள் தோறும் முருகன் நாமங்கள் இவ்விருத்தத்தில் காட்டப் பெறுகின்றன.

முருகனின் குணங்களில் இரண்டு குணங்கள் அருணகிரிநாதரால் பெருமைப் படுத்தப்பெற்றுள்ளன. நிராலம்பன், நிர்வியாகுலன்(5) என்பன அவ்விரு குணங்கள் ஆகும். நிராலம்பன் என்பது உலகம் அனைத்திற்கும் பற்றுக்கோடாக விளங்கும் முருகன் தனக்கென ஒரு பற்றுக் கோடு இல்லாதவன் என்ற நிலைப்பட்டது ஆகும். இக்குணத்தை உடையவன் கந்தன். நிர்வியாகுலன் என்பது மனக்கவலை அற்றவன். அவனே பிறர் மனக்கவலையை நீக்கக் கூடியவன் என்ற பொருள் உடையது.

இக்குணமும் முருகனுக்கு உரியது ஆகும். இவ்வகையில் முருகனின் குணங்கள் பற்றிய செய்திகளும் இவ்விருத்தத்துள் எடுத்துகாட்டப் பெற்றுள்ளது.

மேலும் மயில் ஏறி ஆடிவரும் முருகனின் அழகைப் பின்வரும் பாடல் போற்றி உரைக்கின்றது.

'அகருமரு மணம் வீசு தணிகை அபிராமவேள்
அடியவர்கள் மிடியகலவே
அடல்வேல் கரத்தசைய ஆறிரு யுயங்களில்
அலங்கற் குழாம் அசையவே
மகரகன கோமளக் குண்டலம் பல அசைய மால்
வரை அசைய உலகபிலம் அசைய எண்டிசை அசைய
வையாளி ஏறும் மயில்'

என்ற பாடலில் முருகப் பெருமான் மயில் மீது வரும் போது அசையும் பொருள்களின் விளக்கம் தரப் பெற்றுள்ளது.

இவை தவிர வள்ளியை மணம் புரிந்த செய்தி, தெய்வானையை மணம் புரிந்த செய்தி, தந்தைக்கு உபதேசம் செய்க செய்தி போன்றவனவும் இவ்விருத்தத்தில் அருணகிரிநாதரால் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன.

'ஆயிரம் பிறை தொழுவர் சீர் பெறுவர் பேர் பெறுவர்
அழியா வரம் பெறுவரே' (11)

என்று இப்பாடல் பெறுவனவற்றைப் பட்டியல் இடுகிறது. பிரம்ம பதவி, அப்பதவிக்கான அன்னம், கலைவாணியின் அருள், வருண பதவி, கருட வாகனம் ஏறல், இலக்குமியின் செல்வத்தோடு இருத்தல், தேவேந்திரனுக்கு உரிய பெருமையைப் பெறல், ஆயிரம் பிறை காணல், புகழ் பெறல், அழியா வரம் பெறல் ஆகியன கிட்டும் என்று இப்பாடல் தெரிவிக்கின்றது.

இதனுள் இடம் பெற்றுள்ள ஆயிரம் பிறைகாணும் நிலை மக்கள் வழக்கில் தற்கால நடைமுறையில் உள்ளது. அதாவது சதாபிசேகம் செய்து கொள்பவர்களால் நல்ல தமிழ்ச் சொல்லாக இது பயன்படுத்தப் படுகிறது.

இவ்வகையில் மயிலின் பெருமையை விரிக்கும் விருத்தமாக இது அமைகிறது. இச்செய்திகள் உடன் முருகன் பெருமான் பற்றிய பல செய்திகளும் இதனுள் இடம் பெற்றுள்ளமை குறிக்கத்தக்கது.

**முருகன் பற்றிய செய்திகள்**

முருகனின் பல திருநாமங்கள் இத்திருப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன. வள்ளிகணவா, சரவணப் பொய்கை நாதா, தேவயானை அணைப்பவன், குமர, ஷடாநந, கந்த, சரவண, கிருபாகர, கணபதி விக்ந விநாயக தெய்வ சகோதரன்-காப்புப்பாடல், வேல் விநோதன், இமையகிரி குமரி மகன்-1, கந்தச்சுவாமி-2, சேகரன், கிரி அமர்ந்த பெருமாள்-3, முகுந்தன் மருகன், முருகன், உமை குமரன், அறுமுகன்-4, நீலகிரி வேலவன், நிராலம்பன், மருகன், குமரன், முருகன்-5, புனிதன், குமாரன், தீரத்தணி மகீரதன், க்ருபாகரன், கார்த்திகேயன்-6, வையாளி, திருத்தணி கைவேள்-7, விருத்தன், வேலாயுதன், கந்தச் சுவாமி-8, தணிகை அபிராம வேள்-9, குமரா, குருபர, முராரி மருகன், விநோத சமரன்.

இவற்றில் இருந்து பெறப்படும் மொத்தக் கருத்து பின்வருமாறு.

1. தம்பிரான் ஏறும் நம்பிரான் மயில்
2. அது பச்சை, ரத்ன நிறமுடைய மயில்
3. அசுரர்கள், ஆதிசேடன் நடுங்க ஆடும் மயில்

இவ்வகையில் மயில் விருத்தம் மயிலின் பெருமையை அளந்தறிவிக்கக் கூடியது என்பது தெளிவாகிறது.

மயிலின் ஆட்டம் இரண்டாவது பாடலில் மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டப் பெறுகிறது.

'சக்ரப் ரசண்டகிரி முட்டக் கிழிந்து வெளி
பட்டுக் ரவுஞ்ச சயிலத்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்பும் எழு
தனி வெற்பும் அம்புவியும் எண்
திக்குத் தடங்குவடும் ஒக்கக் குலுங்கவரு
சித்ரப் பதம் பெயரவே' (2)

என்ற நிலையில் மயில் மலைபெயர, புவி பெயர, எட்டுத்திசையும் பெயர நடனமாடும் இயல்பினதாக அருணகிரியாரின் பார்வையில் மயில் தெரிகின்றது.

இம்மயிலை வணங்குவதால் விளையும் பயன்கள் பற்றி மற்றொரு பாடல் எடுத்துரைக்கின்றது.

'மன்னான் முகம் பெறுவர் அன்னம் ஏறப் பெறுவர்
வாணி தழுவப் பெறுவரால்
மகராலயம் பெறுவர் உவணம் ஏறப் பெறுவர்
வாரிச மடந்தையுடன் வாழ்
அந்நாயகம் பெறுவர் அயிராவதம் பெறுவர்
அமுதாசனம் பெறுவர் மேல்'

- படை நிருதர் கடக முடை பட நடவு பச்சைப் பசுந்தோகை வாகை மயில்(3)
- வேலைச் சுவறச் சுரர் நடுக்கங் கொளச் சிறகை வீசிப் பறக்கும் மயில்(4)
- முருகன் உமை குமரன் அறுமுகன் நடவு விகட தட மூரிக் கலாபமயில்(4)
- மதுகைட வாரிதிரு மருகன் முருகன் குமாரன் வரமுதவு வாகை மயில்(5)
- ககனகூட மேலை முகடு மூடிய பசுங்கற்றைக் கலாப மயில்(6)
- கீர்த்தி மா அசுரர்கள் மடியக்ர வுஞ்சகிரி கிழிபட நடாவு மயில்(6)
- படர் சக்ர வாளக் கிரி துகள் பட வையாளி வரு பச்சை ப்ரவாள மயில்(7)
- கொடிய நிசிசரர் உதரம் எரிபுகுத விபுதர்பதி குடிபுகுத நடவு மயில்(7)
- தறுகண் வாசுகி பணா முடியெடுத் துதறுமொரு சண்டப் பரசண்ட மயில்(8)
- துக்க சுக பேதமற வாழ்வித்த கந்தச் சுவாமி வாகனமானதோர் துரக கஜரதகடக விகடதட நிருதர்குல துஷ்டர் நிஷ்டுரமயில்(8)
- வரை அசைய உர கபிலம் அசைய எண்டிசை அசைய வையாளி ஏறுமயில்(9)
- குலாசல சராசரம் எலாம் இனிது உலாவிய குலாவிய கலாபமயில்(10)
- தடாரி விகடாசுரன் குடாரித படாரித படாதிகழ் ஷடாநநன் நடாவு மயில்(10)
- எம்பிரான் இமையவர்கள் தம்பிரான் ஏறும் ஒரு நம்பிரானான மயில்(11)

என்று மயில் இவ்விருத்தத்தில் அதன் தன்மைகளோடு விளிக்கப்படுகிறது. பாடல் ஒன்றுக்கு இருமுறை என்ற அளவில் மயிலின் அழகு, மயிலின் வலிமை இவ்விருத்தத்துள் பாராட்டப் பெற்றுள்ளது.





# தனி ஆண்மை கொண்ட நெடுவேல்

முனைவர் மு. பழனியப்பன்
புதுக்கோட்டை

வேல் தமிழரின் அக, புற வாழ்வில் சிறப்பிடம் பெற்றதாகும். அக வாழ்வில் வேலன் வெறியாடலில் வேல் முக்கிய இடம் பிடித்து இருக்கும். தலைவியின் அகநோய் அதன்வழி தீர்க்கப் பெறும். புறவாழ்வில் தன் கணவன், தன் தந்தை, தன் பிள்ளை என்ற முத்தலைமுறையிடத்திலும் வேல் இருந்து வீரம் கூட்டும். இவ்வகையில் தமிழரின் வாழ்வில் வேல் நீங்கா இடம் பெற்றுள்ளது.

திருமுருகனின் கை வேல் புராணச் சிறப்பும் வீரச் சிறப்பும் மிக்கது. அதுவே முருகனின் அடையாளமாகவும், முருகனாகவும் கொள்ளத்தக்க பெருமையைப் பெற்றது. இவ்வேலை வணங்குவதையே முருக அடியார்கள் தங்கள் வேலையாகக் கொள்வர். அவ்வழியில் முருகனின் கை வேலைச் சிறப்பித்து அருணகிரிநாதர் வேல் விருத்தம் பாடியுள்ளார்.

பதிக அடிப்படை உடைய இவ்வேல் விருத்தம் பத்துப்பாடல்களைத் தன்னுள் அடக்கியது. மயில் விருத்தம், வேல் விருத்தம், சேவல் விருத்தம் ஆகிய மூன்றும் அளவால் ஏறக்குறைய ஒத்தன. மற்ற அருணகிரிநாதரின் படைப்புகளைக் காட்டிலும் உருவால் குறைந்தனவே அன்றி அருளால் மற்றவற்றிற்கு ஈடாகும் தன்மையன. அலங்காரம், புகழ், அனுபூதி ஆகியவற்றிற்கு ஈடான தனித்தன்மையை இவை மூன்றும் பெற்றிருப்பதால் அருணகிரிநாதரின் படைப்பு வகைமைகளுள் இவை சிறந்து விளங்குகின்றன.

வேல் விருத்தத்தில் பல செய்திகளைக் காட்டி மகிழ்கிறார் அருணகிரிநாதர். இந்த வேல் பகைவர்களை அழிக்கத் தக்க பெருமையுடையது. பகைவர் உடலில் தங்காத பெருமையது.

அண்டங்கள் ஒரு கோடி ஆயினும் குலகிரி
　　அனந்தம் ஆயினும் மேவினால்
அடைய உருவிப் புறம் போவது அல்லது தங்கல்
　　அறியாது　　　　　　　　　(பாடல் 7.)

என்ற அருணகிரிநாதரின் கூற்று இவ்வேலின் ஆற்றலை எடுத்துரைப்பதாகும். அண்டங்கள் ஆயிரம் தடுத்தாலும், மலைகள் அனைத்தும் தடுத்து நின்றாலும் இதன் ஆற்றலைத் தடுக்க இயலாது. தாக்கும் இலக்கினைத் தாக்கிப் புறம் போகும் தன்மையை உடையது இவ்வேல்.

இவ்வேல் சூரபதுமன் ஒளிந்திருந்த கருங்கடலை வற்றச் செய்த பெருமையை உடையது. இவ்வேலினைக் கண்டு மற்றக் கடல்கள் எல்லாம் கலங்கின. அக்கருங்கடலைப் போல எங்களையும் வற்றச் செய்துவிடாதே என அவை கலங்கினவாம். மேலும் இவ்வேலைக் கண்டு மலைகள் எல்லாம் மருண்டன. முன்னர் கிரௌஞ்ச மலையை அழித்தது போல எங்களையும் அழிந்து விடாதே என்று இவையும் கலங்கின. இவ்வகையில் வேலின் சேவடியைப் பிடித்து மலைகளும் கடல்களும் எங்களைக் காக்க வேண்டும் என்று வேண்டி நின்றன எனக் கற்பனை பொங்க வேலின் வெற்றியைப் புகழ்கிறார் அருணகிரிநாதர்.

நீடுமைக்கடல் சுட்டதிற்கு அடைந்து எழுகடலும்
　　நீ எமைக் காக்க எனவும்
நிபிடமுடீ நெடியகிரி எந்தமைக் கா எனவும்
　　நிகழ்கின்ற துங்க நெடுவேல் (பாடல். 9)
என்பது மேற்குறிப்பிட்ட செய்தியைத் தரும் பாடலாகும்.

கடல் வற்றிய இதே நிலை கொண்டு ஓர் உயர் கற்பனையை முதல் பாடலில் பதிவு செய்கிறார் அருணகிரிநாதர். முருகப் பெருமானின் கை வேல் கடலை வற்றச் செய்தது. இதனால் அக்கடலில் இருந்த மீன்கள் எல்லாம் சேற்றில் புரண்டன. நீரின்மையால் சூரியக் கதிர்கள் அனைத்தும் பாதாளம் வரை சென்று ஆதிசேடனின் முடியைத் தாக்கின. மேகக் கூட்டங்கள் நீரின்றி கலக்கமடைந்தன. வேடர் வீடுகளில் கடலில் இருந்த முத்துக்கள் தேக்கம் பெற்றன. அம்முத்துக்களை வேடர்கள் தந்து செந்நெல்லை மருத நில மக்களிடம் இருந்து பெற்றுக் கொண்டனர். புனித ஆறுகளாக கங்கை, யமுனை, சரசுவதி போன்றன வேலின் தொடுதலால் நற்கதி பெற்றன. கடல் மேடானது. இக்கற்பனையில் அறிவியல் உண்மையும் கலந்து நிற்கிறது. உலகம் மேடு பள்ளமாகவும், பள்ளம் மேடாகவும் மாறும் தன்மையைப் பெற்றது என்ற உண்மை வயப்பட்டு இக்கற்பனையை அருணகிரிநாதர் படைத்துள்ளார். (பாடல் ஒன்றின் கருத்து). இவ்வகையில் முருகன் கைவேல் வலிமை வாய்ந்ததாக விளங்குகிறது.

இவ்வேலின் கழுத்தில் மணி கட்டப் பெற்று இருந்தது. இந்த மணியின் ஓசை கேட்டதும் அண்ட உலகங்கள் சுழன்றன. எண்திசைகள் சுழன்றன. அக்கினியும் சுழன்றது. அலைகடல்கள் சுழன்றன. அரக்கர்களின் உயிரும் நில்லாமல் சுழன்றது. அகில் தலமும் சுழன்றன. நூறு கோடி எண்ணிக்கையின் மிக்க நட்சத்திரங்களும், சூரியக் கோள்களும் சுழன்றன. இவ்வகையில் வேலின் சுழற்றலில் கேட்கும் மணியோசைக்கு இத்தகைய வலிமை இருந்துள்ளது என்பது கருதத்தக்கது.

இவ்வேல் சிவன், திருமால், இந்திரன், சூரன் ஆகியோரின் ஆயுதங்களான சூலம், சக்கரம், வச்சிராயுதம்,சூலம் ஆகியவைகளை விட வலிமை பெற்றது. இவ்வல்லமை பெற்ற வேலை உடைய முருகனை நான்முகனும் தேவர்களும் வணங்கிச் சூரனை அடிமையாக்க வேண்டினர். அவ்வகையில் அதனை முடித்த தனி ஆளுமை பெற்ற நெடுவேலாக அது விளங்குகிறது.

வெங்காளர் கண்டர் கைச் சூலமும் திருமாயன்
வெற்றிபெறு சுடர் ஆழியும்
விபதர்பதி குலிசமும் சூரன் சூலம் கல்லி
வெல்லாது எனக் கருதியே
சங்க்ராம நீ சயித்து அருள் எனத் தேவரும்
சதுர்முகனும் நின்று இரப்ப
சயிலமொடு சூரன் உடல் ஒரு நொடியில் உருவியே
தனி ஆண்மை கொண்ட நெடுவேல் (பாடல் .2)

என இதன் வலிமையை உணர்த்துகின்றர் அருணகிரிநாதர்.

இவ்வாறு சூரனை வென்றதால் தேவர்கள் மகிழ்ந்தனர். தேவமகளிர் தனது ஆட்டங்களின்போது இவ்வெற்றியை வாய் ஓயாமல் பாடியபடியே இருந்தனர்.

பந்தாடலில் கழங்காடலில் சுடர் ஊசல்
பாடலினொடு ஆடலில் எலாம்
பழம் தெவ்வர் கட்கம் துணிந்து இந்திரர்க்க அரசு
பாலித்த திறல் புகழ்ந்தே
சாந்தரு நாள்மலர்க் குழல் அரம்பையர்களும்
சசி மங்கை அனையர் தாமும்
தன்னை அன்பொடு பாடி ஆடும் பிரதாபமும்
தலைமையும் பெற்ற வேல் (பாடல் 6)

என்ற பாடலில் இவ்வாடல் முறை காட்டப் பெற்றுள்ளது. குறிப்பாக சசி என்ற இந்திரனின் மனைவியும் இவ்வாடல் பாடலில் பங்கேற்றுள்ளாள் என்று அருணகிரிநாதர் குறித்திருப்பது கருதத்தக்கது. ஏனெனில் அவளையே சூரன் கைக்

கொண்டு இந்த;ரனின் பதவிக்கு ஆட்டம் விளைவித்தான். எனவே அவள் வேலின் வெற்றியைப் பாடுவது சிறப்பிற்குரியதாகும்.

இது அரக்கர்களுக்கு விடம் போன்றது. தேவர்களுக்கு அமுதம் போன்றது. அரிய முனிவருக்கு நிலவின் குளிர்மை உடையது. தீயோர்க்கு ஆதவனின் வெம்மையைப் போன்றது. அன்பர்க்கு மூல வினை முடிக்கத் தக்கது என அதன் தன்மைகளை அடுக்கி உரைக்கின்றார் அருணகிரிநாதர்.

ஆலமாய் அவுணருக்கு அமரருக்கு அமுதமாய்
ஆதவனின் வெம்மை ஒளிமீது
அரிய தவ முனிவருக்கு இந்துவின் தண்ணென்று
அமைந்து அன்பருக்கு முற்ற
மூலமாம் வினையறுத்து அவர்கள் வெம்பகையினை
முடித்து இந்திரர்க்கு எட்டா
முடிவில் ஆனந்தம் நல்கும் பதம் அளித்து எந்த
மூதண்டமும் புகழும் வேல் (பாடல்5)

என்ற இப்பாடல் வேலினை வணங்குவதால் ஏற்படும் பயன்களை எடுத்துக்காட்டுகிறது.

இவ்வேலை வழங்கியவள் உமையம்மை. அவளைப் போற்றித் துதிக்கின்றது ஒரு பாடல். கங்காளி? சாமுண்டி, வாராகி, இந்திராணி, கௌமாரி, கமலாசனக் கன்னி, நாரணி, குமரி, திரிபுரை, பைரவி, அமலை, கௌரி, காமாட்சி, சைவ சிங்காரி, யாமளை, பவானி,கார்த்திகை, கொற்றி, திரியம்பகி அளித்த செல்வச் சிறுவன் முருகன் எனப் போற்றுவதன் மூலம் இப்பாடல் உமையம்மையைப் புகழ்கின்றது. (பாடல். 2)

சிவபெருமானையும் ஒரு பாடல் சிறப்பிக்கின்றது. அமிர்த கலசம் போன்ற பிறையைத் தன் தலையில் சூடியவன், காலனுக்குக் காலனானவன், மேருவை வில்லாகக் கெண்டவன், வாள்,சூலம்- வச்சிரப் படை உடையவன், அக்கினியை மஞ்சனநீராகக் கொண்டவன், சங்கணிந்தவன், முக்கண்ணன், திசைகளையே ஆடையாக உடையவன் ஆன சிவ பெருமானின் புதல்வர் கைக் கொண்ட வேல் என்று வேலினைச் சிவத் தொடர்பு படுத்தி இவர் வணங்குகிறhர்.(பாடல். 8)

திருமாலையும் மற்றொரு பாடல் சிறப்பிக்கின்றது. கௌமோதகி என்ற கதாயுதம், சுதர்சன சக்கரம், சாரங்கம் என்ற வில், பாஞ்சசன்னியம் என்ற சங்கு, நாந்தகம் என்ற வாள் கொண்டு ஆதிசேடன் மீது படுத்திருக்கும் பெருமானின் காலடிகளைத் திருமகளும் மண்மகளும் வருட அரிதுயில் கொள்ளும் மயானது மருகன் முருகன். அவனின் கை வேல் சிறப்பிற்குரியது (பாடல் 7)

அடுத்து முருகனின் கோயில்கள் உள்ள இடங்களை ஒருபாடலில் சிறப்பிக்கின்றார் அருணகிரிநாதர்.

தாதா மலர்ச்சுனைப் பழனிமலை சோலைமலை
 தனிப்பரங்குன்று, ஏரகம்
தணிகைச் செந்தூர், இடைக்கழி, ஆவினன் குடி
 தடங்கடல் இலங்கை அதனில்
போதார் பொழில் கதிர்காமம் தலத்தினனப்
 புகழும் அவர் அவர் நாவினில்
புந்தியில் அமர்ந்தவன் கந்தன் முருகன் குகன்
 புணு;கவன் செணு;கை வேலே (பாடல்,3)

என்ற அவரின் பட்டியல் வேலனின் சிறப்பினை வேலோடு காண்பதாகும்.

இவ்வகையில் வேலின் சிறப்பினைப் பண்பினை அருளினைத் தொகுத்துத் தருவதாக வேல் விருத்தம் விளங்குகின்றது.

# சேவல் திருத்துசவம்

சேவல் திருமுருகனின் கொடியாகும். பெரும்பாலும் ஊர்திகளே கொடியாக இருக்கும் நிலையில் திருமாமுருகனுக்குக் கொடி வேறும் ஊர்தி வேறும் ஆயின. சேவல் 'கொக்கு அறுத்த கோமானே' எனத் தன் வாயால் எப்போது முருகப் பெயரை உச்சரிக்கும் பேறு பெற்றது. கொக்கு என்பது மாமரம். அந்த மாமரமாக நின்ற சூரபதுமனை அழித்த கோமான் முருகன். அவ்வாறு அழிக்கும்போது தோன்றியன மயில் வாகனமும், சேவல் கொடியும். இவ்வகையில் தான் தூய்மையான நிலையையும், இறைவனின் திருப் பெயரையும் மறவாமல் கூறிக் கொண்டே இருக்கின்றது சேவல்.

இச்சேவல் கொடியை மையமாக வைத்து அருணகிரிநாதர் சேவல் விருத்தம் பாடியுள்ளார். பதினொரு பாடல்களை உடைய இப்பகுதி பயம் நீக்கும். ஏவல், பில்லி, சூனியம், பேய், பிசாசு முதலியவற்றால் ஏற்படும் ஏதங்களை விரட்டும் தன்மை வாய்ந்தது. எம பயத்தையும் போக்கும் வல்லமை இதற்கு உள்ளது. இவ்வகையில் தினமும் பாராயணம் செய்ய வேண்டிய நிலையில் பெருமை பெற்றது சேவல் விருத்தம் ஆகும். இதனுள் பல அரிய கருத்துகளைத் தொகுத்து வைத்துள்ளார் அருணகிரிநாதர்.

மாயை எனும் இருள் வயப்பட்டு உலகம் தூங்குகிறது. இம்மாயையை விரட்டி ஒளியின் வருகையை உலகிற்கு உணர்த்தும் அரிய பணியைச் சேவல் தினந்தோறும் செய்து வருகின்றது. இது நடைமுறை. இந்நடைமுறையைச் சைவ சித்தாந்தக் கருத்துடன் இணைத்து அருணகிரிநாதர் சேவலை வாழ்த்துகிறார்.

உலகில் அநுதினமும் வரும் அடியவர்கள் இடர் அகல
உரிய பரகதி தெரியவே
உரகமணி என உழலும் இருவினையும் முறைபடவும்
இருள்கள் மிடி கெட அருளியே
கலகமிடும் அலகைக் குறள் மிகு பணிகள் வலிமையொடு
கடினமுற வரில் அவைகளைக்
கண்ணைப் பிடுங்கி உடல் தன்னைப் பிளந்து சிற
கைக் கொட்டி நின்று ஆடுமாம் (பாடல் 1)

எனச் சேவலின் ஆடலைத் தெரிவிக்கின்றார் அருணகிரிநாதர். இருவினையும் முறைபடவும் இருள்கள் மிடி கெட அருளி நிற்கும் சேவலின் நிலை சித்தாந்த வயப்பட்டதாகும். உலகில் ஒரே இருள்தான் உண்டு. அவ்வாறு இருக்கையில் அருணகிரிநாதரால் இருள்கள் என பன்மைப்படுத்திக் கூறுவதன் நோக்கம் என்ன என்று சிந்தித்தால் அது விளங்கும். மாயை, கன்மம், ஆணவம் என்ற இருள்கள் கவிவதன் மூலம் நல்வினை, தீவினை, என்ற இரு வினைகள் எழுந்து உயிரை நிலைப்பெறச் செய்யாது. ஆண்டவனை அடையச் செய்யாது அலைத்துக் கொண்டிருக்கின்றன என்ற கருத்தை உணர்த்துவதற்காகவே அருணகிரிநாதர் இப்பாடலில் இருள்கள் எனக் குறித்துள்ளார். இவ்விருளைக் கெடுப்பது சேவல் என்று பெருமைப்படுத்தப் படுகிறது.

இச்சேவல் எம் பயம் நீக்கும் என மற்றொரு பாடலில் காட்டுகின்றார் அருணகிரிநாதர்.

கரி முரட்டடி வலைக் கயிறு எடுத்து எயிறு பற்
களை இறுக்கியும் முறைத்துக்
கலகமிட்டு எமன் முன் கரம் உறத்துடரும் அக்
காலத்தில் வேலும் மயிலும்
குருபரக் குகனும் அப்பொழுதில் நட்புடன் வரக்
குரல் ஒலித்து அடியார் இடரைக்
குலைத்து முட்ட வருமாம் (பாடல் 3)

என்று எமன் வருகையில் குரல் தந்து உயிர்களை நற்கதிக்கு அழைத்துச் செல்லும் பெருமை பெற்றதாகச் சேவல் விளங்குகின்றது.

இச்சேவலை வணங்குவதால் பல நோய்களும் முருகன் அருளால் முகனடியார்களுக்கு ஏற்படாது. ஏற்பட்டாலும் வருத்தாது அவை ஒழியும் என உறுதிபட மற்றொரு பாடலில் அருணகிரிநாதர் காட்டுகின்றார்.

மாறாத முயலகன் வயிற்றுவலி குன்மம்
மகோதரம் பெருவியாதி
வாத பித்தம் சிலேற்பனம் குட்ட முதலான
வல்ல பிணிகளை மாற்றியே
சீராதா ஓராறு திருமுகம் மலர்ந்து அடியார்
சித்தத்தில் இருக்கும் முருகன்
சிலைகள் உருவிட அயிலை விடு குமர குருபரன்
சேவல் திருத்துவசமே (பாடல் 7)

என்பதில் முயலக நோய்(காக்காய் வலிப்பு), வயிற்று வலி, குன்மம்(வயிறு உலைச்சல்), மகோதரம்(பெருவயிறு), பெருவியாதி(பால் வினை நோய்கள்), வாதம், பித்தம், சிலேட்டுமம், குட்டம் போன்ற வல்ல பிணிகளை மாற்றும் போக்கினை உடையது முருகப் பெருமானின் அருள். இக்காலத்தில் இப்பாடல் மிகு தேவையான பாடலாகும். ஏனெனில் நோயில்லா மனிதரில் உலகில் இல்லை. எனவே அனைவரும் பாராயணம் செய்ய வேண்டிய பாடல் இது என்பதில் ஐயமில்லை.

இவ்வாறு சேவலை வணங்கினால் ஏற்படும் நன்மைகள் இப்பதிகத்தில் அதிக அளவில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. இச்சேவல் விருத்தத்தில் சம்பந்தர், பிரகலாதன் பற்றிய குறிப்புகளும் அருணகிரிநாதரால் காட்டப்பெற்றுள்ளன.

அரிய கொற்கையன் உடற் கருக்ம் வெப் பகையை உற்
பனம் உரைத்து அதம் மிகவும் ஏதம்
அமணரைக் கழுவில் வைத்தவரும் மெய்ப்பொடி தரித்து
அவனி மெய்த்திட அருளதார்
சிரபுரத்து அவதரித்து அமுதத் தினமணிச்
சிவிகைப் பெற்று இனிய தமிழைச்
சிவன் நயப்புற விரித்து உரை செய் விற்பனன் இகல்
சேவல் திருத்துவசமே (பாடல் 3)

என்ற பாடலில் ஞானசம்பந்தப் பெருமான் சிரபுரத்தில் பிறந்த நிலை, பாண்டியனின் வெப்பு நோய் தீர்த்த வரலாறு, சிவிகை பெற்ற அருள் செயல், சிவன் நயப்புற தமிழ் பாடியமை ஆகியன நிகழ்வுகள் தொட்டுக் காட்டப் பெற்றுள்ளன. திருநீற்றுப் பதிகம் என்ற சொல் மாலையால் நோய் நீங்கிய தன்மை போல சேவல் விருத்தப் பாடல்களைப் பாடுவோருக்கும் நோய் நீங்கும் என்ற அடிப்படையில் இவற்றை இவ்விருத்தத்தில் அருணகிரிநாதர் கையாண்டிருக்க வேண்டும்.

எவ்வகை ஆயினும் சம்பந்தப் பெருமான் குழந்தையாக நின்று இறைவனைப் பாடியவர். முருகப் பெருமானின் குழந்தையும் நிலையும் இவரின் குழந்தை நிலையும் அருணகிரிநாதருக்கு மகிழ்வைத் தந்திருக்கின்றன என்பது உறுதி.

மற்றொரு பாடலில் பிரகலாதன் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. குழந்தைகள் ஆறா அன்பு உடைய நிலை மனிதருக்கு உரியது. குழந்தைத் தெய்வங்கள் மீது தீராப் பற்று உடையவர் அருணகிரிநாதர் என்பதை மேற்கண்ட செய்திகள் உறுதி செய்கின்றன.

செங்கணன் மதலையிடம் இங்குளான் என்னு நர
சிங்கமாய் இரணியன் உடல்
சிந்த உகிரில் கொடு பிளந்த மால் மருகன்
சேவல் திருத்துவசமே (பாடல் 6)

என்ற பாடலில் பிரகலாதனின் செயல் குறிப்பாகக் காட்டப் பெற்றுள்ளது.

இதைத் தவிர, பல புராணக் கதைகளையும் இப்பகுதியில் நினைவு கூறுகிறார் அருணகிரிநாதர். அவற்றில் ஒன்று பின்வருமாறு,

தேன் ஆன மைக்கடலின் மீனானவற்கு இனியன்
சேவல் திருத்துவசமே (பாடல் 5)

நந்தி தேவர் மீனாக மாறிய புராணச் செய்தி இங்கு நினைவு கூறப் பெற்றுள்ளது. ஒருமுறை கயிலையில் சிவன் உபதேசித்துக் கொண்டிருக்கும்போது உமை அங்கிருந்த பொழிலில் உள்ள மீனின் மீது நாட்டம் செலுத்தினாள். இதனால் கோபமுற்ற பெருமான் உமையை மீனவப் பெண்ணாகப் பிறக்கச் செய்தார். உடன் இருந்த நந்தியை மீனாகப் போகும்படி சபித்தார்.

மீனவத் தலைவன் மகளாக உமை பிறக்க எவர்க்கும் அகப்படா மீனாக நந்திதேவர் பிறந்தார். இவ்வகப்படா மீனைப் பிடிப்பவருக்குத் தன் மகளைத் தருவதாக மீனவத் தலைவன் போட்டி வைத்தான். அப்போது பெருமான் செம்படவனாக வந்து இருவரையும் ஏற்றார் என்ற புராணக் கதை இங்கு அருணகிரிநாதரால் எடுத்துக் காட்டப் பெற்றிருக்கிறது.

இதுபோல தமிழின் பெருமையையும் அருணகிரிநாதர் இவ்விருத்தப்பாடல் ஒன்றில் காட்டியுள்ளார். முருகன் தமிழ்க் கடவுள். அகத்தியர்க்குத் தமிழ் உரைத்த கடவுள். சங்கம் ஏறிப் பாடல் ஏற்ற கடவுள். அவ்வகையில் முருகனின் தமிழார்வ நிலையைப் பின்வரும் பாடல் காட்டுகின்றது.

....புகழ்ச் செட்டி சுப்ரமணியன்
செச்சைப் புயத்தன் நவ ரத்ன க்ரிடத்தன் மொழி
தித்திக்கும் முத்தமிழினைத்
தெரியவரு பொதிகை மலை முனிவர்க்கு உரைத்தவன்
சேவல் திருத்துவசமே (பாடல் 4)

என்ற பாடலில் செட்டி சுப்பிரமணியன் என முருகன் வணிக மரபு சார்ந்தவனாகக் காட்டப்பெறுகிறான். மேலும் மொழி தித்திக்கும் முத்தமிழ் எனத் தமிழ் சிறப்பிக்கப் பெறுகிறது. பொதிகைமலை முனிவரான அகத்தியர்க்குத் தமிழ் உரைத்த செய்தியும் இங்குக் காட்டப் பெறுகின்றது. அவ்வளவு தமிழ்ச்சுவை உடைய முருகனின் கையில் இருப்பது சேவல் கொடி என்று கொடியைச் சிறப்பிக்கின்றார் அருணகிரிநாதர்.

அடுத்து முருகன் உறையும் இடங்களைப் பட்டியல் இடுகிறார் அருணகிரிநாதர்.

....குன்றுதோறாடல் பழனம்
குலவு பழமுதிர்ச்சோலை ஆவினன்குடி பரங்
குன்றிடம் திருவேரகம்
திரையாழி முத்தைத் தரங்கக் கை சிந்தித்
தெறித்திடும் செந்தில்நகர் வாழ்
திடமுடைய அடியார் தொழு பழையவன் குலவுற்ற

அடுத்த பாடலில் மயில் ஆடும் முறைமையை வியக்கின்றார்.

திகுடதிகு டதிதிகுட தகுட தித குடதிகுட
செக்கண செக்கண எனத்
திருநடனம் இடு மயிலில் வரு குமர குருபரன்
சேவல் திருத்துவசமே (பாடல் 10)

நிறைவுப்பாடலில் முருகனின் திருப்பெயர்களைச் சொல்லி அருணகிரிநாதர் மகிழ்கிறார்.

கனக மயில் வாகனன் அடல்
சேவகன் இராசத இலக்கண உமைக்குஒரு
சிகாமணி சரோருமுகச்
சீதள குமார கிருபாகர மனோகரன்
வேல் திருத்துவசமே (பாடல் 11)

இப்பாடலில் மயில்வாகனன், அடல் சேவகன்(வலிமை மிக்க வீரன்), உமை சிகாமணி, சரோருக முகன்(தாமரை முகன்), சீதளன்(தன்மையான குணத்தவன்), குமாரன்(இளமையானவன்), மனோகரன்(அடியார்க்கு என்றும் மகிழ்வைத் தருபவன்), என்று முருகனின் நாமங்களைப் பலப்படப் பேசுகின்றார் அருணகிரிநாதர். இவ்வகையில் சேவல் விருத்தம் முருகனின் படைவீடுகள், முருகனின் மயில்வாகனச் சிறப்பு, முருகனின் நாமங்கள் முதலனவற்றை எடுத்துக் காட்டி அதன்வழி சேவல் கொடியை நினைவு படுத்திப் பக்தர்களைக் கலகத்தில் இருந்து விடுவிக்கின்றது.

உ

# காப்பாய் அய்யா

("கவிஞர்கோ", "பொற்கிழிக்கவிஞர்", "காசிஸ்ரீ", "கயிலைமணி", "முத்தமிழ்ப் பேரறிஞர்"', அரு.சோமசுந்தரன், M.A.B.T, காரைக்குடி).

பொருள்பொலியும் சித்தியவான் ஆல யத்தில்
புகழோடு எழுந்தருளிக் கோயில் கொண்டு
அருள்பொலியும் தண்டாயுத பாணி தன்னை
அர்ச்சித்து வலம்வருவோர் அனைவ ருக்கும்
இருள் விலகும்; செல்வங்கள் சொத்துச் சேரும்
எழுதரிய பதினாறு பேறும் எய்தும்
மருள்நீங்கி சுயபுத்தி மதிப்பும் ஏறும்
மனைஓங்கி இன்பமெலாம் துய்த்து வாழ்வர்.

ஒருபக்கம் விநாயகரோ ஆட்சி செய்ய
உயர்வான விசாலாட்சி விஸ்வ நாதர்
கருமாரி அம்மனுடன் இடும்பன், மற்றும்
கடல்கடந்த ஞ்சநேயர் பெருமா னோடு
திருமாலும் வைரவரும் நவக்கிர கங்கள்
திசைதோறும் எழுந்தருளி அருள்பா லிக்கக்
குருவான சுப்பிரமணிய சுவாமி கோயில்
குடமுழுக்கில் கைகூப்பி வணங்கு வோமே!

நிலவளமும் நீர்வளமும் நிறைந்த நாடாம்
நேர்மைமிகு மலேசிய சித்திய வானில்
நலமிகுந்த தமிழ்மக்கள் முன்னை நாளில்
நற்றவத்தால் அமைந்திட்ட நல்ல கோயில்
தலமான தண்டாயுத பாணி கோயில்
தமிழாலே திருமுறைகள் அர்ச்சிப் போர்க்கு
வளம்சேரும்; நலம்சேரும்; வணங்க வாரீர்!
வளர்தண்டா யுதபாணி காப்பாய் அய்யா!

# முருக பக்தர்களும், அருளாளர்களும்

சிவநெறித் திருத்தொண்டர், தமிழ்ப்பணிச்செம்மல்
புலவர் சி. மகாலிங்கம் எம்.ஏ., பி.எட்

குன்றுதோறாடும் குமரன் குறிஞ்சி நிலத்தெய்வமாகப் போற்றப்பெறுகின்றார். தொல்காப்பியம் "சேயோன்மேய மைவரை உலமும்" என்கிறது. மைவரை உலகம் என்பது மஞ்சு சூழ்ந்து வளமுற்று வானளாவ ஓங்கிய மரங்கள் அடர்ந்துள்ள பசுமையான மலை. அதனை விரும்பி இடமாக வீற்றிருப்பவன் முருகன் என்பதாகும். அம்முருகன் சேய், செவ்வேள் என்றெல்லாம் போற்றப்படுகிறான். சங்க இலக்கியங்களில் மிகப் பழமையான நூல் பரிபாடல் ஆகும். அந்நூலில் காணப்படும் இருபத்திரண்டு பாடல்களில் எட்டு பாடல்கள் முருகப் பெருமானைப் பற்றியதாகும். முருகன் திருமேனியை "பவளத்தன்ன மேனி" என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது. காப்பியங்களிலும் முருகப்பெருமான் பெருமை பேசப்படுகின்றது. சைவத் திருமுறைகளும் முருகனைப் போற்றுகின்றன.

தமிழ்த் தெய்வமாம் முருகப் பெருமானை வழிபட்டு அருள் பெற்ற அருளாளர்களும் பக்தர்களும் மிகப் பலவராவர். அவர்கள் வாழ்வில் முருகப் பெருமான் நிகழ்த்திய அருட்சிறப்பைச் சிந்திப்போம்.

**புலவரைக் காத்தது**

நக்கீரர் பாண்டிநாட்டுப் பழம்பெரும்புலவர். நக்கீரர் கடைச்சங்கப் புலவர்களுள் தலைமை பெற்று விளங்கியவர். சிவபெருமானுக்கும் நக்கீரருக்கும் உண்டாகிய வாக்குவாதத்தில் இவருடைய அஞ்சாத் தன்மையை இறைவன் வியந்தாராயினும், அவரால் இவருக்குச் சாபம் ஏற்பட்டது. அச்சாபம் காரணமாக இவர் தொழுநோய் வரப்பெற்றார். இறைவன் நக்கீரரை நோக்கி "நீ கயிலையைத் தரிசிக்க உன்னைப் பற்றிய தொழுநோய் நீங்கும்" என்று அருள் செய்தார்.

நக்கீரர் சங்கப் புலவர்களிடம் விடைபெற்று கயிலையை நோக்கி விரைந்து செல்லலானார். காசி, கேதாரம் இவற்றைக் கடந்தார். அந்நிலையில் அங்கு ஒரு பெரிய தடாகத்தைக் கண்டார். அதில் நீராடினார். அத்தடாகத்தின் கரையில் இருந்த பெரிய ஆலமரத்தின் நிழலில் சிவபூசை செய்து கொண்டிருந்தார். அவ்வமயம் ஆலமரத்திலிருந்து ஒரு இலை அவர் முன்பாக விழுந்தது. அந்த இலை பாதி தண்ணீரிலும் பாதி கரையிலுமாக விழுந்து கிடந்தது. தண்ணீரில் விழுந்த பாதி மீனாகவும், கரையில் விழுந்த பாதி பறவையாகவும் மாறிற்று. மீன் பறவையைத் தண்ணீருக்குள் இழுத்தது. பறவை மீனை நிலத்திற்கு இழுத்தது. நக்கீரர் இப்புதுமையைக் கண்டு மிகவும் வியப்படைந்தார். அதனால் நக்கீரர் செய்த சிவபூசையில் தவறு ஏற்பட்டது.

இவ்வாறு அவ்வாலமரத்தடியில் சிவபூசையில் வழுவிய தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரை ஒரு பெரிய மலைக் குகையில் ஒரு பூதமானது அடைத்து வைத்திருந்தது. ஆயிரத்திற்கு இன்னும் ஒருவர் வேண்டுமே என்று அப்பூதம் காத்துக் கொண்டிருந்தது. பூசையில் வழுவிய நக்கீரரைத் தூக்கிச் சென்று அக்குகையில் அடைந்தது. ஆயிரம் என்ற எண்ணிக்கையும் முடிந்தது. பிறகு அப்பூதம் நியமப்படி, தான்பிடித்து வைத்துற்ற ஆயிரம் பேர்களையும் உண்ணுவதற்கு முன்நீராடச் சென்றது.

இதற்கு முன் சிறையில் அடைபட்டிருந்த தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரும் நீர் ஒருவர் இங்கு வந்து சேர்ந்தமையால் இன்று பூதத்திற்கு இரையாகப் போகின்றோம் என்று வருந்தினர்.

நக்கீரர் அவர்கள் கூறிய வார்த்தைகளைக் கேட்டு வருந்தி, முருகப் பெருமானைத் துதித்தார். "திருமுருகாற்றுப்படை" என்ற நூலைப் பாடினார். முருகப் பெருமான் நக்கீரருக்குக் காட்சி தந்து, பூதத்தைக் கொன்று எல்லோரையும் சிறையிலிருந்து விடுதலை செய்தார்.

திருமுருகாற்றுப்படை வீடுபெற எண்ணிச் செல்லும் ஒருவனை முன்பு வீடு பெற்றான் ஒருவன் முருகக் கடவுளிடத்தே ஆற்றுப் படுத்துவதாகப் பாடப்பெற்றது.

**மன்னரைக் காத்தது**

ஏறுமாநாட்டு நல்லியக் கோடனைக் கண்டு பொறாமையுற்ற மூவேந்தர்களும் அவனுடைய நகரங்களாகிய எயிற்பட்டினம், ஆமூர், வேலூர், மூதூர் முதலியவற்றை முற்றுகை இட்டனர். அப்போது நல்லியக் கோடன் ஆமூரில் தங்கியிருந்தான். கடும் போர் நடந்தது. கோடனுடைய அமைச்சர்களுள் ஒருவன் மாற்றார் பக்கம் சார்ந்து உளவு கூறுவானாயினான். அதனால் இவன் படை தோற்றது. கோடன் மனம் வருந்தி இரவே தன் மனைவியுடன் புறப்பட்டு வேலூர் கோட்டை சென்று, அங்கு முருகப் பெருமானை வழிபட்டு வந்தான். முருகப்பெருமான் அவன் கனவில் தோன்றி "அன்பனே! அஞ்சற்க, நீ நீராடும் கேணியிலுள்ள பூவைப் பறித்து நம் மந்திரத்தைக் கூறி பகைவர் மேல் செலுத்துக. வெற்றி கிடைக்கும் என்று அருளி மறைந்தார். நல்லியக் கோடனும் அவ்வாறே செய்து வெற்றி கண்டான். தான் இருந்த இடத்திற்கு வேலூர் எனப்பெயரிட்டு முருகனுக்கு ஆலயம் அமைத்தான். சிறுபாணாற்றுப் படையில்,

"திறல் வேல் நுதியில் பூத்த கேணி
விறல் வேல் வென்றி வேலோர் எய்திம்"

என வரும் பகுதியும், அதற்குரிய நச்சினார்க்கினியர் உரையும் சிந்தித்து உணரத்தக்கவையாகும்.

**புலவர்களுடன் விளையாடிய வித்தக விளையாட்டு**

பொய்யா மொழிப்புலவர் சோழ நாட்டில் வாழ்ந்தவர். தஞ்சைவாணன் கோவை என்ற நூலைப் பாடியவர். இவர் சிவபெருமானையன்றி வேறு யாரையும் துதியாதவராய் இருந்தார். அவரிடம் முருகன் அடியார் ஒருவர் சென்று, முருகனைப் பற்றிப் பாட வேண்டினார். புலவரோ "கோழியைப் பாடிய வாயால் குஞ்சைப் பாட மாட்டேன்" என்று கூறினார். முருகன் அடியார் வருந்தி முருகப் பெருமானிடம் சென்று விண்ணப்பித்தார். முருகப் பெருமான் "எவ்வாறேனும் பொய்யாமொழிப்புலவர் வாயிலிருந்து உம் விருப்பப்படி நம்மைப் பற்றி கவிதை வரச் செய்வேன். கவலை வேண்டாம்" என்றருளினார்.

பிறிதொருநாள் பொய்யாமொழிப் புலவர் பாலைவனத்தின்மேல் போய்க் கொண்டிருந்தபோது முருகன் ஒரு வேடராய் வந்தார். புலவரை நோக்கி "நீ யார்?" என்று அதட்டினார். அஞ்சிய பொய்யாமொழியார், "நான் ஒரு புலவன்" என்றார். வேடன் நகைத்து "எம் குல தெய்வமாகிய முருகனையன்றி வேறு யாருக்குப் புலவன் என்ற பெயருண்டு? நீ புலவனாயின் கவிதை பாட வருமோ?" என்று கேட்டார். அது கேட்ட புலவர் துணிவு பிறந்து, "ஆம்" என்றார். உடனே வேடனாகிய முருகன் "என் பெயர் 'முட்டை' என்றமைத்து, தாய் மகளைச் சுரம் போக்கிய துறையில் ஒரு வெண்பா பாடுக," எனப் பணித்தார். பொய்யாமொழிப் புலவர்

"பொன்போலும் கள்ளிப் பொறிபறக்கும் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனனே-மின்போலும்
மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போம்
கானவேல் முட்டைக்கும் காடு"

எனப்பாடினார். இதனைக் கேட்ட வேடனாய் வந்த முருகன் நகைத்து "கள்ளிப்பொறிபறக்கும் கானலிலே வேல் முள் குத்துமோ?" என்றார். புலவர்,"அங்ஙனமாயின் நீயே பாடு பார்க்கலாம்" என்று கோபமாய்க் கூறினார். உடனே வேடன்,

"விழுந்த துளி அந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடும் என்றும்-செழுங்கொண்டல்
பொய்யாத கானகத்திற் பெய்வளையும் சென்றனனே
பொய்யா மொழிப் பகைஞர் போல்"

என்று பாடினார். பாடலின் சுவை உணர்ந்த புலவர் வணங்கினார். வேடனாய் வந்த முருகன் உண்மை வடிவம் காட்டி, "அன்று எம் அன்பர் ஒருவர் கேட்டதற்குக் கோழியைப் பாடிய வாயால் குஞ்சைப் பாடோம் என்றீரே, குஞ்சைக் காட்டிலும் முட்டைப் பெரிதோ?" என்று வினைவினார்.புலவர் தம் தவறு அறிந்து சிவமே முருகன் முருகனே சிவம் என்பதை உணந்தார். அருள் பெற்றார்.

**சுட்டப்பழமா? சுடாத பழமா?**

தெய்வத் தமிழ்ப்புலமை சான்ற ஔவை மூதாட்டி வழிநடையாக நடந்து சென்றபொது, வழி ஒரு நாவல் மரத்தில் மாடு மேய்க்கும் சிறுவனாக முருகப்பெருமான் மரத்தில் ஏறி அமர்ந்து கொண்டிருந்தார். நடந்து வந்த களைப்பால் வருந்தும் ஔவை அச்சிறுவனை நோக்கி, பசி நீங்கப் பழம் தா என வேண்டினாள். அதற்கு அச்சிறுவன், பாட்டி சுட்டப் பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என்று கேட்டாள்

ஔவை திகைப்புற்று பழத்தில் சுட்டப் பழம் சுடாத பழம் உண்டோ என்று மயங்கி, அவ்வாறு உளதாயின் அதனை அறிவோம் என்று எண்ணி சுட்டப் பழம் தர வேண்டினாள். சிறுவனும் பழுத்த பழம் ஒன்றை தரைமீது வீச, ஔவை அக்கனிமேல் உள்ள மண் நீங்குவதற்காக வாயால் ஊதினான். அது கண்ட சிறுவன் பழம் சுடுகிறதோ? எனக் கூறி நகைத்தான். ஔவை நாணம் அடைந்து சிறுவன் கூறிய வார்த்தைகளைக் கேட்டு தன் இறுமாப்பு நீங்கினாள். சிறுவனாய் வந்த முருகன் உண்மை உருவங்காட்டி அருள் செய்தார்.

புலவராய் எழுந்தருளியது

காஞ்சிபுரம் குமரக் கோட்டத்து அர்ச்சகராக விளங்கியவர் கச்சியப்ப சிவாச்சாரி சுவாமிகள். அவர் முருகப் பெருமான் அருளால் கந்தபுராணம் இயற்றி அதனை அறிஞர் பேரவையில் அரங்கேற்றம் செய்த பொழுது, "திகடசக்கர செம்முகமைந்துளான்" என்ற செய்யுளின் உரை கூற நேர்ந்தது. அவையில் உள்ள புலவர் ஒருவர் எழுந்து திகழ்+தசக்கரம் என்பது திகடசக்கரம் என்று வருவதற்கு விதியாது என்று வினவினார். மெய்வழி நிற்கும் கச்சியப்ப சிவசாரியார், இப்பகுதி எம் வாக்கன்று! இறைவன் வாக்கு என்று உரைத்தார். புலவர் இறைவன் மேலேற்றின் அது இறைவனுடைமைக்கு இழுக்கன்றோ! ஆதலால் இதற்கு விடையருளி மேலே தொடர்க என்றனர். கச்சியப்ப சிவாசாரியார் நாளை விடை கூறுவோம் என்று மறுமொழி கூறி, வழக்கம் போல பூசை முடித்துக்கொண்டு, அன்றிரவு ஒன்றும் அருந்தாது முருகப் பெருமான் திருவடிகளை

மனத்துள் பதித்து அயர்ந்து உறங்கினர். முருகப் பெருமான் கச்சியப்பர் கனவில் வந்து கவலை கொள்ளற்க! சோழநாட்டுப் புலவன் ஒருவன் வருவான். ஐயம் நீக்குவான் என்று அறிவித்து மறைந்தார். சிவசாரியார் பூசை முடித்துக் கொண்டு அவைக்கண் சென்று நிகழ்ந்தவற்றை அறிவித்தார். அனைவரும் முருகப் பெருமான் அருளிய புலவர் வரவை எதிர்நோக்கியிருந்தனர். முருகன் புலவர் வேடந்தாங்கி எழுந்தருளி வந்து வீரசோழியம், சந்திப்படலம் பதினேட்டாம் செய்யுளை எடுத்துக் காட்டி நிறுவ, புலவர்கள் பெருமகிழ்வு கொண்டனர். புராணம் இனிது நிறைவேறியது.

கண்ணாடியில் கந்தனின் காட்சி

வள்ளலார் எனப் போற்றப்பெறும் இராமலிங்க அடிகள் சிறு வயதில் படிக்காமலும், ஆசிரியர் மகாவித்துவான் சபாபதி முதலியாரிடம் பயிலாமலும், தம் அண்ணனிடமும் கற்காமலும், வீடு தங்காது கோயில் குளங்களைச் சுற்றித் திரிந்தார். இதனால் தமையனார் சபாபதி பிள்ளை மனம் வருந்தினார். தன் மனைவியிடம் இனி தம்பிக்கு உணவளிக்க வேண்டாம் என்று கூறினார். இராமலிங்கர் கோயில்களைச் சுற்றி வந்தார். அண்ணியார் பார்வதியார் அம்மையார் கணவரின் கட்டளைக்கு அஞ்சியவராய், மற்றொருபுறம் கணவரின் தம்பியைக் கைவிடுவதற்கு மனம் இல்லாதவராய், சிறுவர்கள் சிலரை ஏவி இராமலிங்கரை அழைத்து வரச்செய்து கணவர் இல்லாத பொழுது உணவளித்தார்.

ஒருநாள் தந்தையார் இராமையா பிள்ளையின் திதி வந்தது. தம்பி உடனிருந்து உண்பதற்கில்லையே என்று சபாபதி பிள்ளை வருந்தினார். எனினும் மாலையில் வந்து அண்ணியாரால் உணவு உண்பிக்கப் பெறுவதை எண்ணி ஒருவாறு தேறியிருந்தார்.

எப்பொழுதும் போல் மாலையில் இராமலிங்கர் வீட்டிற்கு வந்தார். அண்ணியார் வருந்தி தமையனார் சொற்படி கேட்டு நடந்தால் இத்தகைய துன்பம் வராதே என்று கண்ணீர் விட்டார். இதனைக் கண்ட இராமலிங்கர் நாளை முதல் வீட்டில் தங்கிப் படிப்பதாகவும்,மேல் மாடியில் ஓர் அறையைத் தமக்காக ஒதுக்கி வைக்குமாறும் கூறிச் சென்றார். கை நிறைய புத்தகங்களோடும், ஒரு நிலைக் கண்ணாடியோடும் வீட்டிற்கு வந்தார். மேல் மாடி அறையினுள் புகுந்தார். கதவை மூடிக் கொண்டு முருக உபாசனையில் முனைந்தார். உண்ணும்போது தவிர மற்றபோது வெளியே வருவதில்லை. உறக்கமும் உள்ளேயே கொள்வார்.

இவ்வாறு இருக்கும் காலத்தில் ஒருநாள் காண்ணாடியைச் சுவற்றில் சார்த்தி அதன் எதிரே அமர்ந்து தியானிக்கத் தொடங்கினார். முருகப் பெருமான் கண்ணாடியில் தோன்றி வள்ளலாருக்குக் காட்சி அருளினார்.

முருகன் புராண மகிமை

அறுபடை வீடுகளில் ஒன்றானது திருச்செந்தூர். அத்தலத்தில் முக்காணியந்தணர் மரபில் வென்றிமாலை ஐயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிறிதும் கல்வி கல்லாமையால் திருக்கோயில் பரிசாரகர் ஆனார். ஒருநாள் திருவமுது சமைக்க காலம் தாழ்ந்தமையால் திருக்கோயிலார் கடும் தண்டனை விதித்தனர். அதனால் வெட்கிய அவர் உயிர்விடத் துணிந்து கடலில் சென்று விழுந்தார். முருகப் பெருமான் வெளிப்பட்டு நீ மகா கவியாய் ஆவாய் . இகழ்ந்தார் அனைவரும் போற்றுவர். அஞ்சற்க! இத்தலப் புராணத்தைச் செந்தமிழ்ச் செய்யுளால் இயற்றுக என்று அருளினார். வென்றி மாலை ஐயர் கந்தவேள் அறிவித்த வண்ணம் செவ்வல் கிருஷ்ண சாஸ்திரிகளிடம் சென்று வரலாறுகளைத் தெரிந்து கொண்டு திருச்செந்தூர் புராணத்தை இயற்றினார். முக்காணிமாரும், பிறரும் பரிசாரகன் பாட்டை அரங்கேற்ற வொட்டோம் என்று தடுத்தனர். கவிஞர் ஏட்டைக் கடலில் போட்டு

விட்டு சிவயோகத்து அமர்ந்து சிவபதம் அடைந்தார். அவ்வேடு யாழ்ப்பாணத்தின் வடபாகத்தில் உள்ள உபயகதிர்காமம் என்னும் புதுச் சன்னதியை அடைந்தது. அங்கே முருகதாசர் என்பவர் கந்தப் பெருமான் கனவில் அறிவித்த வண்ணம் பல படிகள் செய்வித்து முருகன் ஆலயங்களுக்கும் மடங்களுக்கும் அனுப்பி வைத்தார்.

ஒருகாலத்து அவ்வூர் முழுவதும் தீக்காற்று வீசியது. அதனால் பலர் இறந்தனர். புராணம் இருந்த தெரு மட்டும் தப்பியது. அதனை உணர்ந்த அத்தொரு மக்கள் இல்லங்கள் தோறும் ஒவ்வொரு ஏடு எழுதி வைத்துப் போற்றினர். இவ்வரலாற்றைத் திருச்செந்தூர் புராணச் சிறப்புப் பாயிரத்தால் அறியலாம்.

திருப்புகழ் பிறந்தது

இளமை மீதூர இன்பத்துறையில் எளியராய் விளங்கிய அருணகிரிநாதர் தொழுநோயால் பீடிக்கப்பெற்றார். அதனால் மனம் வருந்தி உயிர் துறக்க திருவண்ணாமலை கோபுரத்திலிருந்து குதித்தார். அவரை முனிவராய் வந்த முருகன் தாங்கிப் பிடித்தார். அருணகிரிநாதர் சொற்றமிழால் பாட முருகப் பெருமான் அருளினார். முத்தைத்தரு என்று பாடத் தொடங்கி, பல தலங்கள் சென்று திருப்புகழ் பாடினார். அருணகிரிநாதருக்காக முருகப்பெருமான் பல அற்புதங்களை நிகழ்த்தினார்.

பக்தர் பாம்பன் சுவாமிகள்

ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகள் யாழ்ப்பாணத்தில் பிறந்தவர். சிறந்த முருகபக்தர்.குமரகுருதாச சுவாமிகளிடம் முருகப் பெருமான் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்.

ஒருமுறை குமரகுருதாச சுவாமிகள் காலில் அடிபட்டு நடக்க முடியாமல் இருந்தபோது முருகப் பெருமான் அருளால் கால் குணமானது. அவர் முருகப் பெருமான் மீது பல பாடல்கள் பாடியுள்ளார். இவர் பாடிய சண்முககவசம் சிறந்த பாராயண நூல் ஆகும். மயூரபந்தம் குமரகுருநாச சுவாமிகள் எடுத்துக்கொடுத்த புதுமையான சித்திரக்கவியாகும்.
அக்கவி வருமாறு.....

“வரதன திபநக ரசுமுக வொருகுக வறிதுத புவிரிவிதி
மரகத வரிபர மதுகளி லசலவி மலமழ வெனலீரிய
மரபுறு குறுமுனி வருதிம யலசரமதிவிரி விபுதகுரு
சுரபதி நவரசபரகதி நகரம துகமழ முனிவருதி”

இவர் பாம்பனில் வசித்தமையால் பாம்பன் சுவாமிகள் எனப் போற்றப் பெற்றார்.

பக்தியின் மாட்சியை வெளிப்படுத்தியது

வடமலையப்ப பிள்ளை என்பவர் சிறந்த முருக பக்தர். திருச்செந்தூர் முருகப்பெருமான் மாசித் திருவிழா, ஆவணித் திருவிழாவின் போது கட்டளை ஒன்றை நிறுவி, தன்னால் கட்டப்பெற்ற மண்டபத்திற்குச் செந்தில் முருகனை எழுந்தருளச் செய்வார்.

அவ்வாறு செய்து வருகின்ற காலத்தில் பாஞ்சாலங்குறிச்சியைத் தலைமையிடமாகக் கொண்டு ஆண்ட வீரபாண்டிய கட்டபொம்மன் திருச்செந்தூரில் செந்தில் கந்தன் எழுந்தருள மண்டபம் ஒன்றை நிறுவினான். அவன்

வடமலையப்ப பிள்ளை நிறுவிய மண்டபத்திற்கு மண்டகப்படிக்காக செந்தில் கந்தன் எழுந்தருளுவதற்கு முன் தான் கட்டிய மண்டபத்திற்குத்தான் எழுந்தருள வேண்டும் என்று ஆணையிட்டான். வடமலையப்ப பிள்ளையோ அவனை எதிர்த்துக்கூற துணிவின்றி இருந்தார். மக்களும் அவ்வாறு இருந்தனர்.

செந்தில் கந்தன் அலங்காரம் செய்யப்பட்டு திருக்கோயிலில் இருந்து எழுந்தருளினார். அப்போது பெரும் புயல்காற்று வீசியது. அதனால் செய்வதறியாது வடமலையப்ப பிள்ளை மண்டபத்திற்கே கொண்டு சென்றார்.

வீரபாண்டிய கட்டபொம்மன் இதனைக் கண்ணுற்று முருகப் பெருமான் அருட் சிறப்பையும், வடமலையப்ப பிள்ளையின் பக்தியின் மாட்சியையும் உணர்ந்தான். இந்நிகழ்ச்சியை நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் புலவர் ஒருவர் கவிதையாகத் தந்திட்டார்.

"சிட்டர் போற்றிய செந்திலானடி, தினம் மறவாக்
கட்டபொம்மன் பாஞ்சால மாங்குறிச்சியைக் காப்போன்
மட்டிலாத அறுமுகனைத் தனது மண்டபத்தில்
இட்டமாகக் கொண்டுவர முனாள் நினைந்தன னிப்பால்
ஆவதாகிய எல்லையில் அறுமுகன் அருளால்
மேவுமின் மழைபொழிந்தன யாவரும் வியப்ப
தேவ தேவனும் வடமலையப்பனார் செய்த
பூவுலாவு மண்டபத்தில் முன்போலவே புகுந்தான் "

என்பதாகும்.

இவ்வாறு முருகப் பெருமான் அருள்பெற்ற அருளாளர்களும் பக்தர்களும் அருந்தமிழ்ப்பாக்கள் அருளி வழிகாட்டியதோடு, அறுமுகன் அருளைப் பெற ஒருநெறி மனத்தோடு தொழுதிட, துணையாய் முருகப் பெருமான் என்றும் துணையிருப்பான் என்று உணராம். சண்முக கவிராயர் செந்தில் கந்தனை மனமுருகி வழிபட்டதால் அவருடைய ஒரே மகன் குமரகுருபரர் ஊமை நீங்கப்பெற்று கந்தகலிவெண்பா பாடினார். செந்தமிழ் வித்தகராய் சிற்றிலக்கியம் பல படைத்தார்.

எனவே எழிற்குமனை ஏத்திட என்றும் இன்பம் கொண்டு இனிதே வாழலாம்.

புலவர் சி.மகாலிங்கம்
திருவிடைமருதூர்
தச்சை மாவட்டம்,
தமிழ்நாடு, இந்தியா.
Tel-0435-2460027



# சித்தியவான் பேராக் மலேசியா
# முருகன் துதிமாலை

எல். வசந்த குமார், எம். ஏ. (ஓதுவார் சுவாமிகள்).
கொடுமுடி, தமிழ் நாடு

உ

மத்தியாய் மயிலேறி மலேசிய நாட்டிடையே
சித்தியவான் தனிலுறையும் சிவபால வேலவனைப்
புத்தியால் தொழுதேத்திப் புகழ்மாலை பகர்பவர்க்கு
சத்தியமாய்ச் சந்ததிக்கும் சகலமும் அருள்பவனே. ... 1

முத்தியை வேண்டியே முருகவேளை நினைபவர்க்கு
பத்தியைத் தருவித்துப் பதமலர்க் கழல்காட்டி
வித்தையாய் வினையறுத்து வேதாகமப் பொருளுணர்த்தும்
சித்தியவான் தனிலுறையும் சிவசுப்ர மணியவனே. ... 2

பேராக் மாநிலத்தில் பெருங்கோயில் கொண்டருளி
சீரார் சிறப்புடனே சிங்காரக் கோலமதாய்
பாரோர் புகழ்ந்தேத்தும் பழநி ஆண்டவன்போல்
தீரா வினைதீர்க்கும் திருமுருகைத் தாள்பணிவாம். ... 3

# அருச்சனை பாட்டேயாகும்

முனைவர் த. கோ. பரமசிவம்
இணைப் பேராசிரியர், ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

ஆகாய வழிபாடே சிறந்தது. ஓசை ஒலியெல்லாம் ஆகி நிற்பது அதுவே. பிரணவ ஒலியாக ஓங்கியிருப்பதும் அதுவே. மற்ற பொருள்களுக்கெல்லாம் அழிவு உண்டு. ஆகாயம் அழியாதது. அருச்சனை வநஸயில் மலரிடுவதும், மணப்பொருள் இடுவதும் (குங்குமம், விபூதி, சந்தனம் சவ்வாது போன்றன) தூப தீபங்கள் காட்டுவதும் அவ்வக் காலத்தே அழிந்து படும் இயல்புடையன. ஆயின்பாடல்களோ மலரவன் செய்யும் உடல்கள் போல் பொருள்கள் போல் அழிந்துபடுவன அல்ல. என்றும் நிலைத்து நிற்பன. எனவேதான் உயர்ந்த அர்ச்சனை என்பது பாட்டே என்றார் சொற்றமிழ் காதலித்த சோதியார்.

மலர்வழிபாட்டையும் நீர் வழிபாட்டையும் கூட ஆரவாரத் தன்மையுடையனவாகக் கருதுபவர்கள் ஆசுகளைக் கொண்டு அர்ச்சிப்பவர்களை என்ன நினைப்பார்கள்? கனகார்ச்சனை என்ற பெயரில் தங்கக் காசுகளையும் வெள்ளிச காசுகளையும் எறிந்து வழிபடும் சடங்கையும் உயரிய அர்ச்சனையாகக் காட்டுகிறது ஒரி கூட்டம். வட நாட்டில் சில இடங்களில் போகிற போக்கில் மூர்த்தியின் மீது 5 காசு, 10 காசு, 25 காசுகளை எறிந்துவிட்டுப் போகிற நிலையைக் காணலாம். இவற்றையெல்லாம் கண்டு வெட்கப்படுவதைத் தவிர வேறென்ன செய்வது? இறைவன் நாம் போடும் 5,10 காசுகளுக்கா ஏங்கி இருக்கிறான்! உயர்ந்த அன்பல்லவா அவன் விரும்புவது? ஆறறிவு கொண்ட மனிதன் கூட இதை உணராது செயற்படுகிறான் என்றால், மூர்த்தியின் மீது உராய்ந்து தன் தினவைத் தேய்த்துக் கொள்ளும் எருமைக்கும் நமக்கும் என்ன வேறுபாடு? இவற்றையெல்லாம் நீடு நினைந்தவர் சேக்கிழார் பெருமான். அவர் சடங்குகளை நோக்கி நோக்கி உணர்ந்தவர். நாயன்மார்களின் பாடல்களில் தேனாகத் தோய்ந்தவர். பதிகங்கள் தோறும் பரமனைக் கண்டவர். ஆதலின் அவர்களின் உணர்வுகளை முழுவதுமாக உணரத்தலைப் பட்டார். உலகம் தோன்றிய நாள் முதலாக எத்தனை கோடி மக்கள் இறைவனை அர்ச்சித்து வழிப்படுள்ளனர்? அவர்களையெல்லாம் நாம் நினைவு கூர முடிகிறதா?

ஆயின் பாட்டால் அருச்சனை செய்து வணங்கிய இவர்களை நாம் 13 நூற்றாண்டுகள் கழித்தும் நினைத்துப் பார்க்கிறோம்! போற்றிப் பரவுகிறோம். காலங்கடந்தும் வாழ்வது அர்ச்சனை மலர்கள். அவை வாடுவதில்லை. சருகுகளாக மாறுவதில்லை. தண்ணீர் பட்டு அழிவதில்லை. நெருப்பால் வெந்து மடிவதில்லை. அம்மலர்கள் மண் பாதளம் புக்கு மால் கடல் மூடி மற்றேழ் உலகும் விண்பால் திசைகெட்டுத் திரியும் போதும் நறுமனம் வீசும் தன்மையன. எனவேதான் இறைவனை வழிபடும் அர்ச்சனை முறைகளில் தலையாயது அவனைப் புகழ்ந்து பாடுவதேயாகும் என்பதைச் சேக்கிழார் பெருமான் வற்புறுத்துகின்றார்.

இவ்வுண்மை நாயன்மார்தம் பாடல்களில் எந்த அளவுக்கு விவரிக்கப் பெற்றுலள்ளது என்பதைத் தொடர்ந்து காண்போம்.

**ஞானசம்பந்தர் :**

ஞானசம்பந்தப்பெருமான் பிறந்து மொழி பயின்ற நாள் முதலாக இறைவனை நாளும் தமிழ்ப் பாலாலைகளால் போற்றித் துதித்தவர். திரு நெறியத் தமிழாக அவர் காட்டுவது இறைவனை வாழ்த்தும் பாமாலைகளே. இறைவனே போற்றுவதும் துதிப்பதும் எதற்காக? இம்மைத் துன்பங்கள் கழியவும் மறுமை இன்பம் வாய்க்கவுமே இறைவனைப் பரவ வேண்டுவதன் நோக்கம் என்கிறார் அவர்.

'பரமனைப் பாடிடப் பாவமாயின தீரப்பனித்திடும்'.

என்றும்

'மறைவளரும் பொருளாயினானை-
மனத்தால் நினைந்தேத்த
நிறைவளரும் புகழெய்தும் வாதைநினையா
வினைபோமே'
(திருக்கலிக்காமூர்.6)

என்றும்

'மணஞ்சேரிப் பதியினைப் பாட -
வல்லார் வினைபாறுமே'

என்றும்

'கண்கள் ஆர்தரக் கண்டுநங் -
கடிக்குளத்
துரைதரு கற்பகத்தைப்
பண்கள் ஆர்தரப் பாடுவார்
கேடிலர்
பழியிலர் புகழாமே'

என்றும்

'பாடியாடும் மெய்ப்பத்தர்கட் -
கருள்செயும்
முத்தினை பவளத்தை'

என்றும்

'பாட்டி னாற்பணிந் தெத்திட -
வல்லவர்
ஓட்டி னார்வினை ஒல்லையே'

என்றும் ஆங்காங்கு அவர் சுட்டுதல் காணலாம்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை நன்னெறிக்குய்க்கும் விந்தையை உலகுக்கு எடுத்துக் காட்டியவரல்லவா அவர்? எனவே பாடித் தொழுதேத்தும் பான்மையால் பெற்ற இன்பம் அனைத்தும் உணர்ந்த நிலையில் பாடித் தொழுவதே தம் கடனாகக் காட்டுகின்றார்.

'ஆடும்அவிர் சடையான் அவன்மேய
ஆரூரைச் சென்று
பாடுதல் கைதிழுதல் பணிதல்
கருமமே'

என்றும்,

'இறைவன் கழலேத்தும்
இன்பம் இன்பமே'

'செல்வன் கழலெத்தும்
செல்வம் செல்வமே' (தில்லை)

என்றும் உறுதியாகக் கூறுகின்றார். இறைவனை எவ்வாறு பாடவேண்டும், பரவ

வேண்டும். அவன் குணங்களை, தெரிந்துபாட வேண்டுமா? பொருள் கூட்டிப் பாட வேண்டுமா? வேண்டாம். அன்பால் நினைந்து பாடினால் போதும். பொருளறி வாரா சொற்களானாலும் அவன் ஏற்றுமகிழ்வான். என்பதைத் திருவைகாவூர் பதிகத்தில் கூறுகின்றார்.

'கோழைமிட றாககவி கோளும்இல -
வாகஇிசை கூடுவகையால்
ஏழையடி யாரவர்கள் யாவைசொன
சொல்மகிழும் ஈசன்'

ஏழையடியவர்கள் சொல்லும் எல்லாவற்றையும் மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளான் இறைவன். குழந்தைகளின் பொருள் அறிவாரா சொற்களை மழலைப் பெற்றோர் மகிழ்ந்து சுவைப்பது போல கோழை நிறைந்த தொண்டைக் கொண்டு பொருளில்லாக் கவிதையை இசையல்லா இசையில் பாடினாலும் அவன் ஏற்று மகிழ்வானாம். இது அவர் காட்டும் அர்ச்சனையாகும்.

**அப்பர் பெருமான்**

இறைவனைச் சொல்லாகவும் சொல்லின் பொருளாகவும் பொருளின் கருத்தாகவும் கண்டு பரவியவர் அப்பர் பெருமான். அவனை மனத்தகத்தானாகவும், தலைமேலாகவும் கண்டு மகிழ்கின்றார். தொல்லை வினையருத்துச் சோதிகண்டு வீடுபெரும் அற்புதம் இறைவனைப் பாடுவதாலேயே நிகழும் என்று காட்டுகின்றார். இறைவனை வாழ்த்துவதற்கே நமக்கு வாய் படைக்கப்பட்டது. அவனை நினைப்பதற்காகவே நெஞ்சும் படைக்கப்பட்டது. எனவே வாயே, வாய்த்துக் கண்டாய், என்று ஆணையிடுகின்றார். இறைவனைப் பாடுவதால் இப்போதுள்ள வினைமட்டுமல்லாமல் முன் செய்த வினைகள் கூட ஓடிப்போகுமாம்.

'ஆடிப் பாடிஅண் ணாமலை கைத் தொழு
ஓடிப் போகும்நம் மேலை வினைகளே'

என்றும்,

'சொற்றுணை மாலைக்கொண்டு தொழுதுஎழு
வார்கட்கெல்லாம்
நற்றுணை யாவர் போலும் நாகஈச் -
சரவணாரே'

என்றும் அவர் அழகாகப் பாடுகின்றார்.

'பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி'

என்றும்

'பாராகிப் பண்ணாகிப் பாடலாகிப் பரஞ்சுடராய் நிற்பவன்'

என்றும் பாடலாகவே அவனைக் கண்டு போற்றுகின்றார்.

ஆடிப்பாடும் அன்பர்தம் உள்ளமே இறைவன் குடிகொள்ளும் கோயில். அவரையே அவன் பற்றி நிற்பான். பாடலால் பத்தி செய்பவர்க்கே அவன் நெருக்கமாவான். எனவே அவனைப் பாடுவதே நம் வாழ்க்கையின் பொருள் என்கிறார் அவர்.

'வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே'

என்றும்,

'பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்கு அண்ணித் தாகும்
அமுதினை' (திருவாமாத்தூர்)

என்றும்

'தொழுதுஎழுந்து ஆடிப் பாடித் தோத்திரம் பலவுஞ்சொல்லி
அழுமவர்க்கு அன்பர் போலும் ஆவடு துறைய னாரே'

என்றும்

'துன்பிலாத் தொண்டர் கூடித் தொழுதழுது ஆடிப் பாடும்
அன்பலாற் பொருளும் இல்லை ஐயன்ஐ யாற னார்க்கே,'

என்றும் அவனைப் பேசாத நாளெல்லாம் பிறவாத நாளே என்றும் வீணாக்கிக் கழித்த நாளே என்றும் அவர் தெளிவூட்டுகின்றார்.

இறைவனைப் பாடுவதற்கே புகழ்ந்து வாழ்த்துவதற்கே இப்பிறவி வாய்த்தது. இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்தி பிறவிக் கடலை நீந்த வேண்டிய நாம் தவறிவிட்டால் வரும் இழப்பு மிகப் பெரியதாகும். இறைவனைப் பாடித் தொழாத அன்பர்களுக்காக அவர் இரங்குகின்றார். அவர்கள் வாழும் ஊரையே விலங்குகள் வாழும் காடாக கண்டு வருந்துகின்றார் அப்பர் அடிகள்.

திருக்கோயில் இல்லாத திருவில்ஊறும் திருவெண்ணீறு அணியாத திருவில் ஊறும் பருக்கோடிப் பத்திமையாழ் பாடா ஊறும்.....................

அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே என்று நொந்து கொள்கிறார் அவர்.

பிறவிக் கடலைக் கடக்க வேண்டும் வீடு பேறு காண வேண்டும். சிவகதியைப் பெற்று இறுமாந்திருக்க வேண்டும். இது உயிர்களின் அவா. அதற்கு மிக எளிய வழி ஒன்றை அப்பர் பெருமான் காட்டுகின்றார். கல் தோன்றி மண் தோன்றாக் காலம் முதல் சித்தர்களும் முத்தர்களும் பத்தர்களும் எத்தனையோ வழியைக் காட்டிவிட்டனர். அவையெல்லாம் முடவனுக்குக் கொம்புத்தேன் காட்டிய வழிகளாய் இருந்தன. ஆயின், அப்பர் பெருமான் மக்கள் எல்லோராலும் எக்காலத்தும், எவ்விடத்தும், எந்நிலையிலும், எம்மொழியிலும், எச்சூழலிலும் கடைப்பிடிக்க முடிந்த ஒரு வழியைக் காட்டுகின்றார். அது அவனைப் பாடிப் பரவுவதே ஆகும். அவனைப் பாடினால் அவன் கிடைப்பான். சிவகதி கிடைக்கும். பிறவி துன்பம் நீங்கும்.

'கேடு மூடிக் கிடந்துண்ணும் நாடது
தேடி நீர்திரி யாதே சிவகதி
கூட லாந்திருக் கோவிலி ஈசனைப்
பாடு மின்இர வோடு பகலுமே'

அவனை இரவு பகலாகப் பாடித் துதிப்பதொன்றுமே போதும். காடு சென்று தவம் செய்ய வேண்டா. மூர்த்தி, தீர்த்தம், தலம் என்று ஊர் சுற்றி திரியவேண்டாம். பிறவி நோய்க்கு இப்படி ஓர் எளிய மருந்து.

அவனை அடைவதற்கும் நம் வினைகளைப் போகுவதற்கும் நாம் செய்யும் பிற செயல்கள் ஆரவாரத்தன்மை கொண்டனவே. அவனைப் பாடித் துதிக்காமல்

செய்யும் பிற வழிபாடுகள் வீணே. அவ்வழிபாடுகளால் பயன் ஏதுமில்லை என்பதை இறுதியாகக் காட்டுகின்றார் அப்பர் அடிகள்.

'கூட வேடத் தராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்
ஆடல் வேடத்தன் அம்பலக் கூத்தனைப்
பாட லாளர்க்கல் லாற்பயன் இல்லையே'
(பாவநாசத்திருகுந்தொகை)

இந்த உறுதிவாக்கைக் கூறிய பின்னும் மேலும் ஒருபடி கடந்து சென்று ஒரு காட்சியைக் காட்டுகின்றார் அவர். இறைவன் அவனை நினைந்து போற்றும் உள்ளத்தே நிற்பவன். அவன் விரும்பும் வழிபாடு நினைந்து போற்றி செய்வதேயாம் அதைவிடுத்து பூவும் நீரும் கொண்டு வழிபடும் ஆரவார வழிபாடுதான் சிறந்தது என்று நினைந்து செய்யும் பொய்யர்களைக் கண்டு அவன் வெட்கப்படுவான் என்று கூறுகின்றார் அவர்.

'நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே'

அப்பர் அடிகளின் அர்ச்சனைப்பாட்டே என்ற கொள்கையை இவ்வொரு பாட்டே போதுமன்றே.

சுந்தரர் :

இறைவனே சொற்றமிழால் தம்மைப் பாடுக என்று விரும்பி வேண்ட, நாளும் இன்னிசையால் பதிக மாலைகள் சூட்டி வழிபட்ட சிறப்பினையுடையவர் சுந்தரர். சுந்தரரின் இனிய பாடல்களுக்காக மானிடப் பெண்ணொருத்தி பால் தூதும் சென்றவன் இறைவன். இவ்வொரு நிகழ்ச்சியே இறைவன் தமிழ்ப் பாமாலை மீதுகொண்ட ஆழ்ந்த விருப்பைக் காட்டுவதாகும்.

'வாக்கென்னும் மாலைகொண்டு உன்னை
என்மனத்து
ஆர்க்கின்றேன் பரவையுண் மண்டளி
அம்மானே'

என்று தம் வழிபாட்டை விளக்கிய அவர், பாட்டுப் பாடிப்பரவும் எளிய செய்கையால் மிகக் கடுமையான வினைகள் அற்றுப் போவாதாக அதன் பயன்பாட்டைக் கூறுகின்றார்.

'பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார்.'

நம்மைத் தொடர்ந்து பற்றிய வினைகளும் இனிதொடர இருக்கின்ற வினைகளும் என இரு வகை வினைகளும் அற்று விடும் என்றார் அவர்.

'நல்லிசை ஞானசம்பந்தரும் நாவினுக்கு
அரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப்பானை'

என்ற பாடலில் அவர்க்கு முன் வாழ்ந்து, இறைவனைப் பாடிப்பரவியே சிவகதி பெற்றசிவச் செல்வர்களைக் குறிப்பிட்டு, அவர்தம் பாடலை இறைவன் ஏற்று மதித்ததை நினைவு கூர்ந்து, அவர்தம் வழியிலேயே தாமும் பாடிப் பரவுவதாகக் கூறுகிறார். அவர், இந்த எளிய வழியின் சிறப்பை முழுதும் உணர்ந்து நின்றதால் நற்றவா உன்னை நான் மறக்கினும் சொல்லு நா நமச்சிவாயவே என்று பாடுகின்றார்.
மாணிக்கவாசகர்

உருக்கமே வடிவான நூல் திருவாசகம் ஆகும். பாமாலைகளில் தேன் துளிகளால்நிறையப் பெற்ற அவ்வாசகத்தை அருளிய மாணிக்கவாசகப் பெருந்தகையார் உருகிய உல்லன்பால் நாளும் இறைவனைப் போற்றி வழிப்பட்டவராவர். மூவர் முதலிகளைப் போலவே இவரும் தமிழகம் முழுவதும் சென்று இறைவனைப் பாமாலைகளால் அருச்சித்து அருள் பெற்றார். ஞானசம்பந்தப் பெருமான் கிளிகளை அழைத்து இறைவன் புகழைப் பாடுமாறு வேண்டுகிறார். கன்னிப் பெண்களைக் குளித்து மகிழும் போதும் இறைவனைப் பாடித் துதிக்க வேண்டுகிறார். தாம் பெற்ற இன்பத்தை இவ் வையமும் பெற வேண்டும் என்று எண்ணிய எல்லோரையும் பாடித் துதிக்க அழைக்கின்றார்.

'மொய்யார் தடம்பொய்கைபுக்குமுகே
ரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்
பாடி'

'சீதப்புனலாடிச் சிற்றம் பலம்பாடி
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல் பாய்ந் தாடேலோர்
எம்பாவாய்'

இவ்வாறே பொற் சுண்ண இடிக்கும் போதும், தெள்ளெனம் கொட்டும் போதும் பொன்னூசல் ஆடும் போதும் அம்மானையை பாடும்போதும் அவனைப் பாடிக் கொண்டே இருக்க வேண்டும் என்கிறார். அவருடைய ஆழ்ந்த விருப்பம் இறைவனைப் பாடிப் பரவுவதே ஆகும்.

இதனை,

'பாட வேண்டும் நான் போற்றி
நின்னையே
பாடிநைந்துநைந்து உருகி நெக்கு-
நெக்கு
ஆடவேண்டும் நான் போற்றி'

என்னும் வரிகளால் தெளிவாக நாம் உணரலாம்.

மாணிக்கவாசகப் பெருந்தகையார் பாடிய திருவாசக அமைப்பே அருச்சனை வடிவானது தான். சிவபுராணம், போற்றித்திருவகவல், கீர்த்தித் திருவகவல், திருவண்டப்பகுதி திருவெம்பாவை போன்ற எல்லாப் பகுதிகளும் அருச்சனை அமைப்பில் அமைந்தவையாகவே காட்சியளிக்கின்றன.

இறைவனை நெஞ்சார்ந்த அன்பால் உருகி அழைத்து அவைப் போற்றும் அமைப்பில் இவை திகழ்வதை நாம் காணலாம்.

'அருச்சனை வயலுள் அன்புவித்து இட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத்து அரும்பெறல் மேகன் வாழ்க
கரும்பனைக் கச்சைக் கடவுள் வாழ்க.'

என்று அவர் அருச்சனை புரியும் தன்மையை விளக்குவார்.

சிவபுராணத்தில் வரும் ஒவ்வொரு வரியும் அருச்சனையின் பண்புகளை விளக்குவதாகவே உள்ளமையை நாம் தெற்றென உணரலாம்.

'ஈசன் அடிபோற்றி எந்தை யடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சேவடிபோற்றி'

என்று அவனைப் போற்றி அழைத்து,

'சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்'

என்று சிவபுராண நோக்கத்தை விவரித்து,

'எண்ணிறந்த எல்லை இலாதானே நின் பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்'

என்று அவன் அளாப்பருந் தன்மையை வியந்து,

'ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளி யானே'

என்று பரவி நிற்கின்ற தன்மையை நாம் உணராம்.

சிவபுராணத்தின் முடிப்பும், அதன் பயனும் இறைவனைப் பாடிப்பரவுவதால் வரும் நன்மையை விவரிப்பதாகவே உள்ளது.

'சொல்லற்கு அரியானைச் சொல்லித்
திருவடிக் கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து
சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார்-
சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து'

சிவகதியாம் சிவபுரத்தை அடைந்து மகிழ எவ்வளவு எளியவழியைக் காட்டுகிறார் மாணிக்கவாசகர்!

இறைவனை வழிபடும் முறைகளில் சிறந்தது அவனை நாவாரப் பாடிப் - பரவுவதே என்பதை உணர்த்திய மாணிக்கவாசகர், எவ்வாறு உருகிப் - பாடவேண்டும். எவ்வாறு உருகிப் - போற்ற வேண்டும். எவ்வாறெல்லாம் அவனை ஒன்றி நினைக்க வேண்டும், - எவ்வாறேல்லாம் பரவ வேண்டும் - என்பதை விவரிக்கத் தவறினாரல்லர் நெருப்பைக் கண்ட மெழுகைப் போல உள்ளம் உருகவேண்டும். அப்போது - தான் அருச்சனை ஒருமுகமாக அமையும் என்கிறார் அவர்.

'மற்றோர்தெய்வம் கனவிலும்
நினையாது
அருபரத்து ஒருவன் அவனியில்
வந்து
குருபரன் ஆசி அருளிய பெருமையைச்
சிறுமையென்று இகழாதே திருவடி
யிணையைப்
பிறவினை அறியா நிழலது போல
முன்பின் ஆகி முனையாது அத்திசை
என்புநைந்து உருகி நெக்குநெக்கு
ஏங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதஎன்று
அரற்றி
உரைதடு மாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்து இருதயம்
மலரக்
கண்களி கூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாள் தோறும்
தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதியன் ஆகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆகட மதுரை அரசே போற்றி'

(போற்றித்திருவகவல் 74-90)

அருச்சனைப் பாட்டிற்கு அவர் தரும் இவ்விளக்கம் நீடு நினைத்து போற்று தற்குரியதாகும். ஒன்றி நினைந்து உருகிப் பாடும் பாடும் பான்மையைச் சித்தரமாக்கி காட்டியன்றோ விளக்குகின்றார்.

சமய குரவர் களாகிய இவர்களுக்குப் பிந்திய அருளாளர்களும் இறைவனை வழிபடுவதற்குரிய சிறந்தவழி பாடுவதே என்பதை நிலை நாட்டியவர்களாகவே திகழ்தலை நாம் காணலாம். சேக்கிழார், கம்பர், பரஞ்சோதியார், ஒட்டக்கூத்தர், வில்லிப்புத்தூரார், அருணகிரிநாதர், தாயுமானவர், பட்டினத்தார், இராமலிங்கர் தண்டபாணி சுவாமிகள் எனத் தொடரும் அருளாளர்களின் கூட்டமும் அவர் தம் பாடல்களும் இதனை வலியுறுத்தல் காணலாம்.

இவ்வாறு சேக்கிழார் பெருமான் இத்தகு ஆழ்ந்த சிந்தனையுடன், 'அருச்சனை பாட்டே ஆகும்' என்னும் கருத்தை இறைவன் வாயிலாகவே வலியுறுத்தும் போக்கில் அமைத்திருக்கிறார் மீண்டும் அந்த பக்தி இயக்கம் கண்ட 'பாமாலை வழிபாட்டை' வலியுறுத்தும் போக்கில் சுந்தரரை முன்னிருந்து - இறைவன் வாயிலாகவே உளம் உருகும் பாடலே சிறந்த வழிபாடு சிறந்த அருச்சனை என்பதை உணர்த்தியுள்ளார் எனலாம். வாழ்க அருச்சனைபாட்டு!



# உலக மக்கள் நலம் வேண்டி உண்மை தொழுகை செய்வோம்

(தமிழ்க்குயில் கா.கலியபெருமாள்)

ஒளிர்கின்ற வளர்நகராம் சித்திய வானில்
உறைகின்ற தமிழவேளே தண்டா யுதனே
களிதருவாய் ஒளிதருவாய் காத்து அருள்வாய்
கல்வியுடன் நிதிதருவாய் கந்த வேளே
வலிமையுடன் காவலுறும் வானவர் வேந்தே
வாரிதிசூழ் சித்தியவான் மக்கள் தமக்கு
பொலிவுடனே அருள்தரும் பொன்னார் மகனே
புவிவாழ துணையாவாய் புதுமை செவ்வாய்

மகரமெய்யில் உகரமேறிய மாதவ முருகா
மனக்குன்றில் நின்றாடும் மயில்வேல் மருகா
சிகர உச்சியில் தவம்புரியும் சிவனின் மைந்தா
சீர்தமிழும் பார்தமிழும் செழிப்புறவே அருள்வாய்
அகரம்சேர் குகனேபுவி குமர குருவே
அருளமுதம் வழங்கிடவே அண்ணலே வா!வா!
நகரமக்கள் மாண்புயர நல்லருள் தா!தா!
நாள்தோறும் வேண்டுகிறோம் நற்கருணை புரிவாய்

ஐந்தியலும் ரவிமதியும் ஆன்மா சேர
அறுமுகனாய் வாழ்வுதரும் அன்னை பாலா
தந்திமுகன் தம்பியிவன் செந்தமிழ் நம்பி
தண்ணருளி அபயகரன் தங்க வேலன்
தந்தைக்கே அறமுரைத்த தகப்பன் சாமி
தமிழர்கள் குறைநீக்க தயவுடன் வருவான்
முந்தையில் வந்தபிணி போக்கி அருள்வான்
முருகவேளின் திருப்பெயரை ஒருமுறை சொன்னால்

தொண்டர்மனம் கொண்டலிடும் தண்ட பாணி
தொழுதமனம் கண்டிரங்க நின்ற ஞானி
பன்னிரண்டு கரங்கொண்ட பார்வதி மைந்தா
பாவங்கள் பொடிபடவே பறந்தே வருவாய்
மன்பதைக்கோன் தண்முகத்தான் சண்முக நாதன்
மலரடிகள் போற்றிடவே மக்களே வாரீர்
உன்மனத்து கோயிலிலே உறையும் பாலன்
உலகமக்கள் நலம்வேண்டி தொழுகை செய்வோம்



## வள்ளலாரின் அன்புத்திறனும் பக்தி நெறியும்

சேகர் நாராயணன்

'கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளுங் களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலம்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே
என்னரசே யான்புகலும் இசையுமணிந் தருளே'

-இராமலிங்க சுவாமிகள்

இப்பரந்த பூவுலகில் காலந்தோறும் அருளாளர்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றார்கள்; அந்தந்தக் காலக்கட்டத்தில் வாழும் மக்களுக்கேற்ற வாழ்வியல் நெறிமுறைகளை எடுத்துரைத்தே வருகிறார்கள். வாழ்க்கையில் அவரவர் தத்தம் இயல்புகளுக்கேற்ப அவ்வருளாளர்களுள் ஒருவரைத் தெரிந்தெடுத்து அவருடைய உபதேசங்களைக் கற்றுப் பயன் பெற வேண்டும்; என்பதே அவர்களின் அவதாரத்துக்குக் காரணமாகும். இவ்வுண்மையை உணர்ந்து வாழ்க்கைப் பாதையில் பீடுநடை போடுவது அவசியமாகும்.

இவ்வாறு வாழையடி வாழையெனத் தோன்றும் அருளாளர் மரபில் தோன்றியவர்தான் தமிழகத்தில் 19ம் நூற்றாண்டில் வாழ்ந்த அருட் பிரகாச வள்ளலார்-ஜோதி இராமலிங்கம்-வள்ளலார் என்று உலகம் போற்றும் இராமலிங்க சுவாமிகள்(5.10.1823 - 30.1.1874) ஆவார். வள்ளல் பெருமான் தம் வருகை பற்றி தானே கூறியதாவது.

"வாழையடி வாழை என வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவனன்றோ" என்று பெருமைபடக் கூறுகின்றார். யார் அந்தத் திருக்கூட்ட மரபினர் என்றால்;
திருவள்ளுவர், ஔவையார், நக்கீரர், திருமூலர், நாயன்மார்கள் நால்வர், ஆழ்வார்கள் பன்னிருவர், சேக்கிழார் சுவாமிகள், பட்டினத்தார், தாயுமானவர், குமர குருபரர் இன்றும் பலர் ஆவார்.

### ஏன் தோன்றினார்?

"அகத்தே கறுத்து புறத்தே வெளுத்து
அருளாளர்கள் தோன்றக் காரணம் உண்டு"

அ.கண்ணன் - உலகில் தர்மம் அழிந்து அதர்மம் தலை விரித்தாடும்போது அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலை நாட்ட நான் தோன்றுவேன்.

ஆ.திருமூலர் - என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாக தமிழ் செய்யுமாறு.

இ.நால்வர் - சைவத்திற்குப் புத்துயிர் ஊட்டியவர்கள்.
- சமண, பௌத்த தாக்கத்திலிருந்து சைவத்தைக் காக்க.
- இறை நெறியுடைய தமிழால் முடியும் என்பதை நிலைநிறுத்த

ஈ.வள்ளலார் - அகத்தே கறுத்து புறத்தே வெளுத்து இருந்த உலகர் அனைவரையும் சகத்தே திருத்த.

**வள்ளலார் யார்?**

i மதங்களை ஏற்றுக் கொள்ளாத இறை நெறியாளர்
ii அவரது இறை நெறியாகிய 'சுத்த சன்மார்க்கம்' சமுதாயச் சிந்தனையை உள்ளடக்கியது
iii சமுதாய முன்னேற்றத்திற்கான சேவையே இறைவனை அடையும் வழி (மக்கள் சேவையே மகேசன் சேவை)
iv எல்லையற்ற இறைவனை எல்லையற்ற சமுதாய சேவை மூலமே உணர்ந்து அறிந்து நுகரலாம்.

**நிறுவிய நிறுவனங்கள்**

1. சன்மார்க்கச் சங்கம்
2. சத்தியத் தருமச் சாலை (பசிப்பிணி போக்க)
3. சத்திய ஞானசபை (ஒளிவழிபாடு-இறைவனை ஒளிவடிவில் வழிபட)
4. சித்தி வளாகம் (அடிகளார் வாழ்ந்த இடம்)

வள்ளலார் சோதி வழிபாட்டிற்கு வடிவம் கொடுத்தவர். தம் பாடல்களால் பக்தி உணர்வையும், அறிவியல் உணர்வையும் வளர்த்தவர். ஆன்ம நேய ஒருமைப்பாடு, ஜீவகாருண்ய ஒழுக்கம்(உயிர் இரக்கம்), பசித்துயர் போக்குதல், ஆகிய நெறிகள் வள்ளலாரை ஓர் இயக்கத் தலைவராகவே தமிழகம் காண வழிவகுத்தது. இன்று தமிழ்கூறு நல்லுலகம் முழுவதும் திருவருட்பாவும் வள்ளலார் கொள்கைகளும் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன.

**சமரசக் கொள்கை**

சமரசம் என்பது நாடு, மொழி, சமயநெறி, சாதி முதலியவற்றில் கட்டுப்படாது கடந்து நிற்பது. எல்லா நாட்டார், எல்லா மொழியினர், எல்லாச் சமயத்தார் எல்லாச் சாதியாரிடத்திலும் புகுந்து நிற்பது சமரச ஞானம். நாடு, மொழி, சமயம், சாதி முதலியவற்றைக் கொண்டு சமர உணர்வை இழப்பது அறியாமை. இப்பன்மைகளினூடே படர்ந்து நிற்கும் ஒருமையே சமரசம். அச்சமரசமே கடவுள் காட்சியை நல்கும். அதையே இயற்கை அன்னை மக்களிடையே ஓம்ப முனைந்து நிற்கிறாள். அவள் முயற்சிக்கு எவரும் குறுக்கே நிற்கலாகாது. இதுகாறும் மனிதன் அறியாமையால் இயற்கை அன்னையை மறந்து இடர்பட்டது போதும்! போதும்! இனியாதல் சமரசத்திற்கு மனிதன் இடந்தந்து வாழ்வானாக.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே, இனிவரும் உலகிற்கு வேண்டற்பாலதாய சமரசத்தை இராமலிங்க சுவாமிகள் அறிவுறுத்திச் சென்றார். அவர் அருளிய சமரசப் பாக்கள் ஒன்றா? இண்டா? ஆயிரம்; ஆயிரம் அவற்றினை அருட்பாவில் பார்க்கலாம்.

சாதியும் மதமுஞ் சமயமுங் காணா
ஆதி அநாதியாம் அருட்பெருஞ் சோதி
சாதியும் மதமுஞ் சமயமும் பொய்யென
ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ் சோதி
சமயங் குலமுதல் சார்பெலாம் விடுத்த
அமயந் தோன்றிய அருட்பெருஞ் சோதி
சமரச சத்திய சபையில் நடம்புரி
சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே!

சாதி, மதம் முதலிய வேற்றுமைகளைச் சுவாமிகள் எவ்வாறு கடிந்துள்ளார் என்பதை உணருங்கள்; வேற்றுமை உணர்வு உள்ளவரை சமரச ஞானம் பெறல் இயலாது என்பதைத் தெளியுங்கள். சாதி, மதம் முதலிய வேற்றுமைகளால் விளைந்துள்ள தீமைகளைக் கண்டே அவைகளைக் களைந்து சமரசத்தை நிறுவச் சுவாமிகள் முயன்றார்.

**ஜீவகாருண்ய ஒழுக்கம்**

இராமலிங்க சுவாமிகளின் சமயம் என்ன என்று எவரேனுங் கேட்பின், அவர்க்குச் சுவாமிகள் சமயம் ஜீவகாருண்ய சமயம் அல்லது அருணெறி என்று கூறலாம். சத்தெனுஞ் செம்பொருளை உணர்த்தக் கூடிய 'மார்க்கம்' இயற்கை ஒன்றே. அவ்வியற்கைவழி வாழ்வு நடத்தின் அஃது அருளைக் கூட்டுகிறது. ஆகவே, சத்தை உணர்த்தி, அதனுடன் உயிரைச் சேர்க்க வல்லது 'அருள்நெறி' என்பதை உணர வேண்டும்.

உலகில் தோன்றிய பெரியாரெல்லாம் அருள்நெறியையே அறிவுறுத்திச் சென்றனர். உலகிலுள்ள எல்லாச் சமயங்களும் அருள்நெறியையே அறிவுறுத்துகின்றன.

"நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றால் -
தேரினும் அஃதே துணை"

என்றார் வள்ளுவனாகும். ஆகவே, உயிர் நலத்துக்குரிய பொதுநெறி அருணெறியே என்க. அதைக் கூட்டும் ஒன்றே சமரச சன்மார்க்கம் என்பது.

இராமலிங்க சுவாமிகளின் அருளின் திறத்தையும் நலத்தையும் தமது வாழ்வில் நன்குணர்ந்து, அருணெறி ஓம்புவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தார். இராமலிங்கர் என்னும் பெயருக்கு ஜீவகாருண்யமூர்த்தி என்று பொருள் கொள்ளலாம். அவருடைய சமயம் ஜீவகாருண்யம் என்று உறுதியாகச் சொல்ல வேண்டும்.

சுவாமிகள் இரக்க நிலையை அளந்துகூற யான் அருகனோ? சுவாமிகளின் இரக்கநிலை அளந்து கூறற்பாலதன்று. அவரது இரக்கம் எல்லை கடந்தும் ஓடியிருக்கிறது. இரக்கமே அவர் உயிர்; இரக்கமே அவர் உடல்; இரக்கமே அவர் என்று கூறல் மிகையாகாது. சுவாமிகளின் இரக்கநிலையை:

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோரென்
நேறருக் கண்டுளந் துடித்தேன்
ஈடின்மா னகளாய் ஏழைக ளாய்நெஞ்
சிளைன்மா னிகளாய் ஏழைக ளாய்நெஞ்
சிளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன்

என்று பாடும்போது அவரின் இரக்க குணத்தைக் காண முடிகிறது.

**கொள்கைகள்**

1. கடவுள் ஒருவரே
2. அவரை ஜோதி வடிவில் உண்மை அன்பால் வழிபட வேண்டும்.
3. சிறுதெய்வ வழிபாடு கூடாது.
4. அத்தெய்வங்களின் பேரால் உயிர்ப்பலி கூடாது.
5. புலால் உண்ணலாகாது.
6. சாதி, சமய முதலிய வேறுபாடுகள் கூடா
7. எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணி ஒழுகும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையைக் கடைப்பிடிக்க வேண்டும்.
8. ஏழைகளின் பசி தவிர்த்தலாகிய ஜீவகாருண்ய ஒழுக்கமே பேரின்ப வீட்டின் திறவுகோல்
9. புராணங்களும் சாஸ்திரங்களும் முடிவான உண்மையைத் தெரிவிக்கமாட்டா.
10. மூடப்பழக்க வழக்கங்களை ஒழிக்க வேண்டும்.
11. காது குத்துதல் மூக்குக் குத்துதல் வேண்டா.
12. கணவன் இறந்தால் மனைவி தாலி வாங்குதல் வேண்டா.
13. மனைவி இறந்தால் கணவன் மறுமணம் செய்ய வேண்டா.
14. இறந்தவரைப் புதைக்க வேண்டும், எரிக்கக் கூடாது.
15. கருமாரி, திதி முதலிய சடங்குகள் செய்ய வேண்டா.
16. எதிலும் பொது நோக்கம் வேண்டும்.

**திருவாசகம்**

சுவாமிகள் திருவாசகத்தை ஓதி ஓதி உருகுவாராம்; உருகி உருகி செயலற்றுக் கிடப்பாராம்; வழிநடைப்போழ்தும் யாண்டிருந்தேனும் திருவாசக ஒலி செவிக்கெட்டுமேல், சுவாமிகள் செயலற்று நிற்பாராம்; அவர் கண்களினின்றும் இன்ப நீர் பொழியுமாம், சுவாமிகட்குத் திருவாசகத்தின்மீது அன்புக்கு ஓர் அளவில்லை. சுவாமிகளின் நெஞ்சை உருக்கும் அன்பு அழலெனத் திருவாசகம் அவருக்குத் துணை புரிந்தது என்று சுருங்கச் சொல்லலாம்.

இராமலிங்க சுவாமிகள் திருவாசகத்தின் எழுத்தை எண்ணி ஓதினாரில்லை. சுவாமிகள் திருவாசகத்துடன் கலந்தார். அவர் திருவாசகமானார் என்றும் கூறலாம். அக்கலப்பு என் செய்யாது? அஃது இரும்பு நெஞ்சத்தையும் உருக்கும்; நீராக்கும்; அந்நீரைக் கண்வழிப் பெருக்கெடுத்து ஓடச் செய்யும்.

வான்கலந்து மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தஞ் சுவைகலந்தென
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாம லினிப்பதுவே'

என்று திருவாசகத்தைத் தாம் பாடிய முறையைச் சுவாமிகள் குறிப்பிடுதல் காண்க.

**முடிவு**

இராமலிங்க சுவாமிகள் பெற்ற இப்பேற்றை எல்லாரும் பெறலாம். அதற்கு எத்தகைக்கட்டுமில்லை; காவலுமில்லை. அக்கதவு எல்லார்க்குந் திறக்கப்பட்டிருக்கிறது. ஆன்றோர் பலரும் தாம் பெற்ற பேற்றை மற்றவரும் பெறுதல் வேண்டும் என்னும் வேட்கை மேலீட்டாளே, தம் அனுபவங்களை வெளியிட்டுச் சென்றனர்.

"கற்றதனா லாய பயன் என்கொல்வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"

## சிந்தனைத் துளி

**நமஸ்காரம்**



**அஷ்டாங்க நமஸ்காரம்:**
தலை, இரு கைகள், இரு காதுகள், இரு முழந்தாள்கள், மார்பு ஆகிய எட்டு அங்கங்களும் பூமியில் படுமாறு வீழ்ந்து வணங்குவது 'அஷ்டாங்க நமஸ்காரம்' ஆண்களுக்குரியது.

**பஞ்சாங்க நமஸ்காரம்:**
தலை, இரு கைகள், இரு முழந்தாள்கள் ஆகிய ஐந்து அங்கங்களும் பூமியில் படுமாறு விழுந்து வணங்குவது பெண்களுக்குரிய நமஸ்காரம்.



# திருமுறைகளின் திருவருட் பயன்கள்

தமிழ் இலக்கிய வளமும் இலக்கண வளமும் நிறைந்த ஒப்பற்றமொழி. அயல் நாட்டாரும் இவ்வுண்மையை அறிவுறுத்தி வருகின்றனர். மொழியியல் ஆராய்ச்சியாளர்களும், பழமையும், இன்மையும் வாய்ந்த, உயர்தனிச் செம்மொழியாகும் ஒண்டமிழ் என்று உரைக்கின்றனர். தெய்வீக ஆற்றலால் தமிழ்மொழி இத்தகைய பெருமை பெற்ற, அமிழ்தாயிற்று. தெய்வீகமே தமிழின் செறிந்த அமிழ்தம். வடவேங்கடத்தில்நெடுமாலும்,தென்குமரியில்குமரித்தாயுமிருந்து அருட்காவல்புரியும் இம்மாநிலத்தின் மொழி தமிழினிமை. அருளினிமையோடு அருளருபமும் பெற்றுப் பொங்கித் ததும்பிப் பயில்வோரின் சிந்தை மகிழச் செய்கிறது. திருஞானசம்பந்தர் அருளிய முதல் மூன்று திருமுறைகளும் திருநாவுக்கரசர் அருளிய நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளும், சுந்தரர் அருளிய ஏழாம் திருமுறையும், மாணிக்கவாசகர் பாடியருளிய திருவாசகம், திருச்சிற்றம்பலக்கோவையான எட்டாம் திருமுறையும், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூத்துருத்தி நம்பி, காட நம்பி கண்டராதித்தர், வேணாட்டிகள், திருவாலியமுதனார், புருட்டடீத்தம நம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பா ஒன்பதாம் திருமுறையாகவும், திருமூலர் திருவாய் மலர்ந்து அருளிய திருமந்திர மாலை பத்தாம் திருமுறையாகவும், திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள், காடவர்கோன், சேரமான் பெருமாள், நக்கீரத்தேவர், கல்லாடத்தேவர், கவித்தேவர், பரணத்தேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள் திருவெண்காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி ஆகிய பன்னிருவர் அருளிச் செய்த நாற்பது பிரபந்தங்களும் பதினோராம் திருமுறையாகவும் சேக்கிழார் பெருமான் அருளிய திருத்தொண்டர் புராணம் பனிரெண்டாம் திருமுறையாகவும் ஆக சைவத்திருமுறைகள் பன்னிரெண்டு என வழங்கப்படுகிறது. பன்னிரெண்டு திருமுறைகளும் தோத்திரம் என்றும், மெய்கண்ட நூல்களை பதினான்கு சாத்திரம் என்றும் கூறுவர். தோத்திரம், சாத்திரம் என்பது அல்லது பகலும். அநிதியும் சந்தியும், சொல்லும் பொருளும் போலாகும் என்பது பொது இயல்பாகும். அன்பை முதிரச் செய்வது தோத்திரமென்றும், அருளை முற்றுவித்து, அழியாத இன்ப அன்பை அடைவது சாத்திரம் என்றும் வகுக்கப்பட்டுள்ளன. பன்னிரு திருமுறைகளும் தோத்திர நூல்கள், அருள் நூல்களால் ஆண்டவனை வழிபடுதல் தோத்திரமாகும். அவ்வகையில் பன்னிரு திருமுறைகளும் அருளனுபவம் தேக்கிய, ஞானப் பெட்டகமாகவும், இன்ப அன்பின் முழுநிறைவு ஒலியாகத் தன் சுவையோடு வழங்கப்படுகிறது.

இராசராச சோழன், கங்கை கொண்ட சோழன் போன்ற தமிழ்வேந்தர்கள் எல்லாம் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா முதலிய திருமுறைகளை உளங்கசிந்து ஓதி, இறைவனை நாடொறும் வழிபட்டு ஆட்சி புரிந்து வந்துள்ளார்கள். இத்திருமுறைகளில் சிவத்துவம் வெளிப்பட்டுத் திகழும் அருள் நூல்களை, சிவபூசையின் அங்கமாகவும் வைத்து, வழிபட்ட உண்மையினையும் வரலாறுகள் கூறுகின்றன. சிவபூசைகள் சிவபூசை, அடியார்பூசை, குருபூசை, ஆகிய வழிபாடுகளுக்குள்ள, அத்துணை பயன்களும், திருமுறை வழிபாட்டிற்கும், பாராயணத்திற்கும் உண்டென்பதையும், சைவத் திருமுறைகள் பன்னிரெண்டினையும் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுதலும், பிறரை ஓதும்படி செய்வித்தலும், பிறர் சொல்லத் தாம் கேட்டலும், பிறரைக் கேட்கும்படி செய்தலும், இடைவிடாது சிந்தித்தலும், ஆகிய இவ்வைந்தும், எல்லாம் வல்ல இறைவனை வழிபட்டுப் போற்றும் ஞானபூசைக்கும் ஒப்பாகும் என அருணந்தி சிவாச்சாரிய சுவாமிகள் கீழ்க்காணும் பாட்டின் மூலம் வலியுறுத்தியுள்ளார்கள்,

"ஞான நுல்தனை யோதல், ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல் நன்றா
ஈனமில்லாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசை"

காலவளர்ச்சி விரைந்து வளரும் கருத்து வளர்ச்சி, விஞ்ஞான வளர்ச்சிக்கு ஏற்ப சைவ சமய அடிப்படை உண்மைகளை மக்கள் எளிதில் புரிந்து கொண்டு, மக்கள் நலங்கருதியே அருளப்பெற்ற பன்னிரு திருமுறைகளை நாடொறும் நியமத்துடன் ஓதி உய்வு பெற வேண்டுமென்பதுதான் தமிழ் இசைச் சங்கத்தின் நோக்கமாகும். நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வரும் நமது தேவார வகுப்புகளில் பயிலும் மாணவ, மாணவிகள் தேவாரத் திருமுறை இசையின்பத்தை பேரின்பபேராக அடையும் வண்ணம் இத்தொகுப்பு அவர்கள் கற்று வருகின்ற கற்கப்போகின்ற பன்னிரு திருமுறைகள் பயனளிக்கும் வகையில் வெளியிடப்படுகின்றது. நம்முடைய தமிழ் மறைமொழி, மந்திரமொழி, இத்தகைய சிறப்பு வாய்ந்ததிருமுறைகளை நமது பெரியோர்களும், இளந்தலைமுறையினரும் பக்தி ரசம் சொட்டச் சொட்ட, நினைந்து நினைந்து உருகி இசையோடு கற்று, இலக்கிய அறிவும், இசை நுணுக்கமும், பொருட்செறிவும், சொல்நயமும், நடையழகும் கொண்ட திருமுறைப் பாடல்களைப் பயின்று நன்கு தெரிந்து தெளிந்து அவற்றின் மூலம் அகன்ற அறிவையும், ஒழுங்குபடுத்தப்பட்ட நன்னெறி வாழ்க்கையும் அடையும் தாமும் இறையருள் பெற்று இசைச் செல்வத்தையும் பெற்றிட அக்கயற்கண்ணி அலவாய் அண்ணலை வேண்டி வாழ்த்துகிறோம்.

- தொகுப்பு : கு. பிரகாஷ் குருக்கள்



# சித்தியவான் ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயம்.

ரா. கிருஷ்ணன், ஆலயத் தலைவர்

இந்துக்கள் தாங்கள் வசிக்கும் இடத்திற்கு அருகில் தங்களுக்கென்று ஓர் ஆலயம் அமைத்துக் கொள்வது மரபாகும்.

தற்போது அமைந்திருக்கும் ஆலயத்திற்கு எதிர்ப் பக்கத்தில் 200 மீட்டர் தூரத்தில் 1930-ஆம் ஆண்டுகளில் அத்தாப்புக் கூரையைக் கொண்ட ஓர் ஆலயம் அமைக்கப்பட்டிருந்தது. அந்த இடத்தில் வேலும் படமும் வைத்து வழிபாடு செய்து வந்துள்ளார்கள்.

ஆண்டுதோறும் தைப்பூச விழா நடைபெற்று வந்ததாக அறிய முடிகிறது. தைப்பூச விழாவை முன்னிட்டு இரவில் தண்ணீர் அமிர்த பூஜை நடைபெறுவது வழக்கமாகும். அரிசி மாவில் சிறு உருண்டைகள் செய்து எண்ணெய்ச் சட்டியில் அதனை இடுவார்கள். எண்ணெய் கொதிக்கும் நேரத்தில் மாவு உருண்டைகளைக் கையால் எடுத்துச் சுவாமிக்குப் படைப்பார்கள்.

தண்ணீர் அமிர்த பூஜையை சித்தியவான் எஸ்டேட்டில் வசித்த காலஞ்சென்ற இராமன் தண்டல் அவர்கள் செய்து வந்தார்கள். திரு இராமன் தண்டல் அவர்கள் இந்த முருகன் ஆலயத்திற்கு அர்ச்சகராக இருந்து வந்துள்ளார்கள்.

1952-ஆம் ஆண்டு தற்போது இருக்கும் இடத்தில் ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயம் அமைக்கப்பட்டது. அதற்கான இடத்தை சித்தியவான் எஸ்டேட் நிர்வாகம் வழங்கியது.

ஆரம்பத்தில் ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயம் பலகையால் ஆனது. வேலும் படமும் வைத்து வழிபாடு செய்யப்பட்டது. திரு. இராமன் தண்டல் அவர்கள் பல வருடங்கள் அர்ச்சகராக இருந்து சேவை செய்து வந்துள்ளார். திரு.இராமன் தண்டல் வாழ்ந்த காலம் வரை தண்ணீர் அமிர்த பூஜை சிறப்பாக நடைபெற்று வந்தது என்று சொல்லலாம். ஆண்டு தோறும் தைப்பூச விழாவும் நடைபெற்று வந்தது.பதிவு செய்யப்படாமல் நிர்வாகம் செயல்பட்டு வந்தது. 30.11.1964-இல் முறயான நிர்வாகம் சட்ட விதிகளுக்கு உட்பட்டு அமைக்கப்பட்டது.

04.09.1972-இல் மூலவர் தண்டாயுதபாணி மற்றும் விநாயகர், அம்மன் சிலைகள் ஸ்தாபகப்பட்டன.

1977-இல் நவக்கிரக சன்னதியும் அமைக்கப்பட்டது. சித்தியவான் எஸ்டேட் துண்டாடப்பட்ட பிறகு ஆலய நிலம் தேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கத்தின் பார்வைக்கு வந்தது. புண்டுட் எஸ்டேட் விற்கப்படும் வரையில் நிலவரியைக் கூட்டுறவுச் சங்கம் செலுத்தி வந்தது.

ஒவ்வொரு வருடமும் முறையான நிர்வாகம் செயல்பட்டுவந்தது. 2004-இல் முறையான கட்டட வரை படம் ஈப்போ, இஞ்சினியர் உயர்திரு.கிருஷ்ணன் அவர்கள் வரைந்து கொடுத்தார்.

மஞ்சோங் ஊராட்சி மன்ற அனுமதியுடன் புதிய ஆலய திருப்பணி நடைபெற்று 01.06.2008-இல் கும்பாபிஷேகம் நடைபெற திருவருள் கூடியுள்ளது.



## சித்தியவன் அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணியர் திருக்கோயில் அன்றைய மற்றும் இன்றைய நிர்வாகத்தினர்

சித்தியவான் அருள்மிகு ஸ்ரீ சுப்ரமணியர் ஆலய நிர்வாகத்தினர்

ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயத்தில் முதல் நிர்வாகக் கூட்டம் 30 நவம்பர் 1964-ஆம் ஆண்டு நடைபெற்றது.

1964 - தலைவர் : காலஞ்சென்ற திரு.V.K. முருகேசு(1964 -1971)
செயலாளர் : காலஞ்சென்ற திரு.S. கிருஷ்ணன் PPN(1964 -1973)
பொருளாளர் : திரு.K. முனுசாமி(1964 -1971)

1972 - தலைவர் : காலஞ்சென்ற திரு.S. கிருஷ்ணன் PPN(1972 -1973)
செயலாளர் : திரு.P. பரமசிவம்(1972)
பொருளாளர் : திரு.க. அரங்கசாமி(1972)

1973 - தலைவர் : காலஞ்சென்ற திரு.S. கிருஷ்ணன் PPN(1973 -1974)
செயலாளர் : திரு. அப்பளநாயுடு(1973 -1974)
பொருளாளர் : திரு.க. அரங்கசாமி(1973 -1976)

1974 - தலைவர் : திரு.K. முனுசாமி(1974 -1976)

1977 - தலைவர் : திரு.A. அப்பளநாயுடு ACS(1977)
செயலாளர் : திரு.C. ஓரம்பன்(1977 -1980)
பொருளாளர் : திரு.S. கோபாலன்(1973 -1976)

1978/79- தலைவர் : திரு.R. கிருஷ்ணன்
செயலாளர் : திரு.S. கோபாலன்
பொருளாளர் : திரு.N. சிவம்

1980 - தலைவர் : திரு.R. கிருஷ்ணன்
செயலாளர் : திரு.க. அரங்கசாமி
பொருளாளர் : திரு.K. இராஜகோபால்(1980 -1995)

1995 - தலைவர் : திரு.R. கிருஷ்ணன்(இன்று வரை)
செயலாளர் : திரு.க. அரங்கசாமி(இன்று வரை)
பொருளாளர் : திரு.C. கண்ணன்(இன்று வரை)

இப்படிக்கு,

க.அரங்கசாமி, கௌரவ செயலாளர்,
ஸ்ரீ அருள்மிகு சுப்ரமணியர் ஆலயம்,
காடிக்குறிச்சி, சித்தியவான்.

# FACTS OF HINDUISM

## KARMA

Karma is what the soul undergoes in one of two ways, according to whether its actions are virtuous or not subsist until the end of enjoyment in this world.

*-Svayambu Agama*

God's cosmic law of karma governs our life experiences through cause and effect. As God's force of gravity shapes cosmic order, karma shapes experiential order. Through karma your thoughts, emotions and deeds, -whether good, bad or mixed-return to you. Thus, karma is your teacher. It imparts the lessons you need and are able to meet. For it is a divine law that no karmic situation will arise that exceeds your ability to resolve it. Karma is not fate. You have free will. No God or external force is controlling your life. It is your own karmic creation. To be responsible of your karma is strength. To blame another is weakness. Therefore, remember God's great law of karma and act wisely.

## REINCARNATION

Through his past works he shall return once more to birth, entering whatever form his heart is set on. This mighty soul unborn grows not old, no dies, for the soul is immortal and fearless.

*-Brihadaranyaka Upanishad*

Your soul is an immortal body of light. Absolute and super conscious essence is identical within the soul. Yet, this identity needs to be realized and unfolded within the soul. Toward this goal your soul undertakes many, many lifetimes in a physical body. You are now the sum total of all your past lives. You undergo every conceivable human experience as the forces of body, ego and desire manifest. In the latter lives these forces are transmuted toward spirituality. Finally your soul realizes God. After resolving all residual karmas, your soul no longer incarnates into a human form. As the Agamas and Vedas teach, the soul continues its evolution in the inner worlds. Therefore, live joyously, strive for spirituals unfoldment and do not fear death.

## DHARMA

May noble wisdom come to us from all sides, undeceived, unhindered, overflowing, so that the Devas may always help us onward, unceasing in their care, our Guardians day by day.

*-Rig Veda*

Dharma is God's Divine law, the law of being. Dharma is to the Individual what its normal development is to a seed-the orderly fulfillment of an inherent nature and destiny. When you follow dharma you are in harmony with the cosmic order: you abide close to God. The moral dimension of Hindu dharma is embodied in the eight yamas (restraints) eight niyamas (observances). The yamas are: non- violence; not stealing; disciplining desire; abjuring lust and greed; curbing arrogance and anger; not lying; avoiding injustice; shunning wrongdoing and evil company. The niyamas are: be pure in body, mind and speech; love mankind; seek contentment; cultivate devotion; develop forbearance; give charitably; study the scriptures; perform penance and sacrifice. Every person has his path; worship God, and your dharma will become clear.

**WORSHIP**

Offering of perfumed substances, flowers, incense, lamps and fresh fruit - these are the five elements of the traditional puja which culminates with offering of the lamps.

***-Kamika agama***

Worship expresses our profound love for God. Puja, bhajan, prayer and meditation are all worshipful means of direct, personal communion with God and Gods. God, Gods and devas are real beings dwelling in the inner worlds. They can and want to help you in every aspect of your life. This they do in accord with your own patterns of karma and dharma. Daily, personal puja at home keeps you God- conscious and your home holy. God has established many temples to allow us to intimately communicate with Him. Temple puja opens a channel to God. Through His personal presence and shakti, prayers are answered, karma softened, spiritual unfoldment guided. Surrender, worship with intense love, and God hears.

*These four facts-karma, reincarnation, dharma, worship – are essence of the Vedas and Agamas and the fabric of every Hindu's life. Speak of them to all who will listen. They are the heritage of all souls on this planet.*

# HOLY DAYS AND FESTIVALS

## TO ENHANCE INDIVIDUAL AND FAMILY WORSHIP, THE SACRED CALENDAR OFFERS DAYS WE ALL CELEBRATE TOGETHER

What is ***Navaratri?*** Navaratri one of the most sacred of Saivite Hindu festivals, second only to Maha Shivaratri. On Navaratri we worship God Siva as Parasakti.

Navaratri is celebrated during the nine nights following the month of Putthathi / October. During Navaratri, which literally means "nine nights" we worship Siva as Parasakti, the Universal Mother, through prayers, pujas and bhajans. Just as we worship the unmanifest Paramasivam on Sivaratri, so do we worship the manifest Sakti during Navaratri. Sakti is the manifested energy of God Siva and inseparable from Him, the feminine half of divinity. Without Siva, the active and potent Sakti has no existence. Without Sakti, Siva remains transcendentsilent and unmanifest. Siva and Sakti are one in mystical alliance. At Navaratrl we worship Parasakti in three aspects. Just as Brahma, Vishnu and Rudra are aspects of our one God, so are Sarasvati, Lakshmi and Durga aspects of God Siva. The first three days are devoted to Durga, and prayers offered to Her invoking strength, health and eradication of impurities. The second three days we worship Lakshmi and offer prayers for wealth, beauty and peace. The last three days are devoted to Sarasvati, and devotees petition for the refinements of art,culture and learning. The tenth day is known as Vijaya Dasami, a day of rejoicing in the triumphs of righteousness and truth. This final day is most auspicious for beginning any new enterprise or field of learning.

What is ***Skanda Shasti?*** Skanda Shasti is a temple festival honoring Lord Skanda's victory over Surapadman, the conquest of good over evil.

Shasti means "six", and Skanda Shasti occurs the first six days following the new moon Aipasi - October/November. Joining in the Festivals processions and pujas at His temples, we observe each of the six days with worship and prayers to Lord Muruga as Skanda, the Divine Warrior, invoking His protection and grace. Skanda fought the demon Surapadman for six days, and on the evening of the sixth day killed him. Thus, the festival ends in a crescendo of activity on the sixth day, a victory celebration of light over darkness, good triumphing over evil. Often we can watch mock battles fought between large figures of Skanda and Surapadman which end in setting fire to the Asura. On Skanda Shasti we intensify our meditative sadhana and seek Lord Muruga's blessings in removing selfishness, pride and vanity from our life.

What is ***Sivalaya Deepam?*** Sivalaya Deepam is a joyous one -day festival on which we worship God Siva as the Divine Light self-effulgent and unknowably vast.

Sivalaya Deepam, also called Kartikai Deepam, falls on the full moonlight of Kartikai – November/December. We honor God Siva's appearance as an infinite Lingam of light which Brahma and Vishnu could not fathom. When sun sets, we light many candles and lamps, setting them in window sills and every room of the house, then observe social Siva puja, japa is and bhajan.

What is ***Vinayaga Viratam?*** Vinayaga Viratam is a 21 - day festival, honoring Lord Ganesha.

Vinayaga Viratam begins on the full moon day in the month of Kartikai-November/ December. During these days Vinayaga Purana or stories are recited in the temples and special pujas are conducted at every Ganesha temple. Many conducted at every Ganesha temple. Many devotees observe the vow-virata means 'vow' – of attending daily puja at a Ganesha temple and taking only one meal a day, and that in the evening.

# KUMBHABHISHEKAM

*|-M.Arunachalam*

The term Kumbha-abhishekam simply means anointing the Lord in the temple (abhisheka) with the mantra water from the kumbha (pot). The saying is that Siva is fond of abhisheka and so Siva and His temples are given the abhisheka.

The Sivalinga or other deity installed in the sanctum is just a piece of stone newly carved and installed. The Installation is not mere placing of the image in position. Vedic mantras are chanted, homas are performed a number of times – six, four or two in a yagasala and kunda of appropriate size and shape, in front of the requisite number of pots of water, entwined outwardly with a piece of thread and containing scented water covered by mango leaves at the centre of which a coconut is placed. The water in the pots is considered to have acquired great potency through the yagas, and the mantras chanted. At the end of the number of occasions of yagasala puja, the pot is carried by the Sivacharyas reverently around the temple corridors (prakaras) and then ceremonially poured over the variant or tower over the censer on the cupola. This pouring of water is the kumbha-abhishekam. The potency of the deity is thus sought to be transferred from the mantra water in the kumbha to the vimana kalasa (or the deity inside the sanctum) in this manner. This is consecration. From then onward, what was the sculptured stone comes to divine lie as a deity and daily pujas began to be performed for it and the whole becomes thereafter, a consecrated temple.

The Kumbhabhisheka is a very rare event. Because of the preparation and materials involved, it has become very costly.

Although a Kumbhabhisheka is prescribed once in twelve years, sometimes it takes quite a longer time,even sixty years. Hence participating in one such and having a darshan is said to absolve man of all sins and to give him salvation.

*To body is as the temple, the soul is known as linga.*
*Between the two, there is no interval......*
*Like a torchbearer the soul (through its many incarnations) holds itself in readiness on to very edges of the realms of triple bondage. Then, on Siva's command, and an instant, at traverses all the three worlds.*

***-SUKHSHMA & PARAKHYA AGAMAS***

